# ஸ்ரீ அரவிந்தர்

பி. கோதண்டராமன்

சக்தி காரியாலயம்
சென்னை :: மதுரை

# பதிப்புரை

தமிழ்ப் பெருமக்கள் இந்நூலின் முதல் இரண்டு பதிப்புக்களுக்கு அளித்த ஆதரவின் பயனாக, இப்போது இந்த மூன்றாம் பதிப்பு வெளியிட நேர்ந்ததைப் பற்றி மகிழுகிறோம்.

இப்பதிப்பில் ஸ்ரீ அரவிந்தரின் வாழ்க்கையைப் பற்றிய பல புதிய விஷயங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. ஸ்ரீ அரவிந்தரின் யோகத்தத்துவத்தைப் பற்றிய அத்தியாயம் அடியோடு மாற்றியும் விரிவாகவும் எழுதப்பட்டுள்ளது.

இங்ஙனம் விரிவாக்கப்பட்ட இப்பதிப்பையும் தமிழ்ப் பெருமக்கள் ஆதரிப்பார்களென நம்புகிறோம்.

சக்தி காரியாலயத்தார்.

# பொருளடக்கம்

# ஸ்ரீ அரவிந்தர்

## க. பிறப்பு, மரபு, இளமை

### முன்னுரை

பாரத நாட்டின் பண்டைப் பெருமைகளைக் குறித்துப் பிரலாபிக்கும் பலர், இறைவனது அருள் பெற்று, நான் மறை, கலைஞானங்களைச் சிருட்டித்து வளர்த்த இருடிகள் கிருதயுகத்து அற்புதங்கள் போலவும், துயரும் துன்பமும் நிறைந்த இக் கலியுகத்தில் சீர்கெட்ட மாந்தர்களிடையே அத்தகையோர் மீண்டும் உதிப்பது அரிதுபோலவும் பேசுகின்றனர். இது சிறிதும் பொருந்தாது. நமது பூமி சநாதன பூமியெனவும், நமது தருமம் சநாதன தருமமெனவும் பண்டுதொட்டு விளங்கிவருகின்றன. அவைகளின் வன்மையும் பெருமையும் ஓரோர் சமயம் மழுங்கினும், அவை என்றும் அடியோடு அழிந்ததே யில்லை. வீரனும் முனிவனும் பக்தனும் இப் புண்ணிய பூமியின்கண் காலசக்கரம் சுழலுந் தோறும் மலர்ந்து வெளித்தோன்றி யிருக்கின்றனர். பராசக்தியின் வடிவமாகிய பாரதத்தாய் தமது திருவுள்ளத்தை இந் நாட்டின்கண் நிறைவேற்றிவைக்கவும், மன்பதையை மேம்படுத்தி இறைவனடி சேர்க்கவும், அவ்வப்போது அவ்வக்காலத்திற் கேற்ப மகா புருடர்களை ஈன்றெடுத்து, அவர்களின் மூலமாகப் பல்வேறு துறைகளில் தம் பல்வேறு கருத்துக்களை நிறைவேற்றி வந்திருக்கிறாள். வேதம், உபநிடதங்கள் கண்ட இருடிகள், கண்ணன், புத்தர், சங்கரர், இராமாநுஜர், சைதன்னியர், ராமகிருஷ்ணர், விவேகானந்தர், இன்னும் ஆங்காங்கு உதித்த கபீர், நானக், துளசிதாஸ், துகாராம் போன்ற பரம பக்தர்கள், தென்னாட்டுத் தவப் புதல்வர்களான நாயன்மார்கள், ஆழ்வார்கள், ராமலிங்கர், முதலியோரனைவரும் இவ்வண்ணம் அவள் நமக்

கருளிய மகா புருடர்களே. இம் மகா புருடர்களின் பரம்பரையில் இன்னும் பல இருடிகள் உதித்தும் உதித்துக்கொண்டு மிருக்கின்றனர். இவர்களுள்

"யோகமும் தவமும் எங்கும்; ஊசலும் மறுகும் எங்கும்;
போகமும் பொலிவும் எங்கும்; புண்ணிய முனிவர் எங்கும்,"

எனச் சேக்கிழார் சிறப்பித்துப் பாடிய தீந்தமிழ் நாட்டில் புதுவை மாநகரில் இன்று எழுந்தருளியிருக்கும் பார் அணியும் பெரியாராகிய பகவான் ஸ்ரீ அரவிந்தர் ஒரு தனிச் சிறப்புடன் விளங்கி வருகின்றார்.

சில வருடங்களுக்கு முன், பாரத மக்களுக்கு இறைவன் ஒரு செய்தியைத் தெரிவிக்கவேண்டியதா யிருக்கையில், அச்செய்தியின் சொற்களை உருப்படுத்த ஸ்ரீ அரவிந்தரின் நாவை அவர் தேர்ந்தெடுத்தார். கடவுளது கடாட்சத்தினால் பாரதத்தாயின் தரிசனத்தைப் பெற்ற ஸ்ரீ அரவிந்தர், தாம் கண்ட அருட்காட்சியையும் தாம் கேட்ட அருண்மொழியையும் தமக்குள்ள வலிமையையெல்லாம் கொண்டு மக்களுக்கறிவித்தார். அருள் நிலையில் அவர் பகர்ந்த மொழிகள், அந்த க்ஷணமே மக்களின் உள்ளத்திலுள் கிடந்த இயல்புகளைக் கிளர்த்தி, அவர்கள் வீறுகொண்டெழுந்து அடிமைத் தளைகளை அறுத்தெறியுமாறு செய்தன.

பிரகிருதி அன்னையின் பரிணமத்தில் மக்கட்குலம் இதுவரையில் அடைந்திராததொரு புதிய ஞானத்தையும் புதிய சக்தியையும் பெற்று, ஒரு புதிய இனமாக மாறி, இப் புவியிலேயே சம்பூரண அமரவாழ்வை யெய்தவேண்டிய காலம் நெருங்கியுள்ள இச் சமயத்தில், பகவான் தமது இவ்வேலைக்கும் ஸ்ரீ அரவிந்தரைத் தேர்ந்தெடுத்து அவரை இதுகாறும் பயிற்சி செய்து வந்திருக்கிறார். கீழ் நாட்டுக் கலைஞானங்களும் மேதாவிலாசமும் மேலை நாட்டு அறிவியல் ஆராய்ச்சிகளும் தம்மிடத்தில்ஒருங்கே சம்பூரணமாகக் கலக்கப்பெற்று, இன்று ஆன்ம நிறைவும் பூரண வாழ்வும் அடைந்துள்ள ஸ்ரீ அரவிந்தர், இறைவன் பணியை இனிது நிறைவேற்றும் பொருட்டு தமது அனுபவ நிறைவில் 'விஞ்ஞானயோகம்' என்னும் புதியதொரு யோக

முறையைக் கண்டு, அம் முறையின்படி ஒரு திருக்கூட்டத்தைப் பயிற்சிசெய்ய ஆசிரம மொன்றையும் நிறுவியிருக்கிறார்.

இத்தகைய மகானது வாழ்க்கை வரலாற்றையும் அவரது யோக முறையையும் தமிழ் மக்களுக்குச் சுருக்கமாக எடுத்துரைக்கவே நாம் ஈண்டு முயன்றிருக்கிறோம்.

## பிறப்பும் மரபும்

ஸ்ரீ அரவிந்தர், பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவதரித்த 36 ஆண்டுகளுக்குப் பின், அதாவது, 1872-ம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 15-ந் தேதியன்று காலை, சுமார் 5-மணிக்கு, கல்கத்தாவில், டாக்டர் கிருஷ்ண தன கோஷுக்கும், "தேசிய இயக்கத்தின் மூதாதை" எனப் பெயர் பெற்ற ராஜ நாராயண போஸின் மூத்த மகளான சுவர்ணலதா தேவிக்கும் மூன்றாவது குமாரராக அவதரித்தார்.*

கிருஷ்ண தனகோஷ் 1845-ல் பிறந்தார். அவருடைய தந்தையாரின் பெயர் காளிபிரசாத கோஷ். அவர் முன்னூறு ரூபாய் சம்பளத்தில் சர்க்கார் உத்தியோகத்தி

* ஸ்ரீ அரவிந்தரது ஜாதகம். ஜனனம்—ஆங்கீரஸ வருஷம், ஆடிமாதம் கடைசி தேதி—அதாவது ஆவணி மாதம் முதல் தேதி சூரியோதயத்திற்கு ஒரு மணி முன்பாக—வியாழக்கிழமை, மூல நட்சத்திரம், கர்க்கடக லக்னம்

| | | | |
|---|---|---|---|
| | | ராகு | |
| | | | ல குரு செவ்வாய் |
| | ராசி சக்கரம் | | சூரியன் புதன் சுக்கிரன் |
| சந்திரன் சனி | கேது | | |

விருந்தார். தாயாரின் பெயர் கைலாச காமினி தேவி. அவர்கள் ஹூக்ளி ஜில்லாவிலுள்ள குன்னகர் என்னும் தங்கள் பூர்வீக ஊரில் வாழ்ந்துவந்தனர். கிருஷ்ண தன கோஷ் தம் பத்தொன்பதாம் பிராயத்தில் ராஜநாராயண போஸின் மகளை மணந்தார். அச்சமயம் சுவர்ணலதா தேவி பன்னிரண்டு வயதுடைய எழில்மிகுந்த மங்கையாயிருந்தார். மணஞ்செய்து கொண்ட சிறிதுகாலத்திற்கெல்லாம், கிருஷ்ண தனகோஷ் ராம்பூரில் சிவில் சர்ஜனாக வேலை பார்க்கலானார். 1869-ல் வைத்தியத்தில் உயர்தரக் கல்வி பெறும் பொருட்டுப் பிரிட்டிஷ் நாட்டுக்குப் பிரயாணமானார். அங்கே, அபர்டீன் பல்கலைக் கழகத்தில் வைத்தியப் பரிக்ஷையில் தேறி எம். டி. பட்டம்பெற்று தாய்நாடு திரும்பினார். பின்னர் இந்திய வைத்திய சர்விஸில் சேர்ந்து, பாகல்பூர், ரங்கபூர், குல்னு முதலிய ஜில்லாக்களில் பிரபல வைத்தியராக விளங்கி, ஏராளமாகப் பொருளீட்டினார். அக்காலத்தில் ஆங்கிலக் கல்வி பயின்ற இளவங்கர்களைப் போலவே, அவரும் ஐரோப்பிய நடையுடை பாவனை, கலாசாரம், நாகரிகங்களை மேற்கொண்டு ஒழுகினார். ஆயினும், அவர் இதய அந்தரங்கத்தில் உண்மையான இந்துவாயிருந்து சமூகத்திற்குச் செய்யவேண்டிய கடமைகளை யெல்லாம் தவறாது ஆற்றிவந்தார். அல்லற்படும் ஏழைகள்பால் இரங்கித் தமது சொந்த குடும்பத் தேவைகளையும் நலன்களையும் கூடக் கிஞ்சித்தும் கருதாது, வள்ளலைப்போல அளவின்றித் தமது வருவாயை வழங்கி வந்தார். அவரது நுண்ணறிவும், சரச குணமும், காருண்யமுமே எல்லோரையும் வசப்படுத்தின.

ஸ்ரீ அரவிந்தரின் தாய்வழிப் பாட்டனரான ராஜநாராயண போஸ் 1826-ல் பிறந்தவர். அக்காலத்தில் ஐரோப்பிய நாகரிகமும் கலாசாரமும் வங்கத்தின்மீது படையெடுத்துப் பரவி, படித்த மக்களை மயக்கி, இந்து தர்மமும் கலாசாரங்களும் சீரழியுமாறுச் செய்துவந்தன. ராஜநாராயண போஸும் தமது இளமைப் பருவத்தில் ஐரோப்பிய நாகரிக ஆசாரங்களில் ஊறியிருந்தார். தம் மனைவியார் மரித்த பின்னரே வேதாந்தத்தில் நம்பிக்கை கொள்ள வாரம்பித்தார். பின், மஹரிஷி தேவேந்திரநாத தாகூருடைய நட்பேற்பட்டு அவரது தலைமையில்

வளர்ந்த ஆதி பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தார். ரிஷிகளின் கிரகத்தில் கூடிய கருத்துக்களில் திளைத்தும், வேதம் உபநிடதம் போன்ற விஷயங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்தார். இந்து நாகரிக, ஆத்மாநுபவங்களின் பெருமையையுணர்ந்து, தமது நாவன்மையாலும், எழுத்தின் மூலமாகவும், பண்டைய இந்திய கலாசாரங்களையும் தேசிய கௌரவத்தையும் தாங்கி நின்றார். தேசிய தத்துவத்தின் பாதுகாப்புக்காகச் சங்கங்கள் நிறுவினார். வங்க வாலிபர்களின் உடல்நலத்திற்கான முறைகளை வகுத்தார். பலவிதத் தளர்ந்திருந்த மக்களின் இடையே [illegible] நாட்டுப்பற்றைத் தூண்டிவிட்டார். அவர் வெகு பழமையைக் கொண்டாடி புதுமையைத் தழுவியும் [illegible] யாக இராமல், சமூகத்தின் முடநம்பிக்கைகளை, பழக்கவழக்கங்களைக் கண்டித்துத் திருத்த முயன்றார். ராஜா ராம் மோகன்ராயைப் போலவே, வேதாந்த, உபநிஷத, ஐரோப்பிய கலாசாரங்களைத் தொகுத்து, அவைகளை ஒன்றோடொன்று இணைத்து இந்தியமயமாக்கினார். அவர் அக்காலம் செய்துவந்த பிரசாரமே, பிற்காலத்து சமூக சீர்திருத்தங்களுக்கும், ஆராய்ச்சிப் பற்றுக்கும், தேசிய உணர்ச்சிக்கும் பெரிதும் காரணமாயிருந்தது. “புதிய யவனின் நம்பிக்கை” என அவர் எழுதிய நூல் வங்க மக்களிடையே ஒரு புதிய ஆதர்சத்தையும் நம்பிக்கையையும் எழுப்பியது. அவர் இவ்வண்ணம் விதைத்த விதையே பின்னர் சுதேசி இயக்கமாகப் பரிணமித்து தழைத்தது.

ஸ்ரீ அரவிந்தரிடம் அவருடைய தகப்பனாரின் நுண்ணறிவும், சரச குணமும், பிறர் துயரங்களைச் சகிக்கமாட்டாக் கருணையுள்ளமும், தன்னலமற்ற தன்மையும், பாட்டனாரின் ஆத்ம ஞானமும், கடவுள் பக்தியும், எழுத்து வல்லமையும், நாட்டுப்பற்றும், நன்கு பொருந்தி இளமையிலிருந்தே பொலியலாயின.

கிருஷ்ண தனகோஷ் தம்முடைய குழந்தைகளுக்குச் சிறுவயதிலிருந்தே கலப்பற்ற ஆங்கிலக் கல்வி யளிக்க விரும்பினார். அதன்படியே, அவர் ஸ்ரீ அரவிந்தருக்கு ஐந்து வயதானபோதே டார்ஜிலிங்கிலுள்ள செயிண்ட்பால் கல்லூரிக்கு அனுப்பினார். அங்குள்ள உபாத்தியாயர்களை

வரும் ஸ்ரீ அரவிந்தரது தீட்சண்ய புத்தியைக் கண்டுப் பெரிதும் வியந்தனர். அங்கே ஸ்ரீ அரவிந்தர் இரண்டு ஆண்டுகள் கல்வி பயின்றார்.

## சீமையில் கல்வி பயிலல்

ஸ்ரீ அரவிந்தருக்கு ஏழு வயது வந்தபோது (1879) தாய் தந்தையர் அவரையும் அவருடைய இரு சகோதரர்களான வினய பூஷணன், மனமோகனன் என்பவர்களையும் படிப்புக்காக இங்கிலாந்திற்கு அழைத்துச் சென்றனர். அங்கே, மான்செஸ்டர் நகரில், தந்தையாரின் நண்பரான அக்ராயிட் என்பவருக்குச் சொந்தமானவரும் பாதிரியாருமான டிராயிட் என்பாரின் குடும்பத்தில் குழந்தைகளை விட்டும், அவர்கள் நிஜநாட்டு அல்லது இந்திய கலாசாரங்களின் தொடர்பு கொஞ்சமுமில்லாத கலப்பற்ற மேனாட்டுக் கல்வியையே பயிலவேண்டுமெனத் திட்டஞ்செய்துவிட்டும் நாடு திரும்பினர். அவர்கள் இங்கிலாந்திலிருந்தபோது தான் சுவர்ணலதா தேவி லண்டன் நகரில் பரீந்திர குமாரரை ஈன்றார்.

ஸ்ரீ அரவிந்தர் மான்செஸ்டரிலுள்ள இலக்கணப் பள்ளிக்கூடத்தில் ஐந்து வருடங்கள் (1880-1884) கல்வி பயின்றார். 1885-ல் லண்டன் நகரிலுள்ள செயிண்டு பால் கல்லூரியில் சேர்ந்தார். இக்கல்லூரியின் உபாத்தியாயர்கள் அவரது சரச குணங்களையும் புத்தி கூர்மையையும் கண்டு பெரிதும் மகிழ்ந்தனர். பல வருஷங்களுக்குப் பின் அவர் அலிபூர் சதிவழக்கில் குற்றஞ் சாட்டப்பட்டதைக் கேள்வியுற்ற இக்கல்லூரியின் தலைமை உபாத்தியாயர், சென்ற இருபத்தைந்து வருஷ காலமாகத் தம் மூலமாகப் பயின்ற அதிக மேதை படைத்த பிள்ளைகளுள் ஸ்ரீ அரவிந்தரே முதன்மை பெற்றிருந்தாரெனக் கூறினாராம்.

இக்காலத்தில்தான், தந்தையாரான கிருஷ்ண தன கோஷ் தம்மை நாடிவந்த ஏழை மக்களின் துயரைத் தீர்ப்பதன் பொருட்டு வருமானத்தின் பெரும் பங்கை வரையாது கொடுத்துவந்தார். இதன் காரணமாகவே சீமையில் கல்வி பயின்று வந்த தம் சொந்த குழந்தைகளுக்குப் போதிய பணம் அனுப்ப முடியாமற்போயிற்று. மூவருக்கு

மாக மாதமொன்றுக்கு 360 பவுன் அனுப்பிவந்தவர் ஒவ்வொரு சமயம் 100 பவுனே அனுப்ப நேர்ந்தது. இதனால் ஸ்ரீ அரவிந்தரும் அவருடைய தமயன்மார்களும் பெரிதும் கஷ்டப்பட்டுப் பல தடவைகள் கடன் வாங்கவேண்டியிருந்தது.

1890-ல் ஸ்ரீ அரவிந்தர் தமது 18-ம் வயதில் செயின்டு பால் கல்லூரியினின்று விலகி, நாற்பது பவுன் பெறுமானமுள்ள தொல்லிலக்கிய உயர்தர மாணவ வேதனத்துடன் கேம்பிரிட்ஜில் கிங்ஸ் கலாசாலையில் சேர்ந்தார். அவர் சேரும் போது நடந்த பிரவேசப் பரிட்சையில் கல்வி அதிகாரிகள் அவரது மேதையையும் நுண்ணறிவையும் கண்டு பெரிதும் ஆச்சரியமடைந்தனர். ஸ்ரீ அரவிந்தர் தந்தையாருக்கு எழுதிய கடிதமொன்றில் இவ்விஷயத்தைப்பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்.

நேற்று மாலை பல்கலைக்கழக அதிகாரிகளில் ஒருவர் தமது இருப்பிடத்தில் என்னைத் தேநீர் அருந்த அழைத்திருந்தார். அச்சமயம் கிங்ஸ் காலேஜில் மிகவும் கீர்த்தி பெற்ற ஆசிரியரான ஆஸ்கார் பிரௌனிங் அங்கே வந்திருந்தார். அவருடன் நான் பேச நேர்ந்தது. அவர் என் அறிவுத் திறனை வியந்து பேசி இவ்விதம் கூறினார்: 'சென்ற 13 ஆண்டுகளாக நான் மாணவர் உதவிப் பணப் பரிட்சையில் கலந்து கொள்வோரின் விடைப் பத்திரங்களைச் சோதித்து வருகிறேன். இத்தனை காலமாக, உன் விடைப் பத்திரங்களைப் போன்ற அருமையான பத்திரங்களை நான் பார்த்ததே கிடையாது. மில்டனுக்கும் ஷேக்ஸ்பியருக்கும் உள்ள ஒப்புமையைப் பற்றி நீ எழுதியிருந்த கட்டுரை அற்புதமாயிருந்தது.'

இக்கடிதத்தைப் பெற்ற கிருஷ்ண தனகோஷ் அளவிலா மகிழ்ச்சியடைந்தார். அவர் 1890, டிசம்பர் 2-ந் தேதி தம் மைத்துனரான ஜோகேந்திரநாதருக்கு எழுதிய கடிதத்தில் ஸ்ரீ அரவிந்தரின் கடிதத்தைக் குறிப்பிட்டுப் பாரத நாட்டின் மணி விளக்காகப் பிரகாசிக்கப்போகும் மைந்தனைப்பாராட்டிப் பெருமையடைந்தார். அதே வருஷத்தில் ஸ்ரீ அரவிந்தர் இந்திய சிவில் சர்விஸ் போட்டிப் பரிட்சையில் சேர்ந்து, தேறியமாணவர்களுள் நான்காவது ஸ்தானமும் கிரேக்க லத்தீன் மொழிகளில் அதுவரையில் எவரும் பெற்றிராத அதிக எண்களும் பெற்றார். இச்சந்

தர்ப்பத்தில் ஒரு அதிசயமான விஷயத்தைக் குறிப்பிட வேண்டியதாயிருக்கிறது. பீச்ரோப்ட் என்னும் ஆங்கில வாலிபர் ஸ்ரீ அரவிந்தருடன் போட்டிப் பரிட்சையில் கலந்திருந்தார். ஸ்ரீ அரவிந்தர் கிரேக்க லத்தீன் பாஷைகளில் முதன்மை பெற, அவர் இரண்டாவதாகத் தேறினார். பதினெட்டு வருஷங்களுக்குப் பின் இதே ஆங்கிலேயர் அலிபூரில் செஷன்ஸ் ஜட்ஜாக மேடைமீதிருந்து விசாரணை நடத்துகையில், ஸ்ரீ அரவிந்தர் சதிவழக்கில் குற்றஞ்சாட்டப் பட்டவர்களுடன் கைதியின் கூண்டிலிருக்க நேர்ந்தது.

1892-ல் ஸ்ரீ அரவிந்தர் கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலையின் டிரைபோ ஆனர்ஸ் பரிட்சையில் முதல்தரமாகத் தேறினார். அதே வருஷத்தில் அவரது சிவில் சர்விஸ் பரிசோதனைக் காலமும் முடிவு பெற்றது. ஆனால், அவர் குதிரைச்சவாரிப் பரிட்சையில் கலந்து கொள்ளாமற் போகவே, சிவில் சர்விஸ் உத்தியோகத்திற்கு அவரைப் பொறுக்கி யெடுக்க வில்லை.

குதிரைச் சவாரியில் ஸ்ரீ அரவிந்தர் கலந்து கொள்ளா ததைப்பற்றிப் பல ஊகங்களிருக்கின்றன. சிலர், ஏதோ ஒரு அமானுஷ்ய சக்தி அவரைத் தடுத்ததென்றும், அதனால் அவரது வாழ்க்கையின் போக்கே மாறிவிட்டதென்றும் கூறுகின்றனர். இது ஸ்ரீ அரவிந்தரின் இயற்கைக் குணங்களை அறியாதவரின் கூற்றாகும். ஸ்ரீ அரவிந்தர் தாமாகவேதான் குதிரைச் சவாரிக்குச் செல்லாதிருந்து விட்டார். சிவில் சர்விஸுக்குள் எடுத்துக் கொள்ளப் படாவிடினும், சாதாரணமாக அந்த சர்விஸ் அளிக்கக் கூடிய உலக நலன்களையெல்லாம் அவர் பின்னர் சேர்ந்த பரோடா சமஸ்தான சர்விஸ் அளிக்கக்கூடியதாக இருந்தது. ஆயினும், ஸ்ரீ அரவிந்தர் பதவியையும் செல்வத்தையும் உலக சுகங்களையும் பொருட்படுத்தவில்லை என்பது அவரது பிற்கால வாழ்க்கையிலிருந்து நன்கு புலனாகிறது.

இவ்விதமாக, ஸ்ரீ அரவிந்தர் இங்கிலாந்தில் இருபது வயது வரையில் பெற்ற கல்வியானது அவருக்கு ஐரோப்பியப் புராதன மத்தியகால, தற்காலக் கலைகளில் ஒரு விரிவான பயிற்சியை அளித்தது. அவருக்கு 18 அல்லது 19 வயது வரையில் வங்க பாஷை சிறிதளவும் தெரியாதிருக்

தது. பின்னர் தான், சிவில் சர்விஸ் பரிட்சையில் தேறுவதற்கு ஆங்கில மாணவன் கொஞ்சம் இந்துஸ்தானியையோ சம்ஸ்கிருதத்தையோ கற்றுக்கொள்ளுவதைப்போல, அவரும் சிறிதளவு தாய்மொழியாகிய வங்கத்தைக் கற்றார். ஆனால், சிறு பிராயத்தில் மான்செஸ்டரில் இருந்தபோதே பிரஞ்சுமொழி கற்றார். கதே, (Goethe) தாந்தே, (Dante) என்னும் மகாகவிகளை மூலமொழிகளிலேயே ஓதுவதற்குப் போதுமான அளவு தாமே ஜர்மானிய, இத்தாலிய பாஷைகளையும் பயின்றார். கிரேக்க லத்தீன் மொழிகளிலும் மகா புலமை பெற்று விளங்கினார்.

## பாலியக் கவிதைகள்

ஸ்ரீ அரவிந்தர் தமது பதினெட்டாம் வயதிலேயே ஆங்கிலத்தில் கவிதை எழுதத் தொடங்கினார். அவரது கவிதைகளில் நாம் காணும் காவிய, கற்பனை, படிகம் போன்ற தெளிவு, அமைப்பழகு, முதலியவெல்லாம் கிரேக்கக் கலைவாணியின் மரபைப் புலப்படுத்துகின்றன. செய்யுள் நடை உள்ளத்தினின்றும் ஊற்றெடுத்துப் பாய்வதைப்போல அவ்வளவு இயல்பாகவும் சரளமாகவும் சொல்வளமுள்ளதாகவும் இருக்கின்றது. சிற்சில பாடல்களில் உள்ளத்தினின்றும் வெளிவர முயலும் மந்திர ஒலியும் கேட்கின்றது. ஸ்ரீ அரவிந்தருக்குக் கவியின் லட்சணங்கள் யாவும் ஏற்கெனவே அமைந்திருந்ததை இங்கு காண்கிறோம். காலக்கிரமத்தில் அவர் ஒரு அபூர்வமான கவியாக விளங்குவார் என்று திடமாகச் சொல்லுவதற்குவேண்டிய பல அறிகுறிகளும் இப் பாடல்களிலே காணப்படுகின்றன. "கிளேகஸ்—இதோன்," "பெண்களின் ரோஜா" "கடலோரத்தில் ஒரு இரவு", "நீலின் கல்லறை" "எஸ்தெல்", என்னும் பாடல்கள் குறிப்பிடத்தக்கவை. பிரபல ஆங்கிலக் கலைஞரான ஆஸ்கார் ஒயில்டு ஸ்ரீ அரவிந்தரைப் பற்றி பால்மால் கஜட்டில் எழுதிய கட்டுரையொன்றில் அவருடைய கவிதைகளை மெச்சி, அவை ஆங்கில இலக்கியத்தில் இடம் பெறுமெனக் கூறினார்.

## சீமையில் அவரது வாழ்க்கை

ஐரோப்பியத் தொல்லிலக்கியங்களில் ஸ்ரீ அரவிந்தர் பெற்ற பாண்டித்தியமானது, மனத்தையும் உள்ளத்தை

யும் விசாலப்படுத்தி, உண்மையை ஆராய்வதற்குத் தேவை யான யூக அறிவையும், நிறைவையும், நிதானத்தையும் அவருக்களித்தது. சற்றேறக்குறைய பதினான்கு வருடங் களுக்குள் அவர் மேனாட்டுக் கல்வி கேள்விகளின் கரை யைக் கண்டதுமின்றி மேனாட்டு நாகரிகத்தின் உண்மை யான அம்சங்களையும் அடிப்படையான தத்துவங்களையும் ஆராய்ந்தறிந்தார். இங்கிலாந்தில் நடையுடை பாவனை களில் ஆங்கிலேயரைப் போலவே வாழ்ந்த போதிலும், மேனாட்டுப் புறவாழ்க்கையின் ஆடம்பரமும் மினுமினுப் பும் அவரது உள்ளத்தைக் கொஞ்சமும் தொடவில்லை. நமது புராதன ஞானத்தை ஆதாரமாகக்கொண்ட பிரம்ம தேஜஸ் அல்லது ஆத்ம சக்தியின் மீதுள்ள திட நம்பிக்கை யானது இயற்கையாகவே அவரிடம் வேரூன்றியிருந்தது. அக்காலத்தில் அவர் இந்தியத் தொல்லிலக்கியங்கள், வேதம், உபநிடதம், முதலியவைகளின் ஆங்கில மொழி பெயர்ப்புக்களை ஆராய நேரிட்டபோது இந்நம்பிக்கை மேன்மேலும் உறுதியாயிற்று. இவ்வாத்ம சக்தியை அனு பவத்தில் கண்டு தாய்நாட்டின் விடுதலைக்காகப் பணி செய்யத் தம்மைப் பரமன் பொறுக்கி யெடுத்துள்ளான் என்றும் எண்ணம் அவருக்குச் சிறு வயதிலிருந்தே இருந்து வந்ததென்பதைப் பின்னர் தமது மனைவியாருக்கு எழுதிய கடிதமொன்றில் தெரிவித்துள்ளார்.

## சுதந்திர உணர்ச்சி

ஸ்ரீ அரவிந்தர் இங்கிலாந்தில் இருந்தகாலத்தில், அவ ரது உள்ளத்தில் சுதந்திர உணர்ச்சியைத் தூண்டி நாட் டன்பைப் பெருக்கிய நிகழ்ச்சிகள் பல நடந்தன. ஆங்கி லேயரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலையடையப் போரா டின ஐரிஷ் மக்களின் சிறந்த தலைவரான பார்னல் அக் காலத்தில் ஐரிஷ் கட்சியின் தலைவராகப் பாராளுமன்றத் தில் அமர்ந்திருந்தார். அரசியல் கிளர்ச்சியின் காரணமாக அவர் 1881-ல் கைது செய்யப்பட்டு ஆறு மாதம் சிறையி லடைக்கப்பட்டார். பின்னர் விடுதலையடைந்து, பல சேவைகள் புரிந்து, 1891-ல் மாண்டார். ஐரிஷ் மக்களின் விடுதலைப் போராட்டத்தை நன்கு நடத்திவந்த பார்ன லின் சாகசங்களைக் கவனித்துவந்த ஸ்ரீ அரவிந்தர், அவர் மீது இரங்கற்பா வொன்றும் பாடினார்.

ஸ்ரீ அரவிந்தரைவிட இரண்டு வயது மூத்தவரான சித்தரஞ்சனதாசர், ஐ. சி. எஸ். பரிட்சையின் பொருட்டு 1890-91-ல் லண்டனில் இருந்தார். அதுசமயம் பாராளு மன்றத்தில் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற் காக தாதாபாய் நவுரோஜி முயன்றுவந்தார். அவரைக் கறுப்புச் சாதியினர் எனப் பழித்தும், இந்தியாவை இழி வாகக் கூறியும் வந்த சாலிஸ்பரி பிரபு, ஜேம்ஸ் மக்லீன் ஆகியோரைத் தாக்கி ஸ்ரீதாசர் லண்டனில் பல சொற் பொழிவுகள் ஆற்றினர். அவர் கேம்பிரிட்ஜுக்கு வந் திருந்தபோது, ஸ்ரீ அரவிந்தர் அவரைக் கண்டு அவரது நட்பைப் பெற்றார்.

அக்காலத்தில், ஸ்ரீ அரவிந்தர், தாமும், கேம்பிரிட்ஜில் இந்தியரின் சங்கமாகிய மஜ்ஜிலிஸில் இந்திய அரசியலைப் பற்றி காரசாரமாகப் பேசினரென்றும், நவுரோஜியின் தேர்தல் பிரசாரத்தில் கலந்துகொண்டு தம்மாலியன்றதைச் செய்தாரென்றும், பொதுவாக இந்தியாவிலும், சிறப்பாக வங்கநாட்டிலும் நடந்துவந்த இயக்கங்களையும், பங்கிம் சந்திரரின் புத்தகங்களிக்கும் இலக்கிய சேவையையும், 1885 தொடங்கி ஆண்டுதோறும் கூடி இந்திய விஷயங் களைப்பற்றித் தீர்மானங்கள் நிறைவேற்றிக் கலைந்த இந்திய தேசியக் காங்கிரஸின் போக்கையும் கூர்ந்து கவனித்து வந்தாரென்றும் தெரிகிறது.

## தாய்நாடு திரும்புதல்

ஸ்ரீ அரவிந்தர் தமது கல்வியை முடித்துக்கொண்ட சமயம், கல்வியும் அறிவும் படைத்த இள கெயிக்வார் மகாராஜா இங்கிலாந்திலிருந்தார். இந்திய தேசிய காங் கிரஸ் மகாசபையை அதுசமயம் பெரிதும் ஆதரித்துவந்த சர். ஹென்றி காட்டனின் புத்திரரான ஜேம்ஸ் காட்டன் ஸ்ரீ அரவிந்தரை மகாராஜாவுக்கு அறிமுகஞ்செய்துவைத் தார். ஸ்ரீ அரவிந்தரின் அறிவாற்றலையும் குணவிசேஷங் களையும் நன்கறிந்த மகாராஜா அவருக்குப் பரோடா சமஸ்தான சர்வீஸில் ஒரு உத்தியோகமளித்தார். 1893-ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் இருவருமாக இங்கிலாந்தை விட்டுப் பரோடாவுக்குப் பிரயாண மாயினர்.

ஸ்ரீ அரவிந்தர் பிரயாணம் செய்வதற்காக முதலில் ஏற்பாடாயிருந்த கப்பலில் அவர் தெய்வாதீனமாகப் பிரயாணம் செய்யவில்லை. அக்கப்பல் லிஸ்பன் கடற்கரைக்குக் கொஞ்ச மப்பால் மூழ்கியது. அக்கப்பலில் தமது மகனை எதிர்பார்த்துக்கொண்டிருந்த கிருஷ்ணதன கோஷ் கப்பலுக் கேற்பட்ட கதியையறிந்து மகன் கடலுக் கிரையானான் என்றெண்ணிய அதிர்ச்சியினால் மூர்ச்சை அடைந்தாராம். சில நாட்களுக்குப் பிறகு, ஸ்ரீ அரவிந்தர் இந்தியா வந்து சேரு முன்னரே, அவர் உயிர் துறந்தார்.

ஸ்ரீ அரவிந்தர் இங்கிலாந்தை விட்டுச்சென்ற சில மாதங்களுக்கெல்லாம், அவருடைய மூத்த தமையனாரான வினய பூஷணரும் இந்தியாவுக்குத் திரும்பி வந்து கூச்பீகார் சமஸ்தானத்தில் இளவரசனின் பிரத்யேக உபாத்தியாயராக வேலையில் அமர்ந்தார். இங்கிலாந்தில் ஆங்கிலத்தில் கவி புனைந்து பெயர் பெற்ற அவருடைய இளைய தமையனாரான மனமோகனரும் 1894, அக்டோபர் மாதம் இந்தியாவுக்குத் திரும்பி வந்து கல்கத்தா ராஜதானிக் கலாசாலையில் ஆங்கில ஆசிரியராக வேலை பார்க்கலானார்.*

* இந்த அத்தியாயத்தில் காணும் சில குறிப்புகள் திரு. கிரிஜாசங்கர் ராய் சௌதரி வங்க மாத சஞ்சிகை யொன்றில் தொடர்ச்சியாக எழுதிய கட்டுரைகளினின்று எடுக்கப்பட்டன.

## உ. நாட்டுப் பணிக்கு ஆயத்தமாதல்

ஸ்ரீ அரவிந்தர் பரோடாவுக்கு வந்தபோது அவருக்கு வயது இருபத்தொன்று. கொஞ்சகாலம் மகாராஜாவின் அந்தரங்க காரியதரிசியாக திவானி (வருமான இலாகா) யிலும், பிறகு சமஸ்தான கலாசாலையில் ஆங்கிலப் பேராசிரியராகவும், கடைசியாக, மாதம் ரூ. 750 சம்பளத்தில் கலாசாலையின் உப தலைவராகவும், ஆகமொத்தம் பதின்மூன்று ஆண்டுகள் (1893–1906) பரோடா சர்வீஸில் வேலை பார்த்தார். அவர் பரோடாவிலிருந்த காலம் அவரது வாழ்க்கையில் மிகவும் முக்கியமான பகுதியாகும்; ஏனெனில், தாம் பிறந்த பணிக்காக அவர் தம்மை மௌனமாகப் பயிற்சி செய்துகொண்டதும், பாரதநாட்டுக் கலைகளில் பூரண ஞானம் பெற்றதும், கவிதை சிருஷ்டித்ததும், எல்லாம் இவ்வருடங்களிலேதான்.

### ஆசிரியரும் மாணவர்களும்

ஸ்ரீ அரவிந்தர் கலாசாலை வேலையைப் பெரிதும் விரும்பினர். மாணவர்களும் அவரைக் கடவுள்போல் போற்றினர். அவருடைய சொற்பொழிவுகள் அவர்களது இள உள்ளத்தைக் கொள்ளைகொண்டு தேசாபிமானத்தைத் தூண்டின. அவரிடம் படித்த மாணவர்களிற் பலர், பின்னர் மராத்தியப் பொது வாழ்வில் தலைவர்களாக வந்தனர். சூரத் காங்கிரஸுக்குப் பின் (1908) அவர் பரோடா சென்றிருந்தபோது, மாணவர் அவரை வரவேற்கக் கூடாதென அதிகாரிகள் தடையுத்தரவு போட்டிருந்தும், அவர்கள் அவரைக் குதூகலத்துடன் வரவேற்று வண்டியிலிருந்து குதிரையை அவிழ்த்துத் தாங்களே இழுத்துச் சென்றனர்.

ஸ்ரீ அரவிந்தர் பொதுஜன அபிமானத்திற்கோ புகழ்ச்சிக்கோ ஆசைப்படவில்லை யாதலால் அவருக்குப் பரோடாவில் வெகு சில நண்பர்களே இருந்தனர். ஆயினும் பரோடாவிலுள்ள படித்த வகுப்பினர் அனைவரும் அவரை நன்கு மதித்து மரியாதை செய்தனர்.

## மகாராஜாவின் நன்மதிப்பு

கெயிக்வார் மகாராஜாவும் ஸ்ரீ அரவிந்தரிடம் மிகவும் மரியாதை வைத்திருந்தார். அவர் அவரைப் பலதடவைகள் கலந்தாலோசித்ததுண்டு. மன்னரிடம் ஸ்ரீ அரவிந்தருக்கு இருந்த செல்வாக்கில், மன்னரது புன்னகைக்கும் பதவிக்கும் பணத்திற்கும் ஆசைப்பட்டிருந்தாராயின், அவர் அவைகளை யெல்லாம் வெகு எளிதில் அடைந்திருப்பார் என்பதில் சற்றும் ஐயமில்லை. ஆயினும், ஸ்ரீ அரவிந்தர் அவைகளில் கிஞ்சித்தும் கருத்து வைக்கவில்லை.

ஒரு சமயம் மகாராஜாவிடமிருந்து அழைப்புக்கடிதம் வந்தது. அப்பொழுது ஸ்ரீ அரவிந்தர் தமது வேலையில் கண்ணும் கருத்துமாக இருக்கவே, அழைப்புக்கு இணங்க முடியாததைத் தெரிவித்து விட்டார். வேறெவரும் மகாராஜா அளித்த சந்தர்ப்பத்தை அவ்வளவு எளிதாக நழுவ விட்டிருக்கமாட்டார்கள்.

மகாராஜாவின் நன்மதிப்பு அவருக்கிருந்த படியால், பலபேர்கள் பதவிகளுக்காக அவரது சிபார்சை நாடி வருவர். ஆனால் ஸ்ரீ அரவிந்தர் அவ்வண்ணமாகத் தமது செல்வாக்கை உபயோகித்ததே கிடையாது.

ஸ்ரீ அரவிந்தர் விளம்பரத்தை விரும்பாது எப்பொழுதும் எவ்விஷயத்திலும் ஆழ்ந்த அமைதியும் அடக்கமும் கொண்டிருந்தார். அந்தஸ்து, அதிகாரம், ஆடம்பரம், இவைகளினால் இன்பம் வருவதில்லை எனக் கூறுவார். சுக வாழ்க்கைக்காகத் தாம் இப்புவியில் உடல் எடுக்கவில்லை யென்பதையும் இறைவனின் விழுமிய பணி யொன்றை ஆற்றுவதற்காகவே வந்துளார் என்பதையும் அவர் அறிந்திருந்தார்.

## எளிய வாழ்க்கை

ஸ்ரீ அவிந்தர் பரோடாவுக்கு வந்தவுடனே மிக எளிய வாழ்க்கையை நடத்த வாரம்பித்தார். அவர் மிகச் சொல்பமான, ஆடம்பரமற்ற உடையையே தரித்திருப்பார். இடுப்பில் முரட்டு ஆமதாபாத் வேட்டி, ஒரு குடுத்தினி, சில சமயம் பிராலி என்னும் மராத்திய குல்லா, காலுக்குச்

சடா, இவற்றையே அவர் சாதாரணமாக அணிவார். மகாராஜாவின் தர்பாருக்கும் தர்பார் விருந்துகளுக்கும் செல்லும்போதும், இதே எளிய உடையைத் தரித்துக்கொண்டு போவார். படுக்கும் கட்டிலும் படுக்கையும் மிக மிகச் சாதாரணமானவை. மெல்லிய மெத்தையில் அவர் உறங்குவதேயில்லை. குளிர்காலத்தில் சாதாரண சால்வையொன்றையே உபயோகிப்பார். கலாசாலை செல்லுவதற்காக ஒரு பழைய விக்டோரியா சாரட்டு வண்டியையும் மெல்ல செல்லும் குதிரையையும் வைத்திருந்தார். வாடகை அதிகமாகக் கொடுத்தும் சில சமயங்களில் அவர் சௌகரியமற்ற சிறுவீடுகளில் வசிக்க நேர்ந்தது. ஒருசமயம் அவர் குடியிருந்த வீடு கால்நடைகளின் கொட்டகையைப் போல அவ்வளவு மோசமாய் இருந்ததென்றும், ஒருவித புகாரும் கூறாமல் அதில் காலந்தள்ளினாரென்றும் அவருடைய வங்க உபாத்தியாயர் தினேந்திர குமாரராய் கூறுகிறார். *

ஸ்ரீ அரவிந்தர் சாதாரண உணவையே உட்கொண்டார். சாதம், ரொட்டி, பருப்பு, முதலிய வங்காளிகள் சகஜமாகப் புசிக்கும் சாப்பாட்டு வகைகளே அவரது உணவு. சாதத்தைவிட ரொட்டியையே கொஞ்சம் அதிகமாகச் சாப்பிடுவார். சாப்பாட்டைப்பற்றி அவர் எப்பொழுதும் கவலைப்பட்டதேயில்லை. எல்லா வேலைகளையும் போல அதுவும் ஒரு வேலையெனக் கருதுவார். மிகவும் மிதமாகவே சாப்பிடுவார். அவர் நாக்குச் சுவையைக் கவனிப்பதில்லை. அவரது சமையற்காரன் செய்துபோட்ட உணவைப்பற்றி அவர் ஒருநாளும் புகார் கூறியதில்லை. சுவையாயிருப்பினும் சுவையற்றிருப்பினும், பாகமாகாதிருப்பினுங்கூட வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்ல மாட்டார். ஒருநாள், இங்கிலாந்திலிருந்து திரும்பிவந்த கலைஞரான சசி குமார்ஹஷ் என்பவரைத் தமது வீட்டிற்குச் சாப்பிட அழைத்திருந்தார். அதுசமயம் அவருடைய வங்

* தினேந்திர குமாரராய் என்பவர் வங்க எழுத்தாளர்களில் ஒருவர். ஸ்ரீ அரவிந்தர் பரோடாவில் வாசம் செய்தபோது அவர் இரண்டு ஆண்டுகள் ஸ்ரீ அரவிந்தரது வீட்டிலே தங்கியிருந்தார். அவர் ஸ்ரீ அரவிந்தரது வாழ்க்கையில் கவனித்த சில விஷயங்களை 1924-ல் வெளிவந்த "அரவிந்தப் பிரசங்கம்" என்னும் சிறு நூலில் வெளியிட்டிருக்கிறார். இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள வாழ்க்கைக் குறிப்புகளிற் சில அந்நூலினின்று எடுக்கப்பட்டுள்ளன.

கார சமையற்காரன் படுமோசமாய்ச் சமைத்திருந்தான். ஸ்ரீ அரவிந்தர் நகைத்தனரே யொழிய, அவன்மீது சிறிதும் கோபமோ ஆத்திரமோ கொள்ளவில்லை.

அவர் தேகப்பயிற்சி யொன்றும் விசேஷமாகச் செய்யவில்லை. காலை ஒரு மணி நேரம் உலாத்துவார். மாலை வராந்தாவில் அரைமணி நேரம் வேகமாக நடப்பார். அவ்வளவுதான். அவர் இரவில் வெகுநேரம் ஆழ்ந்து படிப்பார். ஆகவே, காலையில் நேரங்கழித்தே படுக்கையை விட்டு எழுந்திருப்பார்.

அவரது உடுப்பு, வண்டி, வீடு, எல்லாமே பார்ப்பவர்களுக்கு வேடிக்கையாயிருக்குமாம். ஆயினும், ஸ்ரீ அரவிந்தர் அவைகளைக் குறித்துக் கொஞ்சமேனும் கவலைப் பட்டதில்லை. அவருக்கு எதிலும் பற்றுதலேற்படவில்லையாதலால் மனக் கவலையற்றிருந்தார். அவரது எளிய தூய வாழ்வும், சீரிய கருத்தும், புகழ்ச்சி, இகழ்ச்சி, சுகதுக்கங்களில் அவருக்கிருந்த சமநோக்கும், தன்னல மறுப்பும், எளிதில் இளகும் உள்ளமும், மௌனமும், அடக்கமும், யோகவிழியும், அவரை நெருங்கியவர்களிடம் ஒரு புதிய பக்தியையும் அவர் ஒரு அபூர்வமான மகான் என்னும் உணர்ச்சியையும் எழுப்பின.

## நாட்டு மொழிகள், கலைகளைப் பயிலல்

ஸ்ரீ அரவிந்தர் மேனாட்டுக் கலைகளில் மகா விற்பன்னராக இருந்தபோதிலும், சொந்த நாட்டுப் பண்டைக் கலைகளையும், தற்காலம் வளர்ச்சிபெற்று வரும் புதுக்கலைகளையும் சரிவர அறியாமலிருந்தார். அவர் பரோடா வந்தவுடனேயே இக் குறையைத் தீர்த்துக் கொள்ளுவதின் பொருட்டு முதலில் ஒரு சாஸ்திரியை வைத்துக்கொண்டு சம்ஸ்கிருதம் கற்றுக்கொண்டார். பார்கேர் என்பவரிடமிருந்து மராத்தி மொழியைக் கற்றார். மற்றொரு பண்டிதரிடமிருந்து மராத்தியினின்று, சிதைந்த மோரி பாஷையைக் கற்றார். அன்றியும், குஜராத்தி, ஹிந்துஸ்தானி பாஷைகளையும் கொஞ்சம் கற்றுக்கொண்டார். 1898-ல் வங்காள எழுத்தாளராகிய தினேந்திரகுமார ராய் என்பவரை வங்காளத்திலிருந்து அழைத்துவந்து தமது வீட்டி

லேயே வைத்துக்கொண்டு வாரம் இருமுறையாக இரண்டு ஆண்டுகள் வரை வங்க பாஷையைக் கற்றார்.

இவ்வண்ணமாகப் பல இந்திய பாஷைகளைப் பயின்று கொண்டிருக்கையிலேயே, வேதம், உபநிடதங்கள், கீதை, ராமாயணம், மகா பாரதம், காளிதாசன் பர்த்ருஹரி இவர்களின் கவிதைகள், தத்துவ தரிசனங்கள், யோகப் பயிற்சி நூல்கள் முதலிய யாவற்றையும் அலசி அலசி, துருவித் துருவி ஆராய்ந்தார். ஹோமர், டாந்தே என்றும் ஐரோப்பிய மகா கவிகளையும் வியாசரையும் விட, வால்மீகியே சிறந்த கவியெனத் தேர்ந்தார். "வந்தே மாதரம்" என்னும் திருமந்திரத்தை நாட்டுக்களித்து மக்கள் வீறு கொண்டெழுந்து பாரதத் தாய்க்குப் பணி செலுத்தத் தூண்டினவரும், வங்க இலக்கிய உலகில் பிரசித்தி பெற்றவருமான பங்கிம் சந்திர சட்டர்ஜியின் நாவல்களைப் படித்து 1894-ல் அவர்மீது ஒரு கவி பாடினார். தமக்கு 9 வயது மூத்தவரான சுவாமி விவேகானந்தர் அமெரிக்கா சென்று ஆற்றிய சொற்பொழிவுகளையும் வங்க பாஷையில் எழுதிய நூல்களையும் 1891-ல் ஆவலுடன் படித்தார். தமக்கு 9 வயது மூத்தவரான தாகூரின் கவிதைகளைச் சுவைத்து இன்புற்றார்.

ஸ்ரீ அரவிந்தர் கீழ்நாட்டுக் கலைகளுடன், நூதன ஐரோப்பியச் சிந்தனைகளையும் கருத்துக்களையும் விளக்கும் நூல்கள், பத்திரிகைகள், மாத சஞ்சிகைகள் முதலிய யாவற்றையும் விடாது படித்து வந்தார். அவ்வப்போது வெளியிடப்பட்ட புது நூல்களின் பட்டியிலிருந்து பல புத்தகங்களைப் பொறுக்கி ஒரு நீண்ட பட்டி தயாரித்து, பம்பாயில் அதுசமயம் பிரபல புத்தக வியாபாரியாயிருந்த ஆத்மாராம் ராதாபாயிக்கு அனுப்புவார். மாதமிருமுறை அல்லது மும்முறை ரயில்வே பார்சலில் அவருக்கு ஏராளமான புத்தகங்கள் வரும். அவைகளைப் பத்து நாட்களுக்குள் முடித்து மீண்டுமோர் பட்டியைத் தயாரித்து அனுப்பிப் புதிய புத்தகங்களின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார். இவைகளுக்காக புத்தக வியாபாரிக்கு மாதா மாதம் 50 அல்லது 60 ரூபாய் அனுப்புவார். அவரது வீட்டில் மூலைக்கு மூலை புத்தகங்கள் நிறைந்து கிடக்கும்.

பின்னரே இவை யெல்லாம் புத்தகவடிவில் வெளிவர லாயின.

இக்கவிதைகளுள் "காதலும் சாதலும்" என்னும் இதிகாச காவியம் மிகச்சிறப்புடையது. இக்காவியத்தை அவர் தமது 27-ம் வயதில் (1899) எழுதினார். இதில் உலகத் தொல்லிலக்கியங்களில் காணப்படும் நடையின் இனிமையும், உயர்வும், வேகமும், மெல்லிய ஜாலமும், எல்லாம் பொருந்தியிருக்கின்றன. இக்காவியத்தின் கதை வருமாறு.

சியவனப் புத்திரனாகிய ருரு கானகத்தில் தன் இள மனைவியாகிய பிரியம்வதையுடன் களித்திருந்தான். ஒரு நாள் காலை அவளை விட்டுப் பிரிந்து வெகு தூரஞ்சென்று அலைந்து திரிந்து இயற்கை யின்பத்தில் திளைத்துத் திரும்பி வந்தபோது, பிரியம்வதை அரவால் தீண்டப்பெற்றுத் துடிதுடித்துக் கொண்டிருந்ததைக் கண்டான். சிறிது நேரத்திற்கெல்லாம் அவள் உயிர் விட்டாள். அவளது உடலை சில வனதேவதைகள் தூக்கிச் சென்றனர். ருரு மிகவும் நொந்து ஓலமிட்டழுதான். ஒரு அசுவத்த மரத்தில் காமன் ஒரு அழகான சிறுவன் வேடம் பூண்டு வில் அம்புடன் தோன்ற, ருரு தனது துயரத்தை அவனுக் கறிவித்தான். காமன் இரங்கி அவனுக்கொரு மலர் தந்து, கங்கை கடலிற் கலக்குமிடம் சென்று மூழ்கி யமராஜனையடைந்து அவனுதவியை நாடும்படிக் கூறி மறைந்தான். ருரு அவ்விதமே செய்து மலருடன் கடலில் மூழ்கினான். பாதாளத்திலுள்ள பல லோகங்களைக் கடந்து சென்று அங்கு அவதிப்படும் ஆவிகளை யெல்லாம் கண்டு பிரியம்வதையைப்பற்றி விசாரித்துக்கொண்டே சென்று, கடைசியாகச் சிம்மாசனத்தில் வீற்றிருந்த யமதர்மராஜனை யடைந்தான். அவனது கையிலிருந்த மலர் அவனைக் காத்தது. தர்மராஜன் பிரியம்வதையைக் கொடுக்கக் கூலியாக அவனது பாதி ஆயுளைத் தியாகம் செய்யவேண்டுமென்றான். முழு ஆயுளை வைத்துக்கொண்டு சர்வ நலங்களையும் பெற்றுக் கடைசியாக முதுமைப் பருவத்தில் ஈசுவரனையும் தரிசிக்கலாமென்றும், மற்றொருவனுக்காக ஆயுளைத் தியாகம் செய்வது முறையாகாதெனவும், எவ்வளவோ சொல்லிப் பார்த்தும், ருரு பிடிவாதமாக நின்று பிரியம்வதையின் பொருட்டுத் தனது பாதி உயிரைத் தத்தம் செய்கிறான். முடிவில், கடைசி நரகத்தில் காதலியைக் காண்கிறான். அவளைத் தொட அவள் உயிர்பெற்றெழுந்தாள்.

இக்காவியத்தில் காதலர்களின் காதலின்பமும் பிரிவாற்றாமையின் துன்பமும், மதனன் தன் பிரபாவங்களை

குருவுக்கு உரைத்ததும், பாதாளங்களின் வருணனைகளும் எமதர்ம ராஜனின் உபதேசமும், ஸ்ரீ அரவிந்தரது கற்பனைத் திறமையையும் அருட்புலமையையும் நன்கு விளக்கிக் காட்டுகின்றன.

"பாஜீ பிரபு" என்பது ஸ்ரீ அரவிந்தர் எழுதிய மற்றுமோர் இதிகாச காவியம். இது வேறு போக்குடையதாயினும், மேலே சொன்ன காவியத்திற்கு எவ்விதத்திலும் இளைத்ததல்ல. மொகலாயருடன் ஓயாது போர் புரிந்த சிவாஜீ, சற்று பின்வாங்கி ராஜகிரஹத்துக்குள் சென்று புதிய முஸ்தீப்புடன் திரும்பிவர வேண்டியிருந்த நிலைமையில், பின்தொடர்ந்து வந்த 12,000 சிப்பாய்களடங்கிய மொகலாயப் படையைத் தடுத்து ரங்கணா கணவாயை 50 போர் வீரர்களுடன் காத்த பாஜீ பிரபுவின் வீர சரித்திர நிகழ்ச்சியை ஆதாரமாகக்கொண்டு இது எழுதப் பட்டது. இக்காவியத்தில் ஸ்ரீ அரவிந்தர் பக்தர் பாபுதாசர் பரிந்து அருளும் ஆவேசமும் பெற்றவரும், நாட்டைப் பாதுகாக்கும் பவானிதேவியின் கருவியென்றெண்ணியே கருமம் செய்தவருமான சிவாஜியின் தலைமையின் கீழ் இயங்கின பாரத்தியரின் வீரத்தையும் அதுபோல் பக்தியையும் நன்கமைத்துப் பாடியிருக்கிறார். காவியத்தையும் நாட்டுப் பற்றையும் தூண்டும் இக் கவிதை அவர் நமக்களித்த நன்கொடைகளில் சிறந்ததொன்றாகும்.

"அறுநூறும் இதர பாடல்களும்" என்னும் பெயருடன் புதுவையில் முதன் முதலாக புத்தக வடிவில் வெளிவந்த கவிதைகள், அநேகமாக ஸ்ரீ அரவிந்தர் பரோடாவிலிருந்தபோதே எழுதப் பட்டவை. அத்தியாத்ம யோக மார்க்கத்தில் சென்றுகொண்டிருந்த ஸ்ரீ அரவிந்தரின் உள்ளத்திலே அவைகளில் காணப்படுகின்றபடியால், அவை வேறொரு ரகத்தைச் சேர்ந்தவையென்றே சொல்லவேண்டும். வேறொரு ரகமென்றால் ஸ்ரீ அரவிந்தர் கவிதையை வெறும் தத்துவமாக ஆக்கிவிடுகிறாரென்றோ, தத்துவத்தைப் பிரசாரம் செய்யக் கவிதையை ஒரு சாதனமாக ஆக்கிவிடுகிறாரென்றோ, அர்த்தமாகாது. ஏனெனில் கவிதை பூரணம் பெற்று, அது உண்மையாக நாடுவதை அடைய வேண்டுமென்பதே அவரது கருத்தாகும். இதைச் சற்று விளக்குவோம்.

## கலைஞனின் திருஷ்டி

கலைஞன் பிரத்யட்ச உலகைப் படம்பிடிப்பதே தனது குறியெனக் கொள்ளுவதில்லை. அவன் வெறும் புலனறிவோடு நின்றுவிடுவானாகில், அவனது கவிதை ஆழமும் உயர்வுமின்றி அரைகுறையாகவே இருக்கும். அவன் கண்டு வரையும் உருவுடன், தோற்றத்திற்குப்பின் மறைவாயுள்ள அவனது திருஷ்டியும் உணர்வும் சிந்தனைகளும் வியாபிக்கின்றன. அவன் காணும் ஒவ்வொரு உயிரின் உயிர்த்துடிப்பையும் அதற்கு அதீதமாயுள்ள உயிரின் தீவிரப் போக்குடன் இசைக்கிறான். இந்நிலையில் அவன் காணும் ஒவ்வொன்றும் பிரபஞ்ச சக்தியின் அம்சங்களாக ஆகின்றன. அவனது உள்ளம் அச்சக்தியின் கேந்திரமாயிருப்பதால் உலகப் பன்மையெல்லாம் ஒருமையாக விளங்குகிறது. அவனது இத்தகைய திருஷ்டி ஞானிகளின் அகப்பார்வையை ஒத்திருக்கிறதெனலாம். இந்த திருஷ்டியை அவன் கவிதையில் உவமை முதலிய உருவக அலங்காரங்களின் மூலம் வெளியிடுகிறான். பிரபஞ்சத்தில் மறைந்துள்ள இசைகளை வெளிப்படுத்துவதே சொல் அலங்கார அணிகளின் வேலையல்லவா? அவன் இவ்வண்ணம் அவ்வப்போது அனுபவிக்கும் ஆவேசத்தையோ ஆதர்சத்தையோ மட்டும் வெளியிடும் கருவியாகக் கவிதையைக் கருதுவானாயின், அத்தகைய கவிதை சாதாரண கவிதையைவிட சிரேஷ்டமாயிருக்கக் கூடுமாயினும் உன்னதமான கவிதையாகாது. அவனுடைய சிறந்த பாவங்களின் இசைகளை, நீடித்த நிரந்தரமான அனுபவங்களாக ஆக்கிக்கொள்ளாதவரையில், அவனது கவிதை உண்மையாக நாடுவதை அடையவோ, அல்லது அதன் உள்ளுயிர் மகோன்னதமான பரிபூரணவாக்கில் விடுதலையடையவோ முடியாது. யோகப் பயிற்சியினால்தான், கவி இந்நிலையை, இப்பரந்த நிரந்தரமான உணர்வை யடைய முடியும். யோக நிலையில்தான் கவிதை ஆனந்தத்தின் ஜோதியாகவும், சாதாரண நடைமுறை உலகின் ஊடேயும் பிரபஞ்ச ரகசியத்தை மக்களுக் குணர்த்தும் நிரந்தரமான இசையாகவு மிருக்க முடியும். கவிதையை இந்நிலைக்கு உயர்த்துவதே ஸ்ரீ அரவிந்தரது நோக்கம். இத்தகைய கவிதைக்கு

'அஹனாவும் இதர பாடல்களும்'' இலக்கியமாக விளங்குகின்றன.

## அத்யாத்மக் கவிதைகள்

இக்கவிதைக் கொத்தில் உபநிடதம் போன்று சிறந்து விளங்குவது 'ரிஷி' என்னும் பாடல். இதில், துருவ கண்டமிருந்தபோது அதில் வசித்த ரிஷியொருவரும் பிரம்ம வித்தையையறிய நாட்டங்கொண்ட மனுராஜனும் சம்பாஷிக்கின்றனர். ரிஷி அவன் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் உத்தரம் சொல்லியும் யோக அறிவின் பல அம்சங்களைப்பற்றிப் பேசியும், கடைசியாக வெறும் வரட்டுத் துறவல்ல, நிர்வாணமல்ல, இப்புவியின் வாழ்க்கையிலேயே மனிதனே உயர்தலங்களைக் கீழே கொண்டு வந்து வெளிப்படுத்துவதே வாழ்க்கையின் லட்சியமென உபதேசம் செய்கிறார். இச்சம்பாஷணையின் கடைசி வரிகள் வருமாறு:

ரிஷி:

செஞ்சுடர்ப் பூரணனது பொறிகளே நாம். அவ்வாழியின் அலைகளே நாம்; அவனிடமிருந்தே நாம் வருகிறோம்; அவனிடமே செல்லுகிறோம்; அவனையே எக்காலமும் விரும்புகிறோம்; அவனது திருவுள்ளம் உள்ளவரையில் நாம் தனிப் பிறவியுமிருக்கும்.

ஆரியனே! வாழ்விலிருந்து பின்வாங்காதே. அவன் புரியும் நன்மை, தீமை, பாவ புண்ணியங்களை, மகிழ்வுடன் ஏற்று அவன் உத்தரவளிக்கும் வரையில் அனுபவி.

ஆனால், உயிருள்ள வரையில் உனது வினையை முழுதிலும் ஆற்று. உலகம் உனது அரங்கமேடையென்றும், நீ வழுவுள்ள நடிகன் என்றும், அவன் நாடகமென்றும் அறி.

பணி செய். ஆனால் எல்லாமாயிருக்கும் பரமனுக்கே பலன் உரியது. இறைபணி, பதிபக்தி, பதிஞானம். இவற்றின் மூலமாகவே உனது ஜீவன் இறவா ஆனந்த மெய்தும்.

மன்பதைக்கு அன்பு செலுத்து; கடவுளைக் காதலி. அரசே! நேசிக்க அஞ்சாதே, சகிப்பதற்கு வெருளாதே.

மரணம் ஒரு இடை மார்க்கமே; துயரம் மூடர்களுக்கு இடர் செய்யும் ஒரு பிரமையே யாகும்.

அகந்தையினின்றும் விடுதலையடைந்து அன்பிலே உயர் உவகையைக் காண்.

**மனு :**

ரிஷியே! எனக்குப் பரந்த நாடுளது; ஞாலம் பணிந்துளது. விண்ணுலகின் கனக நோக்கம் கதிரவனுக்கு வெகு தொலைவில் விரிந்து நிற்கின்றது. ஆனால் அவனையே, சலனமற்ற பரிபூரண னையே, கதிரோனையே, கதிர்களையல்ல, நான் நாடுகிறேன்.

**ரிஷி :**

அவனை இப் பாரிலே காண். உன்பொருட்டு, மனிதன் தனது லட்சியத்தில் வெற்றியடையும் பொருட்டு, பல அண்டங்களின் இறுக்கத்திலிருந்து ஒரு வலுவான ராஜ்யத்தை அவன் உனக்கு வகுத்துக் கொடுத்திருக்கிறான். உனது மானிட வலிமையைப் பூர்த்திசெய். இனத்தைப் பரிபக்குவப்படுத்து. ஏனெனில், அரசே! நீ அவனே. உனது சம்மதத்தைக்கொண்டே இருள் உனது ஆன்மாவின் மீது படர்ந்திருக்கிறது. அதனை விலக்கி, நீ உண்மையாகவே இருக்கும் அமைதியான சம்பூரணத்தை மீண்டும் அடைந்து, பக்குவமான மனிதனை அவனது குறியாகிய கடவுள் நிலைக்கு உயர்த்துவாயாக!

"**யார்**" என்னும் பாட்டில் பின்வரும் வரிகள் கவியின் அத்தியாத்மப் பரவசத்தை விளக்குகின்றன :

"நீலமெல்லாம் அவனது கண்களின் நகைப்பே,
அழகெல்லாம் அவனது ஆனந்த வெறியின் புன்முறுவலே,
நம் முயிரெல்லாம் அவனது இருதயத் துடிப்பே.
நமது ஆனந்தப் பரவசம் ராதை-கிருஷ்ணனது திருமணம்,
நம் காதல் அவர்களது யுத்தம்."

இக்கீதத் தொகுதியில் "வேதாந்தியின் பிரார்த்தனை" "பரப்பிரம்மம்", "நிலவு", "பகவான்", "கடல்", முதலிய பல நேர்த்தியான பாட்டுக்களிருக்கின்றன.

## அத்தியாத்ம வேட்கை

ஸ்ரீ அரவிந்தர் இந்திய தத்துவ தரிசனங்களையும் யோக நூல்களையும் படித்து வந்தார் என்று முன் கூறினோம். வங்கத்தில் நடைபெற்றுவந்த பிரம்மசமாஜ இயக்கங்கள், ராமகிருஷ்ணர் – விவேகானந்தரின் அருள்மொழிகள், முதலியவைகளை யெல்லாம் அவர் ஊன்றிக் கவனித்துவந்தார்.

கடவுளை நேருக்கு நேராக காணவேண்டுமென்ற அவா நாளுக்கு நாள் அதிகரிக்கவே, இந்திய யோக சாஸ்திரங்களில், விசேஷமாக ராஜயோகத்தில், கூறப்பட்ட விதிகளை அனுஷ்டித்து அதில் ஓரளவு சித்திபெற்று வந்தார். கூடுமானபோதெல்லாம் யோகிகளையும் சாதுக்களையும் கண்டு யோகப் பயிற்சிபெற முயன்றார். அதுசமயம் நர்மதை நதிக்கரையில் சந்தோட் என்னுமிடத்தில் பிரம்மானந்தர் என்னும் ஒரு பெரியார் ஆசிரமம் அமைத்துக்கொண்டு தவமிருந்துவந்தார். அப்பெரியார் திடகாத்திரராக இரு நூறு வருடங்களுக்குமேல் வாழ்ந்துவந்ததாகக் கூறப்பட்டது. ஸ்ரீ அரவிந்தர் முதலில் தேஷ்பாண்டே என்பவருடனும், பின்னர் தனியாகவும் சுவாமி பிரம்மானந்தரை பல்முறை தரிசித்தார். ஆயினும், 1905-ல் தான் ஸ்ரீ அரவிந்தர் தமது யோகப் பயிற்சியைத் தீவிரமாக ஆரம்பித்தார். கடவுளுடன் ஐக்கியமாகும் சுவாநுபூதியடைவதற்காக இந்தியாவில் இதுகாறும் அனுஷ்டிக்கப்பட்டு வந்த முறைகளில் பெறக்கூடிய அநுபவங்களின் முக்கியாம்சங்களைத் தாமும் வெகு சீக்கிரத்திலேயே அடைந்தார். ஆனால், இம்முறைகளிற் பல, எல்லாவற்றிற்கும் அப்பாலுள்ள பரம்பொருளுக்குச் செல்வதாயும், முடிவில் வாழ்க்கையிலிருந்து விலகியே சேதனத்திற்கு வழிகாட்டுவதாயுமிருக்கின்றனவென்பதைக் கண்டு, சேதனத்தையும் சடத்தையும் ஒன்றுசேர்த்து இணைக்கக் கூடிய மிகப் பூரணமானதொரு அநுபவத்தை நாடினார்.

## குடும்ப வாழ்க்கை

ஸ்ரீ அரவிந்தருக்குத் தாய்வழி உறவினரிடமே அதிகப் பிரேமை இருந்தது. விடுமுறை நாட்களில் அவர் வங்காளம் சென்றபோதெல்லாம் அநேகமாகப் பாட்டனாரான **ராஜநாராயண போஸின்** வீட்டிலும், மாமனான **ஜோகேந்திரநாத போஸு**டனும் தங்குவார்.

ஸ்ரீ அரவிந்தர் தமது தாயாரின் மீது அத்தியந்தப் பற்று வைத்திருந்தார். தாயாருக்குப் பல வருடங்களாகவே சித்தப்பிரமை இருந்துவந்தது. பரீந்திரர் பிறந்தவுடனே அது முற்றியது. ஸ்ரீ அரவிந்தரது எளிய வாழ்க்கையையும் அசாதாரணமான வழிகளையும் கண்டு ஆச்சரிய

மடைந்த தினேந்திர குமார ராயிடம் ஒருசமயம் அவர் தாம் பித்தியின் மகனை பித்தன்தானே என வேடிக்கையாகக் கூறினாராம். தமையன்மார்கள் நல்ல அந்தஸ்திலிருந்து சம்பாதித்தபோதிலும் ஸ்ரீ அரவிந்தரே தமது தாயாருக்கும், பாங்கிபூரில் அகோர் குடும்பத்தில் இருந்துகொண்டு பள்ளியில் படித்துவந்த தங்கை சரோஜினி தேவிக்கும் செலவுக்குப் பணமனுப்பிவந்தார்.

## இல்லறம்

ஸ்ரீ அரவிந்தர் தமது 29-ம் வயதில், (1901) இங்கிலாந்து சென்று திரும்பிவந்தவரும், 1,600 ரூபாய் சம்பளத்தில் உயர்தர உத்தியோகத்திலிருந்தவருமான ராய்பகதூர் பூபால போஸ் என்பவரின் மகளான மிருணாலினி தேவியை மணந்தார். சாதாரண இந்து குடும்ப ஸ்திரீகளின் ஆசைகளெல்லாம் உலக சுகதுக்கங்களைப் பொறுத்திருக்கின்றன என்னும் விதிக்கு தேவியார் ஓர் விலக்காக இல்லை. மேலும், பிரம்ம சமாஜப் பள்ளிக்கூடங்களில் அவர் பெற்ற கல்வியானது, உலக சுகங்களை அனுபவிக்க வேண்டுமென்னும் சாதாரண விருப்பத்தைத் தடுக்கவல்ல உள் பயிற்சியை அவருக்களிக்கவில்லை. ஆகவே, அத்யாத்ம வாழ்வு, உயர்ந்த முயற்சிகள், தேசாபிமானம், தியாகம் இவைபோன்ற பெரிய விஷயங்களில் அவருக்குப் போதுமான சிரத்தை ஏற்படவில்லை. இங்கிலையில், ஸ்ரீ அரவிந்தர் தமது அறிவு, செல்வம் முதலியவைகளை, குடும்ப சம்ரட்சணைக்கு அத்தியாவசியமாக வேண்டியதுபோக மற்றவைகளை எல்லாம், சுகங்களிலும் போகங்களிலும் செலவிடாது பகவானது திருப்பணியிலேயே உபயோகப்படுத்த வேண்டுமெனவும், நாட்டில் பட்டினியால் வருந்தும் மக்களுக்குத் துணைபுரிய வேண்டுமெனவும் ஈசுவரனை தரிசிப்பதற்காக அவனுக்கு எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்துவிட வேண்டுமெனவும், பாரதத்தாயின் விடுதலைக்காகப் பாடுபட வேண்டுமெனவும் உறுதி கொண்டபோது, தேவியாருக்கு வருத்தமுண்டாகி தமது வாழ்க்கையில் சுகமுண்டாகவில்லையே யெனக் கணவரிடம் பல தடவைகள் முறையிட்டுள்ளார். ஸ்ரீ அரவிந்தரோ, தமது பணியில் தமது பத்தினியும் துணைநின்று ஊக்கமளிக்க வேண்டுமென விடாது உபதேசஞ் செய்துவந்தார்.

ஸ்ரீ அரவிந்தர் செய்த உபதேசங்கள் தமது யாருக்கு அவ்வப்போது எழுதிய கடிதங்களில் விளக்கப் பட்டிருக்கின்றன. அக்கடிதங்களில் மூன்றே இன்று நமக்குக் கிடைத்துள்ளன. அவை, ஸ்ரீ அரவிந்தர்மீது தொடரப்பட்ட அலிப்பூர் வழக்கில் சாட்சியங்களாகச் சர்க்கார் தரப்பில் தாக்கல் செய்யப்பட்டவையாகும். அவைகளில், முதற் கடிதம் ஸ்ரீ அரவிந்தர் பரோடாவிலிருக்கையிலும், மற்ற இரண்டும் அவர் வங்கநாடு சென்ற பின்னரும் எழுதப்பட்டவையாகும். அவை வருமாறு:

## பத்னியாருக்கு எழுதிய கடிதங்கள்

அன்புடைய மிருணாலினி

நீ இம்மாதம் இரண்டாம் தேதியன்று எழுதிய கடிதம் கிடைத்தது. உன் தாய்தந்தையர்களுக்கு மீண்டும் துயரமேற்பட்டிருப்பதை அறிய வருந்துகிறேன். உயிர் துறந்த சிறுவன் யார் என்பது உனது கடிதத்திலிருந்து சரியாகத் தெரியவில்லை. துன்பம் நேரிடினும் அதை நாம் பொருட்படுத்தலாகாது. புத்திர விஷயத்தில் மட்டுமல்ல, எவ்விஷயங்களிலுமே, இன்பத்தோடு துன்பமும் வருவது இயற்கை. இன்ப துன்பங்களை யாவற்றையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்து அமைதியுடனிருப்பதே மனிதனுக்கு உரிய வழியாகும்.

### நான் ஒரு பித்தன்

ஒரு முக்கியமான விஷயத்தை நான் இப்போது உனக்கு அறிவிக்கப்போகிறேன். விதி வசத்தால் நீ ஒரு விசித்திரமான பெயர் வழியுடன் பிணைக்கப்பட்டிருப்பதை முன்பே அறிந்திருப்பாய். என் விருப்பங்களும் மனநிலையும் இது சமயம் எனது நாட்டவர் கொண்டுள்ள விருப்பங்களுக்கும் நிலைக்கும் முற்றிலும் மாறுபட்டவையாயும் அசாதாரணமாயும் இருக்கின்றன. பெரிதும் வழங்காத விருப்பங்களையும் கருத்துக்களையும் கொண்ட மனநிலையை மக்கள் பைத்தியம் எனக்கூறுவர். ஆனால் அத்தகைய பைத்தியம் பிடித்த ஒருவன் மேற்கொண்ட கருமமானது நிறைவேறிவிடின், அவனையே மகா புருடன் எனப் போற்றுவர். ஆயிரத்தில் பத்துப் பேர்களே அசாதாரணமாக இருப்பர். இப்பத்துப் பேர்களில் ஒருவனே காரிய சித்தியடைகிறான். எனது முயற்சியில் நான் இன்னும் சித்தியடையவில்லை. அதில் முற்றிலும் ஈடுபடக்கூட இன்னும் முடியாமலிருக்கிறேன். இந் நிலையில் என்னைப் பித்தன் என்றே கூறுவர். பித்

தனைக் கணவனாகக் கொண்டவளுக்குக் கஷ்டங்கள்தாம் வரும். பெண்களுடைய ஆசைகளெல்லாம் அநேகமாக உலக இன்ப துன்பங்களையே பொறுத்திருக்கின்றன. ஆதலால், பித்தனைக் கணவனாகக்கொண்ட ஒருத்திக்குக் கஷ்டங்களும் துன்பங்களும் நேரிடுமே யொழிய இன்பமேற்படப் போவதில்லை.

### மனைவி வாழ்க்கைத் துணைவி

இதை இந்து சமயத்தை நிலைநாட்டிய இருடிகள் நன்கு அறிந்திருந்தனர். பித்தர்கள் என்றோ, மகான்கள் என்றோ, கொள்ளப்பட்ட இத்தகைய அசாதாரணமான மனிதர்களை அவர்கள் மிகவும் மதித்து வந்தனர். இவர்களது போக்கால் மனைவிமார்களுக்கு ஏற்படும் பெருந்துன்பங்களை விலக்குவதற்குரிய வழிகளையும் அவர்கள் கூறிப்போயினர். பெண்களுக்குப் புருடனே ஆசான் என்பதுதான் அவர்கள் செய்த பரம விதியாகும். இதை நீ இப்போது நன்கு அறியவேண்டும். மனைவியே கணவனது அறவாழ்க்கைக்கு உற்ற துணைவியாவாள். அவன் எதை அறம் எனக்கொள்ளுகிறானோ, அதை நிறைவேற்றுவதில் அவளும் உதவியாக நின்று யோசனை கூறி உற்சாக மூட்டவேண்டும். அவள் அவனையே கடவுளாக மதித்து, அவனது இன்ப துன்பங்களில் சம பங்கு எடுத்துக்கொள்ளவேண்டும். இவ்விதம் செய்வதே மனைவிகளின் கடமையென இருடிகள் நமது நாட்டுப் பெண்களுக்குப் போதனை செய்திருக்கின்றனர்.

### இந்து சம்பிரதாயம்

இதை நன்றாகச் சிந்தனை செய்து பார். இந்த சமயத்தில் காணும்படி நீ ஒழுக விரும்புகிறாயா? அல்லது நவீன நாகரிக முறைப்படி நடக்கப்போகிறாயா? நீ ஒரு பித்தனை மணந்துகொண்டு விட்டாய். அது உனது முற்பிறப்பின் விளைப்பயன். விதி வழியை அறிந்துகொள்வதே நலம். நீ என்ன செய்யப்போகிறாய்? மற்றவர்களைப் போல நீயும் அவனைப் பித்தனென விலக்கிவிடப் போகிறாயா? பித்தன் தன் வழியேதான் போவான். மெல்லியலாளாகிய நீ அவனைத் தடுக்க இயலாது. எனவே, நீ மூலையில் உட்கார்ந்துகொண்டு துயரப்படப்போகிறாயா? அல்லது பித்தனுக்கேற்ற பித்தியாக நீயும் அவனுடன் போகப்போகிறாயா? குருட்டு மன்னன் திருதராஷ்டிரனது மனைவி, கணவனுக்குள்ளது தனக்குந்தானே, எனத் தன் கண்களைக் கட்டிக்கொண்டு குருடியைப் போல வாழ்ந்ததை நீ அறியாயோ? நீ என்னதான் பிரம்மசமாஜப் பாடசாலைகளில் படித்த போதிலும் நீ ஒரு இந்து குடும்பப்பெண். உன் நரம்புகளில் இந்து மூதாதைகளின் இரத்தமே ஓடுகிறது. ஆகவே, இவ்விஷயத்தில் இந்து சமய சம்பிரதாயத்தை அனுசரித்து நடப்பாய் என நான் உறுதியாக நம்புகிறேன்.

## மூன்று பைத்தியங்கள்

### 1. இறைவன் அளித்ததை இறைவனுக்கு ஈதல்

ஒருவன், இறைவன் தனக்களித்த அறிவு, புலமை, கல்வி, செல்வம் முதலிய நலங்களைத் தன் பொருட்டே முற்றிலும் செலவிடக் கூடாது. குடும்பம் நடைபெறுவதற்குத் தேவையான அளவே அவைகளைச் செலவு செய்ய அவனுக்கு உரிமையுண்டு என்பது எனது திடமான நம்பிக்கை. இறைவன் அளித்த நலங்களை இறை பணிக்கே அளித்துவிடவேண்டும். என்னிடமுள்ள யாவற்றையும் எனது சுகவாழ்க்கையின் பொருட்டே செலவிடுவேனாகில், நான் ஒரு கள்ளன் ஆவேன். கடவுளிடமிருந்து பெற்றதை அவனது திருப்பணியில் பயன்படுத்தாதவன் கள்ளனே என இந்து சாத்திரங்கள் கூறுகின்றன. இதுகாறும், ஒரு ரூபாயில் பதினான்கு அணாவை என் பொருட்டும், இரண்டணாவை மட்டுமே இறைவன் பணியிலும் செலவு செய்து கணக்கை மறைத்துக்கொண்டு வாழ்ந்திருக்கிறேன். என் வாழ் நாட்களில் பாதியை இவ்வண்ணம் பயனற்றுக் கழித்து விட்டேன். விலங்குகூட, தாயும் தன் குட்டிகளுமாக வயிறார உண்டு திருப்தியடைந்து விடுகிறது. இது வரையிலும் நான் எனது ஒழுக்கத்தையும் விலங்கின் வாழ்க்கை முறையையுமே பின்பற்றி வந்திருக்கிறேன். இப்பொழுதுதான் இதனை உணர்ந்தேன். எனக்கு என்மீதே வெறுப்பும் வெட்கமும் ஏற்பட்டிருக்கின்றன. இனி இப்பழைய வாழ்க்கையை வேண்டேன். இதைத் தடுக்க நான் தொடங்கிவிட்டேன்.

கடவுளுக்கு அளிப்பது மட்டுமல்ல, அவற்றை அறவழியில் செலவிடுவதே நியாயம். ஏனெனில், நான் சம்பாதித்தேனோ, சேமித்தேனோ, பணம் கொடுத்துவிடுவது எளிதான காரியம். ஆனால், பிறருக்கு சேவை புரிவதே அறம். தன்னை அடுத்து நிற்பவர்களை ஆதரிப்பதும் இறைவனுக்கு அன்பு செய்வதுபோலத்தான். ஆனால் அது இறைவனின் ஒரு அம்சமே; அதனாலேயே அவனது அறம் நிறைவேறிவிடாது. பஞ்சம் மலிந்துள்ள இக்காலத்தில் மக்கள் அனைவருமே என் ஆதரவை எதிர்நோக்கி வீட்டு வாயிலில் வந்து நிற்பதைப்போல இருக்கிறது எனக்கு. இந்நாட்டில் என்னுடன் பிறந்தவர்கள் முப்பதுகோடி பேர்கள் இருக்கின்றனர். அவர்களிற் பலர் பட்டினியால் மடிகின்றனர்; பலர் நோயினாலும் துன்பத்தினாலும் துர்த்தசையடைந்து எப்படியோ உயிர் வைத்துக் கொண்டிருக்கின்றனர். அவர்களுக்கு உதவிபுரிவது எனது கடமையாகும்.

#### உடன்படுவாயா ?

இதற்கு நீ உடன்படுவாயா? என்ன சொல்லுகிறாய்? கேவலம் சாமானிய மனிதனைப்போல வாழ்ந்து, உயிர்வைத்திருப்பதற்கு

இன்றியமையாத பொருள்களில் மட்டுமே செலவு செய்து, எஞ்சி நிற்பதையெல்லாம் இறைவனது பணிக்கே வழங்கப்போகிறேன். இதுவே எனது விருப்பம். நீயும் இதற்கு உடன்பட்டுத் தியாகம் செய்வாயானால் எனது விருப்பம் எளிதில் நிறைவேறும். "வாழ்க்கையில் நான் இன்பமடையவில்லை" என நீ அடிக்கடி முறையிட்டிருக்கிறாயல்லவா? நீ இன்பம் எய்துதற்குரிய வழியை இப்போது உனக்குக் காட்டியுள்ளேன். அதை நீ கடைப்பிடிப்பாயா?

### 2. கடவுள் காட்சி

கடவுளைக் காணவேண்டும் என்பது எனது இரண்டாவது பைத்திய எண்ணமாகும். இது எனக்குச் சமீபகாலந்தொட்டு ஏற்பட்டுள்ளது. இக்காலத்தில் எடுத்ததற்கெல்லாம் கடவுள் பெயரைச் சொல்லுவதும், உலகறியப் பிரார்த்தனை செய்வதும், பக்தியைப் பகட்டுடன் காட்டுவதுமே மதம் என மக்கள் கருதுகின்றனர். இறைவன் இருப்பது உண்மையாயின், அவ்வுண்மையை நாமே உணர்ந்து அவனை நேருக்கு நேராகக் காண்பதற்கு ஒரு வழி இருக்கத்தான் வேண்டும். அவ்வழியில் என்ன ஆபத்துக்கள் வரினும், அதில் சென்றே தீரவேண்டுமென உறுதிகொண்டிருக்கிறேன். அவ்வழி நமக்குள்ளேயே இருக்கிறதென்று இந்து சாத்திரங்கள் பறையறைகின்றன. மேலும், அவ்வழி செல்வதற்குரிய சில விதிகளையும் அவை கற்பிக்கின்றன. நான் அவ் விதிகளின்படி ஒழுக ஆரம்பித்திருக்கிறேன்.ஒரு மாதத்திற்குள்ளாகவே இந்து சாத்திரப் போதனைகளின் உண்மை எனக்குப் புலனாகிவிட்டது. அச்சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள சில அறிகுறிகள் எனக்கு அனுபவமாகி வருகின்றன.

#### நீயும் வருகின்றாயா?

இவ்வழியில் உன்னையும் இட்டுச்செல்ல வேண்டுமென்பதே எனது விருப்பம். இதற்குத் தேவையான ஞானம் உன்னிடமில்லையாதலால், நீ என்னுடன் சமமாக அடிவைத்து நடந்து வருவது இயலாமலிருக்கலாம். ஆனால், நீ என்னைப் பின்தொடர்ந்து வருவது கடினமாக இராது. இவ்வழியில் செல்லுவோர் சித்திபெறக் கூடும். ஆனால், எல்லாம் அவரவர்களுடைய அத்தியாத்ம ஆர்வத்தைப் பொறுத்திருக்கிறது. உன்னை எவரும் இவ்வழியில் வலுக்கட்டாயமாக இழுத்துச் செல்ல முடியாது. நீ இதற்கு உன் சம்மதத்தைத் தெரிவிப்பாயானால், பின்னர் உனக்கு விவரமாக எழுதுவேன்.

### 3. பாரத அன்னையின் அழைப்பு

எனது மூன்றாவது பைத்தியம் வருமாறு :
பலர் இந்நாட்டை வெறும் மைதானங்கள், வயல்கள், ஆறுகள்

காடுகள், குன்றுகள் அடங்கிய உயிரற்ற ஒரு நிலப் பரப்பாகக் கருதுகின்றனர். நான் இந் நாட்டை அன்னையென மதித்து வழிபடுகிறேன். அன்னையின் மார்பிலே ஓர் அரக்கன் வந்து உட்கார்ந்துகொண்டு அவளது உதிரத்தை உறிஞ்சுவானாகில், மகன் கவலை யாதுமின்றித் தன் மனைவி மக்களுடன் உல்லாசமாகவா காலங்கழிப்பான்? உடனே அவன் தன் அன்னையைக் காப்பாற்ற ஒருவழி தேடுவானல்லவா? இழிநிலையடைந்துள்ள இந் நாட்டைக் காப்பாற்றும் வலிமை எனக்குண்டு. இதனை நான் உணர்ந்திருக்கிறேன். எனக்கு உடல் வலி இல்லைதான்; ஆனால், நான் வாளையோ துப்பாக்கியையோ ஏந்திப்போர்புரியப்போவதில்லை புத்தியின் வலிமையாலேயே நான் போர் புரியப் போகிறேன். படை பலத்தையும் தூல பலத்தையும் தவிர வேறு பலமில்லை எனக்கருத வேண்டாம். அறிவை ஆதாரமாகக்கொண்டுள்ள ஆத்ம சக்தி ஒன்றுளது. இக்கருத்து எனக்குப் புதிதல்ல; இன்று நேற்று உதித்ததல்ல. என் இயற்கையிலேயே இது ஊறி ஆழ்ந்து பதிந்திருக்கிறது. இவ்வுன்னதமான பணியை நிறைவேற்றவே இறைவன் என்னை இவ்வுலகுக்கு அனுப்பியுள்ளான். எனது பதினாலாம் வயதிலேயே இது முளைத்துவிட ஆரம்பித்தது. எனது பதினெட்டாம் வயதில் எனக்கு இவ்விஷயத்தில் அசைக்க முடியாததொரு உறுதி ஏற்பட்டது.

சிற்றன்னை இவ் விஷயமாக உன்னுடன் பேசியபோது, "ஒன்றுமறியாத அப்பாவியான என் கணவரை யாரோ சில தீயர்கள் தவறான வழியில் இழுத்து விட்டார்கள்" என நீ குறைப்பட்டுக் கொண்டாயாம். அது உண்மையன்று. அப்பாவியான உன் கணவனே அவர்களையும் இன்னும் பல பேர்களையும் தன் வழி திருப்பியிருக்கிறான். அது சரியான வழியோ, தவறான வழியோ, அதில் இன்னும் ஆயிரம் பேர்களைச் சேர்த்துக்கொண்டு செல்லவும் துணிந்திருக்கிறான். எனது சிறிய காலத்திற்குள்ளேயே இம் முயற்சியில் வெற்றியடைந்து விடுவேன் என நான் சொல்லவில்லை. ஆனால் இது வெற்றியடைந்தே தீரும்; இதைத் தடுக்க முடியாது.

### பக்க பலமாக இருப்பாயா?

இவ்விஷயமாக உனது கருத்து என்னவென்பதை நீ எனக்குத் தெரியப்படுத்தவேண்டும். மனைவியே கணவனுக்குப் பக்க பலமாக நின்று தைரியமளிக்கக்கூடியவள். உதய கன்னியைக் குருவாகக்கொண்ட நீ துரைகளையா தெய்வங்களாகக் கருதி வழிபடப் போகிறாய்? உனது கணவனது முயற்சியில் ஊக்கங் காட்டாது அவனது பலத்தைக் குறைக்கப் போகிறாயா? அல்லது உனது அனுதாபத்தினாலும் தைரியத்தினாலும் அதை அதிகரிக்கச்

செய்யப்போகிறாயா? "என்னைப் போன்ற சாமானியப் பெண் இத்தகையப் பெரிய காரியங்களில் என்ன செய்ய முடியும்? எனக்குப் போதுமான மனோதிடமோ அறிவோ கிடையாது. இவைகளை நினைக்கக்கூட எனக்குப் பயமாக இருக்கிறது" என்று நீ ஒருகால் சொல்லலாம்.

### இறைவனைச் சரணடை

இதற்கு ஒரு வழி சொல்லுகிறேன். கடவுளிடம் அடைக்கலப் புகு. இறைவனை அடையும் பாதையில் செல்ல முயலு. அவன் உன் குறைகளைத் தீர்ப்பான். இறைவனிடம் சரண் புகுந்த உடனேயே அச்சம் பறந்தோடிவிடும். யார் எதைக் கூறினும் பொருட்படுத்தாமல் என்னிடம் நம்பிக்கை வைப்பாயாகில், நான் உனக்குச் சக்தியளிப்பேன். அதனால் என் சக்தி குன்றாது. மனைவியே கணவனுக்குத் தைரியமளிப்பவள் என்பதை மீண்டும் வலியுறுத்துகிறேன். மனைவியிடத்தே தனது சொந்தச் சாயையைக் கண்டு தன் உள்ள விருப்பத்தின் எதிரொலியை அவளிடமிருந்து கேட்பானாயில் அவன் மிகவும் மகிழ்வடைவான்.

### சிற்றின்பங்களை விலக்கு

நீ எப்போதும் இவ்வண்ணமாகவே நல்ல ஆடைகளை அணிவதிலும், ருசியான உணவுகளை உண்பதிலும், சிரிப்பு, ஆடல், பாடல், இன்னும் பலவித இன்பங்களை நுகர்வதிலும் காலங் கழித்து மடிய விரும்புகிறாயா? அந்தகைய மனநிலை உனது பரிபக்குவத்திற்கு உகந்ததன்று. தற்காலம் நம் நாட்டுப் பெண்மணிகள் எல்லோரும் இந்தகைப் பரிதாபகரமான நிலையில்தான் இருந்து வருகின்றனர். நீ இவற்றையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு என்னுடன் வா. இறைவன் பணியை நிறைவேற்றவே நாம் இவ்வுலகுக்கு வந்துள்ளோம். அப்பணியை இன்றே செய்யத் தொடங்குவோம்.

### பிழைகளை ஒழி

உனது சுபாவத்திலே ஓர் களங்கமுளது. உனக்கு உலக விஷயங்களின் சூதுவாதுக்கள் தெரியாது. உன் மனம் எப்போதும் அமைதியற்றிருக்கிறது. அதில் அறிவு வளருவதற்கு இடமில்லாமலிருக்கிறது. உனக்கு எக்காரியத்திலும் சிரத்தை ஏற்படுவதில்லை. ஆகவே, உன் மனத்தைப் பண்படுத்தி விருத்தி செய்துகொள்ள வேண்டும். நீ நான் சொல்லுவதைக் கேட்டு அறிவைப் பெருக்கிக் கொள். எடுத்துக்கொண்ட எக்காரியத்தையும் திடசித்தத்துடன் செய்யப் பழகிக்கொள். மற்றவர்களுடைய இகழ்ச்சிகளுக்கும் பழிகளுக்கும் செவி சாய்க்காதே.

ஒன்றுமில்லை. ஆண்டவன் என்னை எங்கு போகச்சொன்னாலும் நான் போகவேண்டியவனே. இப்போது நான் என் சொந்த விஷயமாகப் போகவில்லை; அவனுக்காகவே போனேன். எனது மனநிலைமை முற்றிலும் மாறிவிட்டது. இதனை மேலும் இக்கடிதத்தில் விவரிக்க விரும்பவில்லை. நீ இங்கே வந்தால் எல்லோருக்கும் அவசியமான இவ்விஷயத்தை உனக்கும் சொல்லுகிறேன். இப்போது இதைமட்டும் அறிந்துகொள்.

இனிமேல் எனக்குத் தனிச் சுதந்திரம் கிடையாது. கடவுள் கட்டளையிட்டு என்னை எங்கு போகச்சொல்லுகிறாரோ, அங்கு நான் பதுமையைப் போலப் போவேன். இப்போது இதன் பொருள் உனக்கு விளங்காது. ஆயினும், உனக்குச் சில குறிப்புக்களைக் கூறுவது அவசியமாகும். இல்லையேல், என் நடவடிக்கைகளைப் பற்றிக் கவலையடைதல்கூடும். உன் விஷயத்தில் நான் பராமுகமாக இருப்பதாக ஒரு நாளும் கருதவேண்டாம். நான் இதுகாறும் பல குறைகளை எடுத்துக்காட்டியிருக்கிறேன். நீ என்மீது வெறுப்புற்றிருப்பது முற்றிலும் இயற்கையே. ஆனால், இப்போது எனக்கென்று சொந்தமாக உரிமையில்லை. நான் இயந்திரம்; அவன் இயந்திரத்தைச் செலுத்துபவன். இனி எனக்குத் தலைவன் நானன்று; எனது செயல்களெல்லாம், இனி எனது சித்தத்தையல்ல, அவனது திருவுளத்தையே பொறுத்தன. இறைவனது இச்சைப்படியே நான் எதுவும் செய்யமுடியும் என்பதில் நீ திருப்திபடைய வேண்டும். நீ இங்கே வரும்போது இதன் பொருள் உனக்கு விளங்கும். ஆண்டவன் தனது கருணையால் எனக்குக் காட்டியுள்ள ஒளியை உனக்கும் கட்டாயமாகக் காட்டுவான். ஆனால் அது முற்றிலும் அவனது சித்தத்தைப் பொறுத்தது.

என் உண்மையான வாழ்க்கைத் துணைவியாக இருப்பதே உனது விருப்பமாயின், அவனது அருள் உனக்கும் கிடைக்குமாறு நீ முயல வேண்டும். இக்கடிதத்தை எவருக்கும் காட்ட வேண்டாம். நான் எழுதியிருப்பது மிகவும் ரகசியமான விஷயம். உன்னைத் தவிர வேறு எவருக்கும் இதை நான் வெளியிடவில்லை.

இப்போது இவ்வளவே.

உன் அன்புள்ள கணவன்.

## 3

6—12—1907

என் அன்புள்ள மிருணாலினி

* * *

தர் அரசியல் வாழ்வைத் துறந்து, வங்கநாட்டைவிட்டுப் புதுவை சென்றபின், யோகமார்க்கத்தை மனப்பூர்வமாக மேற்கொண்டு கணவருக்குப் பாதசேவை செய்து வாழ் நாட்களைக் கழிக்க அம்மையாருக்கு ஓர் அரிய சந் தர்ப்பம் வாய்ந்தது. ஆனால் அம்மையார் அதனை இழந்து, சில ஆண்டுகளுக்குமுன் வங்கநாட்டிலேயே உயர்நீத்தார்.

### அரசியல் கட்டுரைகள்

ஸ்ரீ அரவிந்தர் வங்கப் பத்திரிகையாகிய 'வசுமதி' யையும் 'இந்து பிரகாஷ்' என்னும் பம்பாய் ஆங்கிலப் பத்திரிகையையும் விடாது படித்துவந்தார். காங்கிரஸ் மகாசபையை அதுசமயம் நடத்திவந்த மிதவாதிகளின் மனப்பான்மையையும், அவர்கள் தீவிர தேசீய இயக்கத் திற்கு மக்களைத் தயார் செய்யாமல் சர்க்காருக்கு விண் ணப்பஞ் செய்வதிலேயே காலங்கழித்து வந்ததையும் ஸ்ரீ அரவிந்தர் தாக்கி "இந்து பிரகாஷ்" என்னும் பத்திரிகை யில் 1893-94-ல் "பழையன கழிதலும் புதியன புகுதலும்" என்னும் தலைப்பில் தொடர்ச்சியாகச் சில கட்டுரைகள் எழுதிவந்தார். அவற்றின் சில பகுதிகள் வருமாறு:

7-8-1893.

"குருடர்களுக்குக் குருடர்களோ வழிகாட்டுவது எங்கேனும் உள்ளதோ? அங்ஙனமே நிகழுமாயின், அனைவரும் படுகுழியில் வீழ்வது திண்ணம். இந்திய தேசீய காங்கிரசின் நிலைமை இவ்வித மாகவே உள்ளது. இவ்வித மிருக்குமெனை நான் இரண்டு ஆண்டு களுக்கு முன் என் கனவிலும் கருதவில்லை."

28-8-1893.

"நான் காங்கிரசைப்பற்றிக் கூறுவதாவது இது. அதன் குறிக்கோள் தவறானது. தன் நோக்கத்தை அடைய அதுபோகும் போக்கு உண்மையானதன்று. அது மேற்கொண்டுள்ள வழி முறைகள் சரியானவையாகா. அது நம்பியிருக்கும் தலைவர்கள் சரியான தலைவர்களாக இருப்பதற்கு உரியவரல்லர். சுருங்கக் கூறின், கண்ணிழந்த நம்மை முற்றிலும் குருடர்களாகவோ அல்லது ஒற்றைக் கண்ணர்களாகவோ உள்ளவர்களே வழிநடத்தி வருகின்றனர்."

"தேசீய காங்கிரசானது உண்மையான தேசீயத்தன்மை வாய்ந்த மாகசபையாக இருக்கவில்லை. அவ்விதம் ஆகவும் அது

முயலவில்லை. பெரும்பான்மையான மக்களுக்கு அல்லாமல், சிறு பான்மையான ஒரு தனி வகுப்பினருக்கு மட்டுமே பிரதிநிதியாக விளங்கும் காங்கிரசைத் தேசிய காங்கிரஸ் என்றழைப்பது எங்ஙனம்? அது பொதுமக்களின் அமைப்பன்று. அவ்விதமாக ஆக அது எவ்வித முயற்சியும் செய்யவில்லை."

18-9-1893.

"பிரான்சை எடுத்துக்கொள்வோம். அது அதிருஷ்டநாடு. ஒழுங்கான, அமைதியான முறையில் அது வளர்ச்சியடையவில்லை. குருதியிலும் தீயிலும் குளித்துத் தூய்மையடைந்த பின்னரே, முன்னேற்றத்தின் முதற்படியில் அது ஏறலாயிற்று. கௌரவம் வாய்ந்த மத்திய வகுப்பினரல்லர், அறியாமையில் உழன்ற பெரும்பகுதியினரான பாமர மக்களே வீறுகொண்டெழுந்து, பதிமூன்று நூற்றாண்டுகளாக மலைபோல் குவிந்திருந்த அநீதங்களை ஐந்து பயங்கரமான ஆண்டுகளில் அறவே ஒழித்தனர்.

காங்கிரசானது இந்தியமக்களனைவரின் ஆணையைத் தாங்கி நிற்கும் ஜனநாயக அமைப்பாக ஆவதற்கு யாதொரு நேர்மையான முயற்சியும் செய்யவில்லை."..................

4-12-1893.

"காங்கிரஸ் இயக்கத்தை ஆரம்பித்தவரும், அதைத்தாங்குவோரும் அதை அன்புடன் ஆதரிப்போரும் நம்முடைய புதிய மத்தியவகுப்பினரேயாவர். பத்திரிகாசிரியர்கள், பி. ஏ., பட்டதாரிகள், வணிகர்கள் ஆகிய பிரிட்டிஷ் ஆட்சியில் பெருகிச் செழித்து வரும் இவர்களே நான் கூறும் மத்திய வகுப்பினர்........................

குடியானவர்களில் கொஞ்சம் நல்ல நிலைமையிலுள்ள ஒரு சிலரும் காங்கிரசில் இருக்கின்றனர் என்பது உண்மையே. ஆனால், மத்திய வகுப்பினராகிய பெரிய இயந்திரத்தில், அவர்கள் சுழலும் சக்கரங்களே யாவர். காங்கிரசானது எல்லா நிலைமைகளிலுமுள்ள பொதுமக்களின் பிரதிநிதிஸ்தாபனம் எனக் காங்கிரஸ் பக்தர்கள் பறையறையலாம். ஆனால், பறங்கிகள் தாங்களும் வங்காள பாபுக்களின் பிரதிநிதிகள் என்று சொன்னால் எவ்வித மிருக்குமோ, அது போலவேதான் இதுவுமிருக்கும்.

மடமையிலும் வறுமையிலும் அழுந்தியுள்ள மக்களை எழுப்புவது முக்கியமன்று என்றும், அவ்வழியில் எடுக்கப்படும் சிரமம் முற்றிலும் வீணேயென்றும் திரு. மேத்தா திடமாகக் கூறுகிறார். இம்மனப்பான்மை சமூக துன்பங்களுக்கும் நாட்டின் வீழ்ச்சிக்கும் அடிகோலுவதாகும். நாம் விதைப்பதையே அறுப்போம். அவரை

போட்டால் துவரை முளைக்காது. பட்டாளிமக்களைப் பற்றிப் பலர் பேச்சளவில் நிற்கின்றனர். ஆனால், எவரும் அவர்களைப்பற்றி யாதொரு அக்கறையும் எடுத்துக்கொள்வதில்லை. ஆகவே, காங்கிரஸ் பயன்பட்டாலும், தான் செய்யவேண்டிய வேலையைச்சாதிக்கத் திறமையற்றும் இருக்கின்றது. நம்மிடையே உள்ள பட்டாளி மக்கள் அறியாமை என்னும் பெருந்துன்பத்தில் அழுந்தியுள்ளனர். மத்திய வகுப்பினர், உண்மையும், வலிமையும், மதிநுகமும் அற்றவராக இருப்பதால் வருங்காலத்தைத் பற்றிய நமது நம்பிக்கை யாவும்—நாம் விரும்பினாலுஞ் சரி, விரும்பாவிடினுஞ் சரி—பாட்டாளி மக்களின் மீதே உள்ளது. ஆயினும், அவர்களை அறியாமையினின்றும் துன்பங்களினின்றும் கைதூக்கிட விரும்பி முனைந்து நிற்போர் ஞான சூன்னியரெனத் தூற்றப்படுகின்றனர். வெறுங் கொள்கையளவில் நின்று வறட்டுவாதஞ்செய்பவன் என்றும், விஷயங்களில் ஆழ்ந்து செல்லாது நுனிப்புல் மேய்கிறவன் என்றும் நீங்கள் என்னை அழைக்கலாம். ஆயினும், பாட்டாளி மக்களைக் கைதூக்கிவிடுவதே நமது முதன்மையானதும் புனிதமானதுமான கடமை யென்பதை நான் மீண்டும் வலியுறுத்துகிறேன்.

5–2–1894.

"இந்திய மத்திய வகுப்பினர், ஒரு பக்கம் வலிமை படைத்த ஆனால் உணர்ச்சியற்ற, அதிகாரவர்க்கத்தினருக்கும், மற்றொருபக்கம் வலுவற்றுத் தாமசிகத்தில் அழுந்தியுள்ள பாட்டாளி மக்களுக்கும் இடையே நின்று, தாங்கள் தன்னலம், பதவி, அதிகாரம், பலம் ஆகியவைகளுக்காகவே போராடி வருகின்றனர்."

5–3–1894.

"பசியும் கொடுமையும் தாங்கமுடியாத அளவு மீறிவிடின், தன்னடக்கமும் பொறுமையும் மிகவும் உடைய பாட்டாளிமக்களும் கொதித்தெழுவர் என்பதை ஷியூம் துரை நன்கறிவார். நான்காட்ட முயன்றபடி, நமது நிலைபில்கானும் சிக்கல்களை அறுக்க வல்லவர் பாட்டாளிமக்களே யாவர். அவர்கள் அசையாமல் தாமசிகமாக இருக்கலாம். ஆனால் அவர்களுக்குள்ளே மகத்தான சக்தியொன்று அடங்கியுள்ளது. எவர்கள் அச்சக்தியை யுணர்ந்து அதை மேலே கிளப்புகின்றனரோ, அவர்களே வருங்காலத்தலைவர்கள்."

**இருபத்தி மூன்று வயதுள்ள இளைஞரான ஸ்ரீ அரவிந்தர், சீமையிலிருந்து வந்ததும் வராததுமாக இவ்வண்ணம் காங்கிரசையும் அதன் தலைவர்களையும் தாக்கிப் புரட்சிமயமான கருத்துக்களை வெளியிட்டு வந்ததானது முதி**

யோர்களிடையே ஒரு கலக்கத்தை யுண்டுபண்ணியது. இத்தகைய எழுத்துக்களால் காங்கிரசுக்கு கேடு விளையு மெனப் பயந்த பம்பாய் நீதிபதி ராஞடே, ஸ்ரீ அரவிந்தர் இனி இதை விடுத்து வேறு ஆக்கவேலைகளில் கவனஞ்செலுத்த வேண்டுமென ஆலோசனை கூறினர். ஸ்ரீ அரவிந்தரும் அதற்கிணங்கி, காங்கிரசைத் தாக்குவதை நிறுத்திக்கொண்டார்.

ஸ்ரீ அரவிந்தர் ராஜீய வேலையில் ஈடுபடவாரம்பித்தது 1902-லிருந்துதான். விடுமுறை நாட்களில் அவர் அடிக்கடி வங்கம்சென்று அங்கிருந்து அரசியல் விஷயமாக ஒரு புதிய ஆர்வத்தையும் ஆவேசத்தையும் பெற்ருர். பாரத நாடானது வெறும் உயிரற்ற நாடல்ல வெனவும், பாரத சக்தியின் அம்சமாகிய பாரதத்தாயே எனவும் கண்டார். பாரதத்தாய் அன்னிய ஆட்சியின்கீழ் வளங்குன்றி க்ஷீணித்து வருவதையுணர்ந்து, அவளை விடுவிக்க ஆன்ம சக்தியை உபயோகிக்க வேண்டுமென உறுதிகொண்டார். பரோடாவில் உத்தியோகத்தின் காரணமாகப் பகிரங்கமாக வேலைசெய்ய முடியாதிருந்ததால், திரைக்குப் பின்னிருந்துகொண்டே இதர ஊழியர்களுடன் சுதேசி இயக்கத்திற்கு அடிகோல ஆரம்பித்தார். இனி தமது எதிர்கால வேலை வங்கத்தில்தான் உளது என்பதை யுணர்ந்து, அதற்கேற்ற சமயம் வரும்வரையில் காத்துக்கொண்டிருந்தார்.

# ௩. ஸ்ரீ அரவிந்தரும் சுதேசி இயக்கமும்

ஸ்ரீ அரவிந்தர் ஆண்டவனின் பணிக்காகத் தம்மைப் பலவகையில் பயிற்சி செய்துகொண்டு தயாராகி வருகையில், பல கவிகள், மேதாவிகள், வீரர்கள், ஞானிகள் தோன்றிப் புதுவாழ்வு பெற்றுவந்த வங்க நாட்டில் புதிய இயக்கமொன்று புயல்போல் மூண்டுப் பரவலாயிற்று. இப்புதிய இயக்கத்தின் வரலாற்றைச் சற்று ஆராய்வோம்.

இப்புதிய இயக்கம் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆட்சி முறையினாலேயே துரிதப்படலாயிற்று. பிற்போக்கான ராஜப்பிரதிநிதியான கர்ஸன் பிரபு ஜனங்களின் விருப்பு வெறுப்புக்களைச் சற்றும் சட்டைசெய்யாது பல அடக்கு முறைகளைக் கையாண்டான். கல்கத்தாவின் சுயேச்சையான நகரபரிபாலனம் அரசாங்கக் குறுக்கீட்டால் சீரழிந்தது. பஞ்சாபிலும் பம்பாயிலும் மக்கள் விரும்பாத நிலச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. ரகசிய சுற்றறிக்கைகளால் மக்களுக்குரிய பல உத்தியோகங்கள் அடைப்பட்டன. இந்திய மக்களின் சுதந்திர சாசனம் எனப் பெற்ற ராணியின் அறிக்கை, விசேஷ வியாக்கியானம் செய்யப்பெற்று உதவியற்றதொரு கந்தைக் கடுதாசியாக ஆக்கப்பட்டது. இந்திய மக்கள் பொய்யர்கள் என்று அவன் சொன்ன அவதூறு மக்களின் மனிதத்தன்மைக்கே ஒரு அவமானமாயிருந்தது. மக்கள் அடைந்த மனக் கசப்பும் இழிவும் போதாவென, ராஜப்பிரதிநிதி ஒன்று யிருந்த வங்க மாகாணத்தை இரண்டாகப் பிரிக்கப் போவதாக 1908-ல் அறிவித்தான். பத்திரிகைகளிலும் பொதுக் கூட்டங்களிலும் இப்பிரிவினையை மக்கள் ஒருமுகமாக எதிர்த்தனர். அரசாங்க நிருவாகச் சீர்மையின்பொருட்டே இது செய்யப்படுகிறதென பறைசாற்றினதை மக்கள் நம்பாது, ஐக்கியப்பட்டு வரும் வங்காளிகளை இந்துக்களென்றும் மகம்மதியர்களென்றும் பிரித்து ஜாதிமத வித்தியாசங்களை விரிவுப்படுத்தவே இது கையாளப்பட்டதெனக் கருதினர். படித்தவர் படிக்காதவர் அனைவரும் வங்கத் தாய்க்கு ஏற்பட்ட இவ்விபத்திற்காகத் துக்கங் கொண்

டாடினர். பிரிக்கப்பட்ட இருமாகாண வாசிகளும் கையில் ரட்சை தரித்துக்கொண்டு "நாம் ஒன்றுபட்ட ஒரே சமுதாயத்தினர்; நம்மை யாதொன்றும் பிரிக்கமுடியாது" எனச் சபதஞ்செய்தனர். அதிகார வர்க்கத்தினரின் கொள்கையைக் கண்டிப்பதற்கறிகுறியாக, 1905-ம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 7-ந்தேதி, பிரிட்டிஷ் சரக்குகளைப் பகிஷ்கரிப்பதென நாடெங்கும் விரதங்கொண்டனர். நாடெங்கும், மூலைமுடுக்குகளிலும், பெருங்கிளர்ச்சியும் பிரபயாண்டமான கூட்டங்களும் நடந்தன. மக்களின் உணர்ச்சி பொங்கிவழிந்தது.

## 'மறுமலர்ச்சி' இயக்கம்

சுதேசி இயக்கம் எனப் பெயர்பெற்ற இவ்வியக்கமானது அரசாங்கத்தினர் கையாண்டுவந்த ஜனசம்மத மற்ற முறைகளால் மட்டுமே ஏற்பட்டதெனக் கூறுவது தவறாகும். ஏனெனில், இப்புதிய இயக்கம் வெறும் சுதேசி, பகிஷ்காரம், அல்லது அரசியல் இயக்கத்தைவிட விரிவானதொன்றாகும். இது மக்களது வாழ்வு முழுவதையும் தழுவியதாகும். மக்கள் முன்னேறிச் செல்லுங்கையில் இத்தகைய இயக்கங்கள் தோன்றுவது மிகவும் சகஜம். இந்தியாவில் பௌத்தமதம் சீரழிந்தபோது, சங்கரர் ஆதி வேதாந்த உண்மைகளை நாடெங்கும் பரப்பினார். ஐரோப்பாவில். 16-ம் நூற்றாண்டில், ரோமன் கத்தோலிக்க மத ஸ்தாபனம் வளர்த்த மூடநம்பிக்கை, மதவெறி, குருமார்களின் ஊழல்கள், இவைகளுக்கு விரோதமாக லூதர், கால்வின் போன்றவர்கள் கிளம்பிச் சமயவாழ்வில் புரட்சிமயமான சீர்திருத்தங்கள் செய்தனர். 18-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பழைய ஜமீன்-பண்ணை முறைகளின் கடைசிச் சின்னங்களும் ஒழிந்து, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்னும் கொள்கைகள் ஐரோப்பாவெங்கும் பரவலாயின. சுமார் 80 வருஷங்களுக்கு முன் இப்புதுக் கொள்கைகள் ஜப்பானிலும் பரவி அந்நாட்டைச் சில ஆண்டுகளுக்குள் வல்லரசாக ஆக்கின. இவை சீனத்திலும் இந்தியாவிலுங்கூட மெல்ல மெல்லப் பரவலாயின. ஜனங்கள் தங்களது இன ஒற்றுமையையறிந்து, தங்களுக்கும் இவ்வுலக அரங்கத்தில் தலைநிமிர்ந்து நிற்க

உரிமையும் ஒரு விசேஷ வேலையுமுண்டென்று உணர்ந்து, தங்கள் அபிலாஷைகளை உருப்படியாக வெளிப்படுத்தவும், சக்திகளையெல்லாம் ஒன்றுதிரட்டிக் காரியத்தில் கொண்டு வரவும் ஒரு தூண்டுதல் ஏற்படும்போதெல்லாம், இத்தகைய புத்துயிர் இயக்கம் கட்டாயமாகவே வந்து தீருகின்றது. இருபதாம் நூற்றாண்டு ஆரம்பிக்கு முன்னரே, இந்தியாவில் இப்புதிய நோக்கம் தோன்றலாயிற்று. ஆங்கிலக் கல்வியும், மேனாட்டு நாகரிகத் தொடர்பும், உணர்ச்சியற்றுச் சோம்பி அஞ்ஞானக் குழியில் விழுந்து கிடந்த மக்களைத் தூண்டிக்கிளப்பின. நாட்டின் பண்டைக் கலைகள், தத்துவங்கள், பண்டைச் சமூக அரசியலமைப்பு, இவைகளையெல்லாம் அறிஞர்கள் ஆராயத் தொடங்கிய பின் பண்டைப் பெருமையில் மக்களுக்கொரு கருவமேற்பட்டது. கீழ்நாடாகிய ஜப்பான் சிறிது காலத்திற்குள் விருத்தியடைந்ததுமன்றி உலக வல்லரசுகளில் ஒன்றான ருஷியாவைத் தோற்கடித்ததானது, மனதில் ஆழப்பதிந்து கீழ்நாட்டு மக்களிடையே ஒரு புதிய நம்பிக்கையையும் தைரியத்தையும், ஊக்கத்தையும் எழுப்பியது.

வங்காளத்தில் 1875 - 1878லேயே இப்புத்துயிர் பிறந்தது. ஐரோப்பியக் கருத்துக்கள், கலைகளின் தொடர்பினால் வங்க இலக்கியத்தில் புனருத்தாரண மேற்பட்டது. ஈசுவர சந்திர வித்தியாசாகரர், பூதேவ மூகர்ஜீ, இவர்களை ஆசிரியர்களாகக் கொண்ட "தத்துவ போதினி" பத்திரிகை, பண்டை இந்து தத்துவ தரிசனங்களை ஆராய்ந்து மொழிபெயர்த்து மக்களிடையே பழைய வேதாந்த ஞானத்தைப் புகுத்தியது. ஆனால், வங்கப் புதுவாழ்வுக்கு நடுநாயகமாய் விளங்கியவர் பங்கிம் சந்திர சட்டர்ஜியேயாவர். அவர் 1872-ல் ஆரம்பித்த "வங்கதரிசனம்" என்னும் பத்திரிகையைச் சுற்றி கவிதை, சரித்திரம், கட்டுரை, நாவல், விமர்சனம் முதலியவைகளில் கைதேர்ந்த மேதாவிகள் கூடினர். பங்கிம் சந்திரரின் 'துர்கேசநந்தினி'யும் 'ஆனந்தமட'மும் 'தேவி சௌதுராணி'யும் நாட்டுப்பற்றையும் தியாக உணர்ச்சியையும் பெரிதும் தூண்டிவிட்டன. பாரத சக்தியின் கடாட்சம் பெற்று அவர் பாடின 'வந்தே மாதரம்' என்னும் கீதம் தேசிய மந்திரமாக ஒலித்தது. கேசவ சந்திர சேனர் தனி மனிதனின் சுதந்திரத்தையும்

சமூக, சமத்துவத்தையும், பறையறைந்து மக்களிடையே ஒரு புதிய உணர்ச்சியை யுண்டாக்கினர். பழைய அடிமைப் புத்தி ஒழிந்து மக்கள் தன்னம்பிக்கை கொண்டனர். சுரேந்திர நாதர் மாணவர்கள் சங்கத்தில் கலந்து அவர்களுக்குச் சுதந்திர வாஞ்சையை ஊட்டினர். யௌவன இத்தாலியைப்பற்றியும் இத்தாலிய சுதந்திர இயக்கத்தின் தத்துவஞானியான மாஜினியைப்பற்றியும் அவர் செய்த பிரசங்கங்கள்மாணவர்களின் உள்ளத்தைக்கவர்ந்தன. ராமகிருஷ்ணரின் அருண்மொழிகளும், விவேகாநந்தரின் கர்ச்சனையும், ரவீந்திர நாதரின் கீதங்களும் மக்களுக்கு ஒரு புதிய உயிரையும் ஒரு புதிய ஆவேசத்தையும் உண்டாக்கி வந்தன.

ஆயினும், அரசாங்கத்தினரின் அடக்குமுறைகளும் இப்புதிய இயக்கத்திற்கு ஒரு புதிய வேகத்தையும் ஒரு புதிய உருவத்தையும் தந்தன. வளர்ந்து வரும் ஐக்கிய தேசீய வாழ்வுக்கு ஒரு ஆபத்து நேர்ந்தபோது தான், அத்தகைய ஐக்கிய தேசீய வாழ்வு நம்மிடையே அமைந்து வருகிற தென்பதை உணருகிறோம். இவ்வாபத்து வங்கப் பிரிவினையின் உருவில் வந்தது. உணர்ச்சிகள் புண்படக் கூடியவளவுக்கு ஒரு தேசீய வாழ்வு தங்களிடையே இருந்து வருகிற தென்பதை இப்பிரிவினையால் மக்கள் அறிந்து கொண்டனர். இவ்வுணர்வு விழிப்படைந்ததும் மற்றவை யெல்லாம் எளிதில் வந்தன. உணர்ச்சியிலிருந்து ஒரு சக்தியும், புதுவாழ்வடைய ஒரு விருப்பமும் பிறந்தன. விருப்பம் வினையைத்தூண்டியது. வினை புதிதாகப் பிறந்த வலிமையைப் பெருக்கியது. இவ்வண்ணம், பல வருஷங்களுக்கு முன் கண்ணுக்குப் புலனாகாமல் அமைதியாக விதைக்கப்பட்ட விதையானது உரம் பெற்று திடீரெனத் துளிர்விட்டு வேகமாகத் தழைக்க ஆரம்பித்தது.

### அடக்குமுறை

இந் நிலையில்தான் வங்கம் இரு துண்டுகளாக்கப்பட்டது. இப் பிரிவினை 1905, அக்டோபர் மாதம், 15-ந் தேதி, ஊர்ஜிதமாகிச் சட்டமாயிற்று. இதற்கு இடையே, மாணவர்கள் 'வந்தேமாதரம்' என்று கோஷிப்பதையும் ராஜீயக் கிளர்ச்சிகளில் சேர்வதையும் தடுத்துச் சுற்றறிக்கைகள்

விடப்பட்டன. அவைகளுக்குக் கீழ்ப்படியாமல் கிளர்ச்சியில் சேர்ந்த மாணவர்கள் பள்ளியினின்று விலக்கப்பட்டனர். இன்னும் பலர் பல தண்டனைகளுக் காளாயினர். இவ்வடக்குமுறைகளைக் கண்டிப்பதற்காகப் பல மாணவர்கள் தாங்களாகவே கலாசாலைகளை விட்டு வெளியேறினர். அரசாங்கத்தினரின் உத்தரவின்படி புது மகாணத்தில் பல பொதுக்கூட்டங்கள் போலீசாரால் கலைக்கப்பட்டன. 1905ல் டிசம்பர் மாதத்தில் காசியில் கூடின காங்கிரஸ் மகா சபையில், அடக்கு முறைகளைக் கண்டித்தும், பிரிவினையாலேற்பட்ட பகிஷ்கார இயக்கம் நியாயமென அதை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேறின. கிழக்கு வங்காளத்தில் பக்கர்கஞ்சு என்னுமிடத்தில் பகிஷ்காரம் வெற்றியடையவே, பாரிசால் பட்டணத்தில் கூர்க்கா சிப்பாய்கள் தண்டெடுத்து ஊரைச் சூறையாடிப் பயங்கர ஆட்சி புரிந்தனர். 1906-ல் மார்ச்சு மாதத்தில் பாரிசாலில் கூடிய வங்க மாகாண மகாநாடு ஜில்லா மாஜிஸ்டிரேட்டின் உத்தரவுப்படி கலைக்கப்பட்டுப் பிரதிநிதிகளும் தொண்டர்களும் போலீசாரால் தாக்கப்பட்டனர்.

பாரிசால் மகாநாடு கலைக்கப்பட்டபோது ஸ்ரீ அரவிந்தர் அங்கிருந்தார். அவர் பரோடாவுக்குத் திரும்பியபின் ஒரு பொதுக்கூட்டத்தில் வங்க மகாநாட்டில் நடைபெற்றயாவற்றையும் விவரமாக எடுத்துச்சொன்னர்.

நிலைமை நெருக்கடியா யிருந்தது. மக்களின் தீவிர உணர்ச்சியையும் உற்சாகத்தையும் சரியான வழியில் திருப்பிப் பயன்படுமுறையில் அவைகளை உபயோகிக்கத் திறமையும் தீர்க்க தரிசனமும் படைத்த தலைவர் ஒருவர் தேவையா யிருந்தது. சிறப்பாக, நாடு இருந்த நிலைமையை யுத்தேசித்தும், இந்திய கலாசாரங்களை மதித்தும், மக்கள் பலாத்காரமுறையில் இறங்காமல் இயக்கத்தைப் பாதுகாக்கவேண்டியதாயிருந்தது. ஸ்ரீ அரவிந்தர் பரோடாவில் இதற்காகவே பயிற்சி செய்யப்பட்டு வந்தார். தக்க தருணத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்த ஸ்ரீ அரவிந்தர், தாம் பரோடா சர்விஸைவிட்டு இயக்கத்தில் வெளிப்படையாகச் சேரவேண்டிய காலம் வந்துவிட்ட தென்பதை உணர்ந்தார். வங்காளம் அவருக்காகக் காத்துக்கொண்டி

ருந்தது. மேலும், நிதானமாகச் சீர்திருத்த மடையவேண்டு மெனக் கொண்டிருந்த மிதவாதிகளின் வசமே இது காறும் இருந்து வந்த தேசீய காங்கிரசானது தன் மூலக் கொள்கையைக் கைவிட்டு, முன்னேற்றமான, நேரடியான ராஜீய வேலையை வெளிப்படையாக ஆரம்பிப்பதற்கும் வங்காளக் கிளர்ச்சி இடந்தந்தது.

## ஸ்ரீ அரவிந்தர் வங்க நாடு செல்லல்

இந் நிலையில், பாரிசால் மகாநாட்டுக்குப் பிறகு பரோடா திரும்பிய ஸ்ரீ அரவிந்தர் அங்கே வெகு நாட்கள் தங்கவில்லை. அவர் 1906-ல் ஜுலை மாதத்தில் தமது வேலையை ராஜிநாமா செய்துவிட்டுக் கல்கத்தா சென்று புது வங்கக் கட்சியில் சேர்ந்தார்.

## தேசீயக்கட்சியும் அதன் திட்டங்களும்

இப்புதுக் கட்சியானது சமீபத்தில் காங்கிரசுக்குள் ஏற்பட்ட தொரு தீவிரக் கட்சியாகும். இது இன்னும் ஒரு சிறு கட்சியாகவும் அதிகச் செல்வாக்குப் பெறாததாயு மிருந்தது. வருஷாந்திரக் காங்கிரஸில் அந்தரங்கமாக நடந்த விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டங்களில் மித வாதத் தலைவர்களுடன் பயனின்றிப் போராடி வந்ததைத் தவிர, காரியாம்சத்தில் இது வேறொன்றையும் சாதிக்க வில்லை. ஸ்ரீ அரவிந்தர், வங்காள காங்கிரஸ்-க்கு ஒரு தீவிர வேலைத்திட்டம் வகுத்துக் கொடுத்து, அது ஒரு அகில இந்தியக் கட்சியாக வெளிப்படையாக வந்து, மராத்தியர் களின் பெருந் தலைவரான பால கங்காதர திலகரையே தலைவராகக்கொண்டு அதுசமயம் அரசியல் விவகாரங்களில் தலை நரைத்து பிரதானமாயிருந்த மிதவாதக்கூட்டத் தினரைத்தாக்கி, அவர்களிடமிருந்து காங்கிரஸ் அமைப்பையும் நாட்டையும் கைப்பற்ற வேண்டுமெனத் தூண்டினர். இதுவே, மிதவாதிகளுக்கும், தீவிரவாதிகளென எதிரிகளால் அழைக்கப்பட்ட தேசியவாதிகளுக்கும் ஏற்பட்ட சரித்திரப் பிரசித்தி பெற்ற போராட்டத்தின் ஆரம்பமாகும்.

படிப்படியாகச் சீர்திருத்தங்கள் பெற்று, ஒரு நூற்றுண்டிலோ, இரண்டு நூற்றுண்டுகளிலோ, எப்போதோ

தொலைவிலுள்ள ஒருகாலத்தில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளிலுள்ள சுயஆட்சி அந்தஸ்தைப் பெறலாமென மிதவாதிகள் கொண்டிருந்த நம்பிக்கைக்கு எதிரிடையாக, பூரணசுயராஜ்யமே தனது லட்சியமென இப்புதிய தேசீயக்கட்சி முழங்கியது. இந்த லட்சியத்தை நிறைவேற்று வதன் பொருட்டு, அயர்லாந்தில் கொஞ்சகாலத்திற்குப் பின் விஸ்தரிக்கப்பட்டு வெற்றிபெற்ற சின்பெய்ன் இயக்கத்தின் கொள்கையோடு, சிற்சில விவரங்களில்லாவிடினும், பொதுவாக மூலத்தில் ஒத்திருந்த ஒரு வேலைத் திட்டத்தையும் இப்புதிய கட்சி அமைத்துக்கொண்டது. இத்திட்டத்தின் தத்துவம் சுய உதவியாகும். ஒரு பக்கத்தில் நாட்டின் சக்திகளைப் பயனளிக்கும் முறையில் அமைப்பதையும், மற்றொரு பக்கத்தில் சர்க்காருடன் ஒத்துழைப்பதை முற்றிலும் மறுப்பதையும் நோக்கமாகக் கொண்டது. பிரிட்டிஷ் அன்னியநாட்டுச் சரக்குகளைப் பகிஷ்கரித்து அவைகளுக்குப் பதிலாகச் சுதேசக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்தல், நியாயஸ்தலங்களைப் பகிஷ்கரித்து மத்தியஸ்த நீதிமுறையை நிறுவுதல், சர்க்கார் கலாசாலைகளையும் கல்லூரிகளையும் பகிஷ்கரித்து நாடெங்கும் தேசீய கலாசாலைகளையும் கல்லூரிகளையும் அமைத்தல், போலீஸ் பந்தோபஸ்து, தற்காப்பு வேலைகளைச் செய்ய வாலிபர் தொண்டர் படையைத் திரட்டல், தேவை யேற்பட்டபோது சாத்வீக எதிர்ப்பு முறையைக் கையாளுதல்—இவைகளே இத்திட்டத்தின்படி சமீபத்தில் செய்ய வேண்டிய காரியங்களாக இருந்தன. ஸ்ரீ அரவிந்தர், இப்புதுக்கட்சியானது காங்கிரஸைக் கைப்பற்றி அதை தேசீய வேலைக்கு வழிகாட்டும் ஒரு ஸ்தாபனமாகவும், சுதந்திரப் போராட்டம் வெற்றியடையும் வரையில் அரசாங்கத்திற்குள் ஒரு அரசாங்கம் போலவும் செய்யவேண்டுமெனக் கருதினார்.

### தேசீயக் கல்விக் கழகம்

நிற்க, ஸ்ரீ அரவிந்தர் தாம் கல்கத்தா வந்துசேர்ந்த சில நாட்களுக்கெல்லாம் புது இயக்கத்தில் தோன்றின இரு பிரதான ஸ்தாபனங்களுடன் சம்பந்தம் வைத்துக்கொண்டார். தேசீயக் கல்விக் கழகம் இவைகளில் ஒன்றாகும்.

சர்க்காரின் சுற்றறிக்கைக்குக் கீழ்ப்படியாமல் ராஜீய ஊர்வலங்கள், கூட்டங்களில் கலந்துகொண்ட பல மாணவர்கள் சர்க்கார் கலாசாலைகளிலிருந்தும் கல்கத்தா சர்வ கலாசாலையின் மேற்பார்வையிலிருந்த கல்லூரிகளிலிருந்தும் வெளியேற்றப்பட்டிருந்தனர். முக்கியமாக இவ்வித மாணவர்களுக்குக்கல்வி போதிக்க ஏற்பாடுசெய்வது அவசியமாயிருந்ததால், 1905, நவம்பர் மாதம், 17-ந்தேதி, தேசீயக் கல்விக் கழகம் அமைக்கப்பட்டு, அதன் ஆதரவில் கல்கத்தாவில் ஒரு கலாசாலையும் ரங்கபூரில் ஒரு கலாசாலையுமாக இரு கலாசாலைகள் திறக்கப்பட்டன. 1906, ஆகஸ்டு மாதம், 23-ந் தேதி, ஸ்ரீ அரவிந்தர் புதிதாக அமைக்கப்பட்ட கல்கத்தா தேசீய கலாசாலையின் தலைமை ஆசிரியராக ரூ. 150 சம்பளத்தில் அமர்ந்தார். துரதிருஷ்டவசமாக, தேசீய கல்விச் சங்க நிருவாகிகள் அதிகார வர்க்கத்தினருக்குப் பயந்து, சர்க்கார் பள்ளிகளிலிருந்து வெளியேற்றப்பட்ட மாணவர்களுக்கு இடம் தர மறுத்தனர். மேலும், தேசீய கலாசாலையானது அக்காலத்தில் அமுலில் இருந்து வந்த கல்வி முறையை ஒழிப்பதற்காக ஏற்படவில்லையென்றும், அதற்கு அனுபந்தமாகவே இருக்கவேண்டுமென்றும் அவர்கள் கூறினர். அடிப்படையான கொள்கைகளில் ஸ்ரீ அரவிந்தருக்கும் கல்விச் சங்க நிருவாகிகளுக்கும் இவ்விதமான வித்யாச மேற்படவே, ஒரு வருஷத்திற்குள்ளாக (13–7–1907ல்) கலாசாலைத் தலைமைப் பதவியை அவர் விட்டுவிட வேண்டியதாயிற்று.

### 'வந்தே மாதரம்' பத்திரிகை

ஸ்ரீ அரவிந்தர் கலாசாலைப் பதவியிலிருந்து விலகியவுடனே, அதற்குச் சற்றுமுன்பு விபின சந்திர பாலர், சியாம சுந்திர சக்ரவர்த்தி, ராஜா சுபோத சந்திர மல்லிக், உபேந்திரநாத் பானர்ஜி, பிரம்மபந்தப் உபாத்தியாயர் முதலியோரால் ஆரம்பித்து நடத்தப்பட்டு வந்த "வந்தேமாதரம்" பத்திரிகையைச் சேர்ந்து அதை மும்முரமாக நடத்தவாரம்பித்தார். அப்பத்திரிகையை தேசீயக் கட்சியார் எடுத்துக் கொண்டு போதிய பண உதவிசெய்து, அதைத் தங்களது அங்கீகரிக்கப்பட்ட பத்திரிகையாக ஆக்க வேண்டுமென அவர் வற்புறுத்தவே, ஒரு கூட்டுக் கம்பெனி யேற்பட்டது. ஸ்ரீ அரவிந்தரும் அதன் நிருவாகி

களுள் ஒருவரானர். அவர் கல்கத்தாவுக்கு வந்தது முதற் கொண்டே அப்பத்திரிகைக்கு விஷயதானம் புரிந்து கொண்டு வந்தார். வெகு சீக்கிரத்திலேயே அதன் தலையங்கங்களை யெல்லாம் அவரே எழுத வாரம்பித்தார். மிதவாதிகளின் குறுகிய மனப்பான்மையையும் சூழ்ச்சிகளையும் அம்பலத்திலிழுத்தும், தேசீயவாத தத்துவத்தையும் திட்டங்களையும் விளக்கியும், மக்கள் மேனட்டு நாகரிகமாய வலையில் சிக்காது இந்தியக் கலாசாரங்களைக்கடைப் பிடித்துத் தியாகமும் தன்னடக்கமும் கொண்டு ஒழுக வேண்டியதன் அவசியத்தை வலிவுறுத்தியும், அதில் ஆவேசந்தரும் கட்டுரைகள் தினந்தோறும் வெளிவந்தன. அவைகளின் வன்மையும், கம்பீரமும், நேரிடையாகச் சுருக்கென்று படும் தொனியும், தைரியமான சுதந்திரப் போக்கும், சீரிய லட்சியமும், மக்களின் மீதுள்ள நம்பிக்கையும், எல்லாம் பொதுமக்களின் உள்ளத்தை ஆகர்ஷித்தன. 'வந்தே மாதர'த்தின் வாசகர்களின் எண்ணிக்கை திடீரென ஏறிற்று. இந்தியப் பத்திரிகை யுலகில் அதுவரையில் எப்பத்திரிகையும் அடையாததொரு பிரதான நிலையை யடைந்து, தேசீயவாதத்தின் தனிப்பெரும் பத்திரிகையாகத் திகழ்ந்தது. அப்பத்திரிகையில் வெளிவந்த கட்டுரைகளைச் சியாம சுந்திர சக்கரவர்த்தியைப் போன்ற சில சிறந்த எழுத்தாளர்கள் எழுதினராயினும், பத்திரிகையின் தொனியும், போதையும் ஸ்ரீ அரவிந்தருடையவையாகவே காணப்பட்டன. மக்களை வீறுகொண்டெழுந்துத் தியாகம் செய்ய முன்வரத் தூண்டிய தெளிவான கம்பீரமான சங்கநாதம் அவருடையதே. பாரத சமுதாயத்தின் உயர்ந்த எதிர்கால வாழ்வு விஷயமாக அப்பத்திரிகை காட்டிய தளரா நம்பிக்கையும், எல்லாவற்றையும் பாரத அன்னையின் ஊழியத்திற்கே அர்ப்பணம் செய்ய வேண்டுமென அது கொண்ட உறுதியும், எல்லாம் ஸ்ரீ அரவிந்தரிடமிருந்தே வந்தன. அப்பத்திரிகையின் மூலமாகவே அவருக்கும் பெரும்பான்மையான இந்திய மக்களுக்கும் நெருங்கிய தொடர்பேற்பட்டது. இனி அவரே இப்புதிய இயக்கத்தின் தலைவரானர். இவ்வண்ணம், அவர் பத்திரிகையின் ஆருயிராயிருந்தும், பத்திரிகையின் பத்திராதிபரெனத் தம்மை வெளிப்படையாக ஈடுபடுத்திக்கொள்ளவில்லை.

## குற்றச்சாட்டும் விடுதலையும்

1907-ல் "யுகாந்திரம்" என்னும் தீவிர வங்க வாரப் பத்திரிகையினின்றும் ஒரு கட்டுரை 'வந்தே மாதர'த்தில் மொழிபெயர்க்கப்பட்டு வெளியாயிருந்தது. இதுதான் சாக்கு என அரசாங்கத்தினர் ஸ்ரீ அரவிந்தரையே அவ் வெளியீட்டுக்குப்பொறுப்பாக்கி அவர் மீது ராஜ நிந்தனைக் குற்றஞ்சாட்டினர். போலீஸ் கோர்ட்டு விசாரணையில், ஸ்ரீ அரவிந்தரே பொறுப்புள்ள பத்திராதிபரெனச் சர்க்கார் ருசுசெய்ய முடியவில்லை யாதலால், 1907 செப்டம்பரில் விடுதலை யடைந்தார். இவ்விசாரணையினால் ஸ்ரீ அரவிந்தருக்கு ஜனங்களிடையே இருந்த மதிப்பும் செல்வாக்கும் பன்மடங்கு அதிகரித்தன. இது சமயமே மகாகவி ரவீந்திரநாதர் "ஓ அரவிந்தா! ரவீந்திரன் வந்தனத்தை ஏற்றுக்கொள்" என்னும் பாட்டில் ஸ்ரீ அரவிந்தரின் பெருந் தியாகத்தையும் ஆண்மையையும், அவர் தம் தெய்வ வீரத்தினாலும் தெய்வ வாக்கினாலும் மக்களை யெழுப்பிய பெருமையையும் புகழ்ந்து பாராட்டினார்.

## தலைவர்கள் மறைவு

நிற்க, சர்க்கார் மேன்மேலும் பலமான அடக்கு முறைகளைக் கையாண்டனர். ஸ்ரீ அரவிந்தருக்கு விரோதமாகச் சாட்சி சொல்ல மறுத்த விபின சந்திர பாலர், கோர்ட்டை அவமதித்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டு, ஆறு மாதம் சிட்சிக்கப்பட்டு, வங்க நாட்டுக்கு வெளியேயுள்ள பக்ஸார் சிறைக்குக் கொண்டுபோகப்பட்டார். ராஜ நிந்தனைக் குற்றத்திற்காகச் சிறைப்படுத்தப்பட்ட பிரம்ம பந்தப் உபாத்தியாயர் விசாரணை முடியு முன்னரே உயிர் துறந்தார். இவ்விரு பெருந்தலைவர்களின் மறைவினால் புது இயக்கத்திற்கு ஒரு பெரிய பலக்குறைவு ஏற்பட்டது. இதனால் ஸ்ரீ அரவிந்தர் வங்க தேசீயக் கட்சியின் தனிப் பெருந்தலைவராக இருந்து மேடைகளில் பேச வேண்டியதாயிற்று.

## மிதவாதிகளும் தேசீய வாதிகளும்

1907-ல் நவம்பர் மாதத்தில் நடைபெற்ற மிதுனபூர் ஜில்லா மகாநாட்டில் ஸ்ரீ அரவிந்தரும் தேசீயவாதிகளின்

தலைவர் என்ற உரிமையில் கலந்து கொண்டார். இம்மகா நாட்டில்தான் வங்க தேசியவாதிகளுக்கும் மிதவாதிகளுக்கும் பகிரங்கமாகப் பிளவேற்பட்டது. இரு கட்சிகளுக்குள் ஏற்பட்ட இப்பிளவு நாடெங்கும் பரவியது. பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு மனுச்செய்துகொண்டு அவர்கள் அளிப்பதைப் பக்தி விசுவாசத்துடன் ஏற்றுக்கொண்டு திருப்தியடைவதா? அல்லது தன் கையே தனக்குதவியென்றிருந்து, சக்தியின் ஊற்றைத் தங்களுக்குள்ளேயே கண்டு அதை வளர்த்து, தேசிய கலாசாரங்களைப் பாதுகாத்து, கடவுளை நம்பிப் போராடுவதா? என்பதே பிரச்னையாயிருந்தது. இரு கட்சியினரும் முழுமுரமாகவே வேலை செய்தனர். மிதவாதிகள் சர் பிரோஸ்ஷா மேத்தா, ராஷ் விகாரி கோஷ், சுரேந்திரநாத் பானர்ஜி முதலியோரையும், தேசியவாதிகள் திலகரையும் அரவிந்தரையும் தங்கள் தங்கள் தலைவர்களாகக் கொண்டிருந்தனர்.

## சூரத் காங்கிரஸ்

1907-ல் மிதவாதிகளின் கோட்டையாயிருந்த சூரத்தில் காங்கிரஸ் கூடியது. அச்சமயம், 1906-ல் காசி காங்கிரஸில் வங்க விஷயமாக நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை மிதவாதிகள் ரத்துசெய்யச் சூழ்ச்சி செய்து வருவதாக தேசியவாதிகள் அறிந்தனர். திலகர் அவர்களின் சார்பாகக் காங்கிரஸ் பொதுமண்டபத்தில் எழுந்து காசி காங்கிரஸ் தீர்மானங்களை ஊர்ஜிதப்படுத்தவேண்டுமென்றும், அது சமயம் விடுதலையடைந்திருந்த லாலா லஜபதிராயே அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட உரியவரென்றும் வற்புறுத்தினர். இது விஷயமாக தேசியவாதிகளுக்கும் மிதவாதிகளுக்கும் போராட்டமேற்பட்டு காங்கிரஸ் சிதறுண்டது. அது சமயம் தேசியவாதிகள் தனித்துக்கூடின மகாநாட்டில் ஸ்ரீ அரவிந்தரே அக்கிராசனம் வகித்தார்.

## ஸ்ரீ அரவிந்தரின் ஆவேச மொழிகள்

சூரத் காங்கிரஸ் கலைந்தபின் ஸ்ரீ அரவிந்தர் பம்பாய் மாகாணத்திலும் மத்திய மாகாணத்திலும் சுற்றுப் பிரயாணம் செய்து, முக்கியமான இடங்களில் தேசிய தத்துவத்

தின் பல அம்சங்களை விளக்கிப் பேசி மக்களிடையே நாட்டன்பை எழுப்பினர். அவர் தம் சொற்பொழிவுகளில், அடிக்கடி, இந்நாட்டின் சுதந்திர இயக்கத்தை ஆண்டவனே நடத்துகிறனென்றும், அவனது சக்தியே அனைத்தையும் நடத்துகிறதென்றும், அச்சக்தியே பாரத அன்னையாக வடிவெடுத்திருக்கிறதென்றும், பாரத அன்னையின் குழந்தைகளாகிய இந்திய மக்கள் அனைவரும் அவளை வழிபட்டு அவள் பணி புரிந்து அவளது விடுதலைக்காக ஒன்றுபட்டு உழைக்க வேண்டுமென்றும் வீராவேசத்துடன் முழங்கினர். அவர் மொழிகளிலே ஒரு தெய்வத்தொனியும் மின்சாரசக்தியு மிருந்தன. அவரைக் கேட்டவர்கள் விழித்தெழுந்து வீராவேசமும் புதியநம்பிக்கையும் கொண்டனர். அவரது தூய வாழ்வும், தன்னல மறுப்பும், தெள்ளறிவும், ஆத்மஞானமும், கலைத்திறனும், தீர்க்க தரிசனமும், மக்களது உள்ளத்தைக் கவர்ந்தன. இவ்விடத்தில் ஸ்ரீ அரவிந்தரின் தேசீய தத்துவங்களைச் சற்று ஆராய்வது இன்றியமையாதது.

## ஸ்ரீ அரவிந்தரின் தேசீய தத்துவங்கள்

முதலாவதாக, ஸ்ரீ அரவிந்தர் தீரத்துடன் ஒரு உயர்ந்த லட்சியத்தைத் தேசத்தினருக்கு எடுத்துரைத்தார். இந்த லட்சியமானது, அரசாங்கத்தினிடம் பக்தி செலுத்தி அவர்களுடன் ஒத்துழைத்து, நிருவாகத்தில் அதிகப்பதவிகளைப் பெறுவதோ, அல்லது தொலைவிலுள்ள ஒரு காலத்தில் குடியேற்ற நாடுகளிலுள்ள சுய ஆட்சி அந்தஸ்தைப் பெறுவதோ அல்ல; பாரத சமுதாயம் தனது தனி வாழ்வை நிறுவிக்கொள்ளுவதே இந்த லட்சியமாகும். மக்கள் தியாகம் செய்து பெறுவதற்குரிய லட்சியம் இது ஒன்றேயாகும். இந்திய மக்கள் ஒரு சமுதாயமாக வாழவும் மரிக்கவும் விரும்புகின்றனரென்று ஸ்ரீ அரவிந்தர் ஒருவரே முதல் முதலாகக் கம்பீரமாக எடுத்துரைத்தார். இந்த அபிலாஷையை எடுத்துரைத்ததோடு அவர் நின்றுவிடவில்லை. இதற்குப் பின்கண்டவாறு ஒரு தத்துவ முறையான ஆதாரத்தையும் தந்தார்.

இப்புவியில் மக்கள் செய்ய அனுப்பப்பட்ட வேலையானது, கடவுளை அனுபவத்தில் கண்டு, புற வாழ்க்கை

யில் அவரை வெளிப்படுத்த வேண்டுமென்பதேயாகும். நமது தனி வாழ்வில், நமது குடும்பத்தில், சமூகத்தில், சமுதாயத்தில், கடைசியாக, மக்களினத்தில் நம்மை நாம் நிறைவுபடுத்திக் கொண்டால்தான் இந்த அனுபவத்தையடைய முடியும்.

சமுதாயத்தில் நமது வாழ்வை நிறைவேற்றுவது எங்ஙனம்? அன்னியராட்சியில் ஒடுங்கி நமது தனிச்சிறப்பை அன்னியரது வடிவமைப்பில் இழந்து விட்டால், இது ஒருக்காலும் முடியாது. ஆகவே, நமது தனித்தன்மையையுணர்ந்து அதை அனுபவமாக அடையவேண்டும். சுதேசியம் ஒன்றே இதற்குச் சரியான வழி. அதை அனுஷ்டித்தால்தான் நமது தனித்தன்மையை நாம் உணர முடியும். இதுவே ஸ்ரீ அரவிந்தரின் முக்கிய கொள்கை. இது வெறும் ராஜீயக் கொள்கையன்று. இதற்குப் பின்னணியில் நம்மை வேதம் உபநிடதங்களுக்கு அழைத்துச் செல்லக்கூடிய ஒரு மகா தத்துவம் அடங்கியுள்ளது.

இரண்டாவதாக, தனி வாழ்வையும் சமுதாய வாழ்வையும் நிறைவேற்றுவதற்குச் சுதந்திரம் அடிப்படையானது. ஆகவே, சுதந்திரமே தேசிய வளர்ச்சியின் லட்சியமாகும். நாட்டின் சுதந்திரத்திற்காக ஆர்வங்கொள்வதே வாழ்வின் மந்திரமாகும்.

மூன்றாவதாக, இதுவரையில் எவரும் கேட்டிராத தோரணையில் நாட்டுக்கும் மக்களுக்கும் சுதந்திரத்தை அவர் துணிவுடன் கேட்டது எங்ஙனம்? தாய்நாட்டின் மீதுள்ள அளவு கடந்த பக்தியும் நம்பிக்கையுமே அவரது தீரத்தின் ரகசியமாகும். நாட்டன்பு அவரது வாழ்வின் வெறியாக இருந்தது. மக்களின் ஏழ்மையையும், தரித்திரத்தையும், நோயையும், மகிமையையும் பிரபாவத்தையும் வடிவில் பிரத்தியட்சமாகக் கண்டு, அவைகளையும் நமக்கு எடுத்து உரைத்தார்.

நான்காவதாக, லட்சியத்தை அடைவதற்குச் சுதேசியமே தகுந்த வழியென்றும். அதை எவ்விஷயங்களிலும் அனுஷ்டிப்பதற்கு வலிமையும், ஆண்மையும், தீரமும் வேண்டுமென்றும் அவர் கூறினர். "பலவீனர்களுக்கு

ஆன்ம தரிசனமில்லை'' என்னும் உபநிடத வாக்கியம் அவரது காதில் எப்போதும் ஒலித்துக்கொண்டிருந்தது. ஆகவே, "நம்பிக்கையைக் கைவிடாதே; உனது திடநம்பிக்கையின்படி நட; இடர் நேரிடுமாயின் பொறுமையுடன் சகித்துக்கொள். நீ வினை புரிகையிலும் துயருறுகையிலும் வலிமையுடனிரு,'' என்று விடாது முழங்கினர்.

ஸ்ரீ அரவிந்தர் தமது சுற்றுப்பிரயாணத்தை முடித்துக்கொண்டு 1908-ம் ஆண்டில் ஜனவரி மாதக் கடைசியில் வெற்றி முரசொலிக்கக் கல்கத்தா வந்து சேர்ந்தார்,

## ஸ்ரீ அரவிந்தர் யோகம் பயிலல்

அவரது சுற்றுப் பிரயாணத்தின்போது நடந்த ஒரு விசேஷ சம்பவத்தை இங்கு குறிப்பிடுவது அவசியமாகும். ஸ்ரீ அரவிந்தர் சூரத் காங்கிரஸுக்குப் பின் பரோடா சென்றிருந்தபோது, அங்கே விஷ்ணு பாஸ்கர லேலே என்னும் ஒரு பிராம்மண யோகியைக் கண்டு, அவரைத் தமது யோக மார்க்கத்தில் உதவும்படி வேண்டினர். அந்த யோகியரும் அதற்கிணங்கி, மனத்தில் ஒருவித எண்ணமும் சிந்தனையுமிராதபடி அதை முற்றிலும் சூனியமாக்கிவிட வேண்டுமென உபதேசித்தார். அங்ஙனமே, ஸ்ரீ அரவிந்தர் மூன்று நாட்கள் அப்பியாசம் செய்ய, அவரது மனம் முற்றிலும் அமைதியுற்றது. அக்காலத்திலும் ஸ்ரீ அரவிந்தர் பிரசங்கம் புரிந்துவந்தார். பிரசங்கம் செய்யும்போது தமது மனம் அமைதியாகவும் வெறுமையாகவுமே இருந்ததாயினும், ஏதோ ஒரு உயர்ந்த சக்தி தம்மைச் சாதனமாகக் கொண்டு தம் மூலமாகச் சொற்பொழிவு நடத்தி வந்ததை யுணர்ந்தார். ஸ்ரீ அரவிந்தர் கல்கத்தா சென்றபின், யோகி லேலே அங்கே அவரைக் கண்டு சாதனையைப்பற்றி விசாரித்தார். அதற்கு, ஸ்ரீ அரவிந்தர் தாம் யாதொன்றையும் முயற்சியுடன் செய்யவில்லையென்றும், பகவானே சாதனையை நடத்திவருகிறாரென்றும், தம் வினைகளெல்லாம் பகவானது திருவுள்ளத்தின்படியே நடக்கின்றன வென்றும் சொன்னார். ஸ்ரீ அரவிந்தர் தாம் இருந்த இங்கிலையை பத்தினியாருக்கு 17-2-07ல் எழுதிய கடிதத்தில் குறிப்பாகக் கூறியிருப்பதைக் காணலாம்.

## ௪. அலிபூர் வழக்கும் சிறைவாசமும்

ஸ்ரீ அரவிந்தர் கல்கத்தாவுக்குத் திரும்பிவந்தவுடன், வழக்கம்போல 'வந்தேமாதரம்' பத்திரிகையில் எழுதத் தொடங்கினார். தேசீய இயக்கம் நாளுக்குநாள் வலுத்தது. அரசியல் வானம் இருண்டு குமுறிக்கொண்டு வந்தது. இங்கிலேயில் அரசாங்கத்தினர் வாளாவிருக்கப் போவதில்லை யென்பதை ஸ்ரீ அரவிந்தர் உணர்ந்தார். "மரணமா? வாழ்வா?" என்று அவர் தொடர்ச்சியாக எழுதிய கட்டுரைகளில் தேசீயப் போராட்டத்தில் நேரிடக் கூடிய பல ஆபத்துக்களினுலும் கஷ்டங்களினுலும் மக்களின் எழுச்சி தளர்ந்துவிடாமலிருப்பதற்காகத் தேசீய இயக்கத்தின் தத்துவங்களை மிகத் தெளிவாக எடுத்துரைத்து, இந்திய சமுதாயம் உண்மையாகவே விடுதலையடைய உறுதிகொண்டிருந்தால், சுதந்திரதேவி கேட்கும் காணிக்கைகளை ஒளிமறைவின்றியும், பிரதிபலன் ஒன்றையும் எதிர்பாராமலும், ஆன்ம பரிபூரணமொன்றையே இலக்காகக்கொண்டு யாவற்றையும் அவளது பலிபீடத்தில் சம்பூர்ணமாக அர்ப்பணம் செய்துவிடச் சற்றும் பின்வாங்கலாகாதென்றும் வற்புறுத்திவந்தார். இக்கட்டுரைகளும் இன்னும் இதர முக்கியமான கட்டுரைகளும் சேர்க்கப்பட்டுத் தனிப் புத்தகங்களாக அச்சடிக்கப்பட்டன. இவை இந்தியாவெங்கும் ஏராளமாகச் செலவழிந்ததானது, சுதந்திர அபிமானிகளாகிய இந்தியமக்களிடையே ஸ்ரீ அரவிந்தருக்கு இருந்த அபாரமான செல்வாக்குக்கு இன்னுமோர் அத்தாட்சியாக இருந்தது.

### வெடிகுண்டு நிகழ்ச்சி

அரசாங்கத்தினர் இச்சுதந்திர இயக்கத்தை எவ்விதம் ஒரே அடியாக நசுக்கலாமென ஆலோசித்து வருகையில் பின்கண்ட சம்பவம் நடந்தது. 1908, ஏப்ரல் மாதம், 30-ந்தேதியன்று இரவு, புரட்சி இயக்கத்தைச் சேர்ந்த சில வாலிபர்கள் தங்களது குறிதவறி ஒரு வண்டியின்மீது வெடிகுண்டொன்றை எறிய, அது அவ்வண்டியில் பிரயாணம் செய்துகொண்டிருந்த இரு ஐரோப்பிய ஸ்திரீ

களின்மீது பட்டு, அவர்கள் உயிர்துறந்தனர். போலீசார் பல வீடுகளைச் சோதனைப்போட்டுப் பல வாலிபர்களைக் கைது செய்தனர்.

## ஸ்ரீ அரவிந்தர் கைது செய்யப்படல்

மே மாதம் 2-ந்தேதி, காலை சுமார் 5 மணி இருக்கும். 'நவசக்தி' காரியாலயத்தின் மேல்மாடியில் ஸ்ரீ அரவிந்தர் ஒரு அறையில் படுத்துக்கொண்டிருந்தார். திடீரென, சூபரிண்டெண்டெண்டு கிரேகன், இன்ஸ்பெக்டர் விநோத விகாரி குப்தா, இவர்களின் தலைமையில் ஆயுதம்தாங்கிய போலீஸ்காரர்கள் வீட்டிற்குள் நுழைந்து, ஸ்ரீ அரவிந்தரின் தங்கையாகிய சரோஜினி தேவியின் மார்பை நோக்கி ஒரு கைத்துப்பாக்கியைக் காட்டி பயமுறுத்தினர். சரோஜினி தமது தமையனரை எழுப்ப, போலீசார் அறையினுள் நுழைந்து ஸ்ரீ அரவிந்தரைக் கயிற்றினல் கட்டிக் கையில் விலங்கிட்டனர். பிறகு, சுமார் பதினொரு மணி வரையிலும் வீட்டிலுள்ள பெட்டி பேழைகளையெல்லாம் சோதனைபோட்டு, ஸ்ரீ அரவிந்தர் எழுதிய கட்டுரைகள், காவியங்கள், கதைகள், முதலிய யாவற்றையும் சுருட்டிக்கொண்டு அவரைப் போலீஸ் ஆபீசுக்கு அழைத்துச் சென்றனர். இரண்டு நாட்களுக்குப்பின், போலீசார் அவரை முதன் முதலாகப் போலீஸ் மாஜிஸ்டிரேட்டான தார்ன்ஹில் முன்னிலையிலும், பின்னர் அலிபூர் ஜாயிண்ட் மாஜிஸ்டிரேட்டான பிர்லி முன்னிலையிலும் அழைத்துச் சென்றனர். * மே மாதம் 18-ந்தேதி பிர்லி முன்பு ஆரம்ப விசாரணை தொடங்கிற்று. அவ்விசாரணை முடிந்தபின், அக்டோபர் மாதம் 23-ந்தேதி, செஷன்ஸ் கோர்ட்டில் ஜட்ஜ் பீச்கிராப்ட்டின் முன்பு விசாரணை நடந்தது. ஸ்ரீ அரவிந்தர் பொதுஜனங்களைப் புரட்சிசெய்யத் தூண்டினரென்று காட்டுவதற்காக, அவருடைய சொந்த கடிதங்கள், தத்துவ, கலை சம்பந்தமான நூல்கள், பத்திரிகைக்கு எழுதிய கட்டுரைகள், முதலிய யாவும் சர்க்கார் தரப்பில் சாட்சியமாக வைக்கப்பட்டன.

* ஸ்ரீ அரவிந்தர் கைதியான வரலாறு, அவர் எழுதியுள்ள 'காராகஹினி (சிறைவாச வரலாறு)' என்னும் நூலினின்று எடுக்கப்பட்டது.

## வழக்கு விசாரணை

ஸ்ரீ அரவிந்தரது சார்பில் கோர்ட்டில் வழக்காடுவதற்குச்சுமார் 60,000 ரூபாய் வரையில் தேவையாயிருந்தது. அதற்காக அவருடைய தங்கை ஸ்ரீமதி சரோஜினி கோஷ், "ஸ்ரீ அரவிந்தர் காப்பு நிதி" என ஒரு நிதி ஆரம்பித்து அறிக்கை வெளியிட்டார். வங்காளத்தின் மூலைமுடுக்குகளிலிருந்தும் இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் படித்தவர் பாமரர் முதலிய அனைவரும் பணமனுப்பினர். ஸ்ரீ அரவிந்தரின் ஐரோப்பிய நண்பர்களும் அமெரிக்கா, ஆஸ்திரேலியாவிலிருந்து அவருடன் இளமையிற் படித்த சகாக்களும் பணஉதவி செய்தனர். வழக்கை நடத்த பணத்தை வாரி இறைக்க வேண்டியதாயிருந்தது. இத்தனைக்கும், ஸ்ரீ அரவிந்தரின் பிரதான வக்கீலாயிருந்து வழக்கை நடத்தினவரும் அவரது நெருங்கிய நண்பருமான ஸ்ரீ சித்தரஞ்சன தாஸ் ஊதியமின்றி உழைத்தார்.

விசாரணை பல நாட்கள் நடந்தது. அதன் இறுதியில், ஸ்ரீதாஸ் எட்டு நாட்கள் தமது கட்சியை கோர்ட்டார் முன் எடுத்துக் கூறினார். அவரது சட்ட நிபுணத்துவம் நிறைந்த வாதமும், சொற்பொழிவின் திறமையும், உருக்கமான பேச்சும் எல்லோரது உள்ளத்தையும் கவர்ந்தன. அவர் தமது உரையின் இறுதியில், ஸ்ரீ அரவிந்தர் கோர்ட்டாருக்கு விடுத்த அறிக்கையை வாசித்துக் காட்டினர். அதுவருமாறு :

### ஸ்ரீ அரவிந்தரது அறிக்கை

"நான் எனது சார்பாகச் சொல்லுவதெல்லாம் இதுவே. எனது தாய்நாட்டுக்குச் சுதந்திரம் என்னும் லட்சியத்தைப் போதித்தது சட்ட விரோதமானதென்று சொன்னல், நான் குற்றவாளியென ஒப்புக்கொள்கிறேன். சட்டம் அவ்வண்ணமாயிருந்தால், நான் குற்றஞ் செய்திருக்கிறேன் என்று என்னைத் தண்டிக்கும்படிக் கேட்கிறேன். ஆனல், நான் செய்யாத கொலைபாதகக் குற்றங்களை என்மீது சுமத்தாதீர்கள். எனது இயற்கை முழுதும் அத்தகையச் செயல்களை அருவருப்புடன் எதிர்க்கின்றது. எனக்குள்ள மனோநிலையில் அவைகளை நான் ஒருக்காலும் செய்திருக்க முடியாது. சுதந்திர லட்சியத்தைப் போதிப்பது சட்டப்படி குற்றமாயின், நான்

அக்குற்றத்தைச் செய்தவனுவேன். அதை நான் என்றும் மறுக்கவில்லை. அதன்பொருட்டே என் வாழ்க்கையின் எதிர்காலச் சுகங்களையெல்லாம் தியாகம் செய்திருக்கிறேன். அதன்பொருட்டு வாழவும் அதற்காக உழைக்கவுமே கல்கத்தாவுக்கு வந்தேன். எனது விழிப்பு நேரங்களில் அதைப்பற்றியே சிந்தனை செய்தேன்; தூக்கத்திலும் அதைப்பற்றியே கனவு கண்டேன். அது குற்றமானுல், அது விஷயமாகச் சாட்சியங் கூறச் சாட்சிகளை யழைக்க வேண்டியதில்லை. இதோ நானே அதை ஒப்புக்கொள்ளுகிறேன். நான் கோர்ட்டாருக்கு விண்ணப்பிப்பதெல்லாம் இதுவே............அதுவே எனது குற்றமாயின் அதைச் சொல்லிவிடுங்கள். நான் எந்தகைய தண்டனையையும் மகிழ்வுடன் ஏற்றுக்கொள்கிறேன். கொஞ்சமும் சம்பந்தகாத சாட்சியங்களையும், நான் போதித்துவந்த உயர்ந்த லட்சியத்தின் மனம் கமழும் எனது எழுத்துக்களையும் ஆதாரமாகக் கொண்டு, நான் சிந்தனையிலும் கருதாத குற்றங்களை, நான் அருவருப்புடன் வெறுக்கும் செய்கைகளை, என்மீது ஏற்றப்பார்ப்பதுதான் எனக்கு வருத்தம் தருகிறது. நான் சுதந்திர லட்சியத்தைப் போதித்திருக்கிறேன். அதை நான் என்றும் மறுக்கவில்லை. மேனுட்டு ராஜீய தத்துவத்தின் கொள்கைகளை நான் ஏற்றுக்கொண்டு, வேதாந்தத்தின் சாகா வரம்பெற்ற போதனையுடன் அவைகளைக் கலந்து ஒன்றுபடுத்தியிருக்கிறேன். உலக மக்கட் கூட்டத்தில் இந்தியாவுக்கு ஒரு தலிவேலையுள்ளது என மக்கள் உணரும் பொருட்டு அதை நான் எனது நாட்டினருக்குப் போதிக்க வேண்டியவனுக இருந்தேன். அது எனது குற்றமாயின் நீங்கள் எனக்கு விலங்கிட்டு என்னைச் சிறைப்படுத்தலாம். அக்குற்றத்தை நான் மறுக்கப் போவதில்லை........."

**சித்தரஞ்சன தாஸரின் பொன்மொழிகள்**

பின்னர், முடிவுரையாக சித்தரஞ்சன தாஸர் பின்வரும் பொன்மொழிகளைப் பகர்ந்தார்.

"ஆகவே, நான் தங்களுக்கு (கோர்ட்டாருக்கு) விண்ணப்பம் செய்துகொள்ளுவது யாதெனில், குற்றம் சாட்டப்பட்டு இங்கு விசாரணைக்கு இழுக்கப்பட்டிருக்கும் இம்மனிதர், இந்நீதிமன்றத்தின் முன் மட்டுமல்ல, சரித்திர உயர் நீதிமன்றத்தின் முன்னிலையிலும் நிற்கிறுர். இதுவே நான் விண்ணப்பமாகக் கோருவது. இந்த வாதம் முடிந்து எல்லாம் மறதியில் மாய்ந்த வெகு காலத்திற்குப் பிறகும், இக்கூச்சலும் கிளர்ச்சியும்

அடங்கின வெகு காலத்திற்குப் பிறகும், அவர் மறைந்த பல ஆண்டுகளுக்குப் பிறகும், அவர் தேசபக்திக் கவியாகவும், தேசியத்தின் தீர்க்கதரிசியாகவும், மன்பதையின் அன்பராகவும் மதிக்கப்படுவார். அவர் மரித்துமறைந்த பல்லாண்டுகளுக்குப் பிறகும் அவர் செம்மொழிகள் இந்நாட்டில் மட்டுமல்ல, கடல்கடந்த, மிகத் தொலைவிலுள்ள நாடுகளிலும் விடாது எதிரொலித்துக் கொண்டிருக்கும். ஆகவேதான், அத்தகைய பதவியிலுள்ள இம்மனிதர் இந்நீதிமன்றத்தில் மட்டுமல்ல, சரித்திரத்தின் உயர் நீதிமன்றத்தின் முன்னிலையிலும் நிற்கிறார் என்று சொல்லுகிறேன். நீதிபதியவர்களே! தாங்கள் சொல்லவேண்டிய தீர்ப்பைப்பற்றி ஆலோசிக்கும் நேரம் நெருங்கிவிட்டது. அஸெஸ்ஸர் கனவான்களே! உங்களது தீர்ப்பைப்பற்றி ஆலோசிக்கும் நேரமும் வந்துவிட்டது..."

1909, ஏப்ரல் மாதம், 13-ந்தேதி, அஸெஸ்ஸர்கள் ஸ்ரீ அரவிந்தர் குற்றவாளியல்லவென ஏகோபித்துத் தங்களது அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர். சற்றேறக்குறைய ஒரு மாதத்துக்குப் பின் ஜட்ஜ் பீச்கிராப்ட் அஸெஸ்ஸர்களின் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொண்டு, பிரிட்டிஷ் சட்டத்தின் சுதந்திரத்தைப் போதிப்பது குற்றமாகாதெனக்கூறி, ஸ்ரீ அரவிந்தரை விடுதலைசெய்ய உத்தரவிட்டார்.

### சிறைவாசம்

ஸ்ரீ அரவிந்தர் 1908, மேமாதம் 5-ந்தேதி முதல் 1909, மேமாதம், 6-ந்தேதிவரையில், சரியாக ஓராண்டு, அலிபூர் சிறைக்கோட்டத்தினுள் வாசஞ்செய்ய நேர்ந்தது. அவர் தனித்து வைக்கப்பட்டிருந்த, ஜன்னலில்லாத அறை சுமார் 9 அடி நீளமும் 5 அடி அகலமுமிருந்தது. அவர் விசாரணையிலிருந்தும், தண்டிக்கப்பட்ட இதர கைதிகளைப் போலவே எவ்விதத்திலும் நடத்தப்பட்டார். சாப்பிடுவதற்கும் தாகவிடாய் செய்வதற்கும் மற்ற இதர தேவைகளுக்குமாக ஒரு தட்டும் ஒரு கோப்பையும், படுப்பதற்கு ஒரு முரட்டுக் கம்பளியும் அவருக்களிக்கப்பட்டன. பொறுக்கமுடியாத வெயிலிலும் அச்சிறு அறையில் அடைபட்டு அவதிப்பட வேண்டியிருந்தது. கொஞ்சகாலத்திற்குப் பிறகு, சிறையதிகாரிகள் அவரை அறைக்கு

வெளியிலே யிருந்த வராந்தாவில் காலையிலும் மாலையிலும் சற்று உலாவ அனுமதித்தனர். மெல்ல, மெல்ல, சிறை உணவு முதலிய பல அசௌகரியங்களுக்குத் தம்மைப் பழக்கிக் கொண்டார். முதலில் தமக்கேற்பட்டிருந்த தனிமையுணர்ச்சியும், மனச்சோர்வும், அமைதியின்மையும் சில நாட்களுக்குள் வரவர மறைந்து, கடைசியாகப் பரிபூரண அமைதி யேற்பட்டது. கடவுள் கண்மூடித்தனமாக யாதொன்றையும் செய்வதில்லை யென்றும், அவர் தம் சக்தியைச் சிறிதளவும் சிதறவிடாமல் சிறிய வினையொன்றிலிருந்தும் பெரியதொரு பலனை உண்டுபண்ணுகிறா ரென்றும், அவசியமானதொரு படிப்பினைக்காகவே இவ்வண்ணம் தாம் சிறைக்கனுப்பப்பட்டா ரென்றும் உணர்ந்தார். சிறைக்குள் கீதையையும் உபநிடதங்களையும் தருவித்துப் படித்து இந்து சநாதன தர்மத்தின் மேன்மையை யறிந்தார். கீதையைச் சாதனஞ் செய்கையில் இந்து தர்மத்தின் தத்துவங்களனைத்தையும் சாட்சாத்காரமாக அறிந்தார். பாரத மக்களது காப்பிலுள்ள பாரத தர்மம் உலகமெங்கும் பரவும் பொருட்டுப் பாரத நாட்டினுள்ளிருந்து அதை வழிநடத்தி விடுதலைசெய்யப் பகவான் திருவுள்ளங் கொண்டுள்ளான் என்னும் அருள்வாக்கைத் தம்முள்ளே கேட்டார். ஸ்ரீ அரவிந்தர் வராந்தாவில் உலாவுகையில், தாம் பார்த்த மரம், செடி, பட்சி, மாடு, சிறை மதில்கள், சிறைக் கதவின் இருப்புக் கம்பிகள், சிறைக் கைதிகள் முதலிய யாவற்றிலும் ஸ்ரீமந் நாராயணன் இருப்பதைக் கண்டார். அவர் பார்த்த ஒவ்வொரு பொருளின்மீதும் உயிரின்மீதும் இரக்கமும் அன்பும் ஊற்றெடுத்துப் பாய்ந்தன. அவர் பார்த்த எல்லாமே அவரைத் தழுவ வருவன போலிருந்தன. குழலூதும் கண்ணன் காட்சி தந்து தம்மைத் தழுவியதை யுணர்ந்தார். கோர்ட்டு விசாரணையின் போது, மாஜிஸ்டிரேட், சர்க்கார் வக்கீல், முதலிய அனைவரிடமும் பகவானையே கண்டார். தாம் எதிர் பார்க்காமல் தமது வழக்கை நடத்த முன்வந்த நண்பர் சித்த ரஞ்சன தாஸைக் கோர்ட்டில் முதலில் பார்த்தபோது, அவரிடமும் வாசுதேவனையே கண்டார். விடுதலைக்கான யாவற்றையும் பகவானே அவர் மூலமாகச் செய்வார் என்னும் வாக்கும் அவர் காதில் விழுந்தது. உடனே வக்கீலின் உதவிக்காகத்

தாம் எழுதி வைத்திருந்த குறிப்புக்களை யெல்லாம் கிழித்துப் போட்டு நிம்மதியுடனிருந்தார். இறுதியில், கடவுளது கிருபையால், ஸ்ரீ அரவிந்தரது கௌரவம் நிலைநிறுத்தப் பட்டது.*

* இவ்வரலாறு ஸ்ரீ அரவிந்தர் எழுதியுள்ள 'காராகஹனி' (சிறைவாச வரலாறு) என்னும் நூலினின்று எடுக்கப்பட்டது.

## ரு. உத்தரபாரா பிரசங்கம்

ஸ்ரீ அரவிந்தர் விடுதலை யடைந்து வெளி வந்ததும் வாழ்க்கையைப்பற்றிய தமது நோக்கு முற்றிலும் மாறி இருந்ததைக் கண்டார். தமது யோக சாதனையில் ஒரு புதிய அத்தியாத்ம ஒளியைக் கண்டபின்னர், அதை மேன் மேலும் பூரணப் படுத்துவதே கடவுள் தமக்கு விடுத்துள்ள வேலையென உணர்ந்தார். மக்கட்குலம் பரமனை நோக்கிச் செல்லும் பாதையில், சில பெரிய காரியங்களைச் சாதிப்ப தன் பொருட்டுத் தெய்வ சக்தியால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவனுக்கு, விருப்பு வெறுப்புக்களின் வழி செல்ல உரிமையில்லை. அவன் தனது ஒவ்வொரு விருத்தியையும் தெய்வ சித்தத்தின் போக்குடன் இசைந்து செல்லும்படிச் செய்யவேண்டும். சுயேச்சையாகக் கடவுளது ஆக்ஞைக் குட்பட்டு, அவனுக்குப் பரிபூரணமாகத் தன்னை அர்ப் பணம் செய்வதில்தான் தனது உண்மையான சுதந்திர முள்ளது என்பதை அவன் அறியவேண்டும். அவ்வண்ண மாகவே, எங்கும் வியாபித்திருக்கும் திருவிளையாடலின் பேரின்பத்தை அவன் அனுபவிக்க முடியும். இதை ஸ்ரீ அரவிந்தர் அலிபூர் சிறையில் சாட்சாத்காரமாகக் கண் டார்.

இவ்வனுபவமே ஸ்ரீ அரவிந்தரின் பிற்கால வாழ்க்கை யின் போக்குக்கும், கடைசியாக அவரது அரசியல் துற வுக்கும் மூலகாரணமாக விளங்குவதால், இவ்வனுபவத்தை விவரமாக அறிந்து கொள்ளுவது இன்றியமையாததாகும். அதிருஷ்ட வசமாக, ஸ்ரீ அரவிந்தர் சிறையிலிருந்து வெளி வந்ததும் உத்தரபாராவில் இந்து சமயப் பாதுகாப்புக் கழ கத்தின் ஆண்டு விழாவின் போது நிகழ்த்திய சொற்பொழி வில், இதை விவரமாகக் கூறியுள்ளார். உத்தரபாரா பிர சங்கம் எனப் பெயர் பெற்ற இச்சொற்பொழிவு வருமாறு:

உங்களது கழகத்தின் ஆண்டு விழாவில் பேசும்படி என்னை நீங்கள் அழைத்தபோது, நிகழ்ச்சி முறைப்படி இன்று பேச வேண்டிய விஷயமாகிய இந்து சமயத்தைப் பற்றிச் சில வார்த்தை கள் கூறலாமென நான் எண்ணியிருந்தேன். அவ்வெண்ணத்தை

நிறைவேற்றுவேனே என்னவோ நான் இப்போது அறியேன். ஏனெனில், நான் இங்கு அமர்ந்திருக்கையில், உங்களுக்கு, ஏன்? பாரத சமுதாயம் முழுமைக்குமே, நான் கூறவேண்டியதாயிருக்கும் ஒரு மொழி என் மனத்தில் உதித்தது. அம் மொழியை நான் சிறையிலிருந்த காலே முதன் முதலாகக் கேட்டேன். அதை என் நாட்டினருக்கு எடுத்துரைக்கவே சிறையினின்று வெளிவந்துள்ளேன்.

### தலைவர்கள் கலைந்தனர்

நான் இங்கு கடைசியாக வந்திருந்தது ஒரு வருடத்திற்குமேல் இருக்கும். நான் அப்போது தனியாக இல்லை. இந்திய தேசிய இயக்கத்தின் மாபெருந் தீர்க்க தரிசிகளுள் ஒருவர்* என்னுடன் இருந்தார். அது சமயம் அவர் சிறையினின்று வெளியே வந்திருந்தார். தாம் சொல்லவேண்டியிருந்த சொல்லைச் சிறைச்சாலையின் சிற்றறையில் மௌனமாகவும் ஏகாந்தமாகவும் கேட்பதன் பொருட்டே இறைவன் அவரை அங்கு அனுப்பினர். அவருக்கு நல்வரவு கூறவே நீங்கள் நூற்றுக்கணக்காக வந்திருந்தீர்கள். இன்று அவர் நம்மை விட்டுப் பிரிந்து ஆயிர மைல்களுக்கப்பால் வெகு தொலைவில் இருக்கிறார். என்னுடன் வழக்கமாகத் தொண்டு புரிந்து கொண்டிருந்த இன்னும் சிலரை நான் காண்கிலேன். நாடெங்கும் புயல்போன்று வீசிய அடக்குமுறை அவர்களை மூலைக் கொருவராகக் கலைத்துவிட்டது. இந்தத் தடவை நான் ஓராண்டு தனிமையில் கழிக்க நேர்ந்தது. நான் வெளியே வந்து பார்க்கையில், எல்லாம் மாறுதலடைந்திருப்பதைக் காண்கிறேன். எப்போதும் என்கூடவே இருந்து இணைந்து வேலை செய்து வந்த ஒருவர் † பர்மாவில் கைதியாக இருக்கிறர்; மற்றொருவர் வடக்கே காவலில் வைக்கப்பட்டு வாடுகிறார். நான் வெளியே வந்ததும், எனக்கு வழக்கமாக யோசனை கூறியும் ஊக்கமளித்தும் வந்த பெரியார்களைத் தேடினேன். அவர்களைக் காணவில்லை.

### எல்லாம் அவன் சித்தம்

அதுமட்டும் அல்ல. நான் சிறை சென்றபோது "வந்தே மாதரம்" என்னும் கோஷம் நாடெங்கும் ஒலித்தது. இம்மையில் உழன்று வந்த பல கோடி மக்கள் புத்துயிரும் புது நம்பிக்கையும் பெற்று வீறுகொண்டு எழுந்தனர். நான் சிறையினின்றும் வெளி வந்தபோது உற்றுக்கேட்டேன்; ஆனால் அம் முழக்கம் என் செவியில் விழவில்லை. அதற்கு பதிலாக நிசப்தமே நிலவியிருந்தது. நாடு பேச்சற்றுக் கிடந்தது. மக்கள் மதிமயக்க மடைந்தது போலிருந்தனர். நமது எதிர்கால வாழ்வைப் பூரணமாகப் பிரதிபலித்து

* விபின சந்திர பாலர். † பால கஙகாதர திலகர்.

விளங்கின இறைவனது வாளுக்குப் பதிலாக, மாலிட இடியையும் மின்னலையும் பொழியும் இருண்ட வானமே எங்கும் சூழ்ந்திருப்பது போலக் காணப்பட்டது. எவ்வழி செல்வதென எவருக்கும் புலப்படவில்லை. "இனி நாம் செய்யவேண்டுவது யாது? நாம் செய்யக்கூடியது என்ன?" என எல்லோரும் கேட்கத் தலைப்பட்டனர். எனக்கும் எவ்வழி செல்வதெனத் தெரியவில்லை. இனிச் செய்யவேண்டியது யாது? என்பதையும் நான் அறியவில்லை. ஆனால், அந்தக் கோஷத்தையும் அந்த நம்பிக்கையையும் எழுப்பின இறைவனது சர்வ வல்லமை பொருந்திய சக்தியே இந்த நிலைமைக்கும் காரணம் என்பதை மட்டும் நான் அறிந்தேன். அந்த இயக்கத்திலும் அதன் இரைச்சலிலும் விளங்கிய இறைவனே இந்தத் தயக்கத்திலும் அமைதியிலும் உள்ளான். பாரத சமுதாயம் சிறிது நேரம் பின்வாங்கி உள்முகமாகச் சென்று அவனது சித்தத்தை அறிந்து கொள்ளவே அவன் இவ்வமைதியை நம்மிடையே அனுப்பியுள்ளான். இவ்வமைதியினால் நான் மனந் தளர்ந்து விடவில்லை; இது எனக்குச் சிறையில் பழக்கமாகிவிட்டது. மேலும், நீண்டகாலச் சிறைவாசத்தில் நான் செயலற்று மௌனமாக இருந்தபோது தான் இந்தப் போதனையைப் பெற்றேன்.

விபின சந்திர பாலர் சிறையிலிருந்து வந்தபோது ஒரு செய்தியுடன் வந்தார். அது அருள் நிறைந்ததொன்றாகும். அவர் இங்கே ஆற்றின சொற்பொழிவு என் நினைவிலிருக்கிறது. அது அரசியல் சம்பந்தமானது எனச் சொல்லுவதற்கில்லை. அதன் கருத்திலும் உட்பொருளிலும் சமயமே விளங்கியது. சிறையில் தமக்கேற்பட்ட அத்யாத்ம அனுபவங்களையும், நம் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் சமுதாயத்திற்குள்ளும் உறையும் இறைவனையும் பற்றி அவர் பேசினார். பின்னர் அவர் நிகழ்த்திய விரிவுரைகளிலும், தேசிய இயக்கமானது சாதாரண சக்தியைவிட மேலானதொரு சக்தியினாலேயே நடத்தப்பட்டு வருகிறதென்றும், அதன் கருத்து உன்னதமானதென்றும் விளக்கினார்.

### ஆண்டவன் ஆணை

இன்று நானும் உங்களை மீண்டுமோர் தடவை சந்திக்கிறேன். நானும் சிறையிலிருந்து தான் வந்திருக்கிறேன். இன்றும் உத்தரபாரா வாசிகளாகிய நீங்களே என்னை முதன் முதலாக வரவேற்கிறீர்கள். இது அரசியல் சம்பந்தமான கூட்டமாக இராமல் சமயத்தைப் பாதுகாப்பதற்கெனவே அமைக்கப்பட்டுள்ள சங்கத்தின் ஆதரவில் நிகழும் ஒரு கூட்டமாக இருப்பதும் குறிப்பிடத்தக்கதொரு விஷயமாகும். விபின சந்திர பாலர் பக்ஸார் சிறையில் பெற்ற அருள்மொழியை ஆண்டவன் அலிபூர் சிறையில் எனக்

களித்தான். நான் சிறைவாசம் செய்த பன்னிரண்டு மாதங்களும், ஒவ்வொரு நாளும் அவன் அந்த ஞானத்தை எனக்கு வழங்கினன். நான் இப்போது சிறையினின்று வெளியே வந்திருப்பதால், அதை உங்களுக்கு அறிவிக்கும்படி எனக்கு ஆணையிட் டியிருக்கிறன்.

### நான் அவனது கருவியே

நான் சிறையிலிருந்து வெளியே வந்துவிடுவேனென எனக்குத் தெரியும். ஓராண்டு தனித்திருந்து பயிற்சிபெறுவதன் பொருட்டே நான் ஓராண்டு காவலில் வைக்கப்பட்டேன். இறைவனது திருவுள்ளம் நிறைவேறுவதற்குத் தேவையான காலத்திற்கும் அதிகமாக என்னை யார்தான் சிறையில் வைத்திருக்க முடியும்? நான் சொல்லுவதற்கு ஒரு சொல்லேயும், செய்வதற்கு ஒரு செயலேயும் அவன் எனக்கு அளித்திருக்கிறன். அச்சொல்லே நான் சொல்லி முடிக்குமுன் எந்த மானிட வலிமையும் என் வாயை அடக்க முடியாது. அச்செயலே நான் செய்து முடிக்குமுன், நான் எவ்வளவு அற்பமாயும் வலியற்றும் இருப்பினும், கடவுளின் கருவியாகிய என்னை எந்த மானிடச் சக்தியும் தடைசெய்ய முடியாது. நான் இப்போது வெளியே வந்துள்ளபடியால், இச் சொற்ப நேரத்திற்குள்ளே என் மனத்திலிருந்த கருத்துக்களை அதனின்றும் அகற்றி, நான் சொல்ல நினைத்திராத ஒரு சொல்லேச் சொல்லும்படி எனக்குக் குறிப்பாக உணர்த்தியிருக்கிறன். ஆகவே, நான் இப்போது பேசுவது அவனது விசையினுலும் நிர்ப்பந்தத்தினுலுமேயாகும்.

### எனது முறையீடு

என்னைக் கைது செய்து துரிதமாக லால் பஜார் போலீசுச் சாவடிக்குக் கொண்டுபோனபோது, அவன்மீதிருந்த நம்பிக்கை எனக்குச் சிறிது குலேந்தது; ஏனெனில், அவனது உட்கருத்தை நான் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகவே, சிறிது நேரம் நிலை தடுமாறி எனக்குள்ளேயே அவனிடம் முறையிட்டேன். "எனக்கு இவ்வண்ணம் நேர்ந்தது எங்ஙனம்? என் நாட்டு மக்களுக்குச் சேவை புரிவதே நீ எனக்கிட்ட வேலையெனக் கருதியிருந்தேன். அவ்வேலே முடிவுபெறும் வரையில் உனது பாதுகாப்பு எனக்கிருக்க வல்லவா வேண்டும்? அங்ஙனமாயின், என்மீது இத்தகைய குற்றஞ்சாட்டி என்னை இங்கு கொண்டுவந்திருப்பதன் காரணம் யாது?"

### தனிமையில் கேட்ட வாக்கு

ஒரு நாள் ஆயிற்று. இரண்டு நாட்கள், மூன்று நாட்களும் கடந்தன. பின்னர், என் உள்ளத்தினின்றும் உதித்த ஒரு வாக்கு "பொறுமையுடனிருந்து பார்" என்றது. நான் அமைதியுடன்

காத்திருந்தேன். என்னை லால் பஜாரிலிருந்து அலிபூருக்கு அழைத்துச் சென்று அங்கு மனித அரவமற்ற ஓரிடத்தில் ஒரு தனி அறையில் ஒருமாதம் சிறைப்படுத்தினர். அங்கு, ஆண்டவன் எனக்குச் சொல்லுவதென்ன? நான் செய்யவேண்டிய தென்ன? அவன் கூறுவதென்ன? என்பவைகளை அறிய, என்னுள்ளத்திலின்று எழும் அவனது வாக்குக்காக இரவும் பகலுமாகக் காத்திருந்தேன். இந்தத் தனிமையில்தான் நான் எனது முதல் அனுபவத்தையும் முதல் உபதேசத்தையும் பெற்றேன். நான் கைது செய்யப்பட்ட ஓரிரண்டு மாதங்களுக்கு முன்பு, எல்லாக் கருமங்களினின்றும் விலகித் தனிமையில் அமர்ந்து உண்முகமாகச் சென்று இறைவனுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டுமென எனக்கோர் அழைப்பு வந்தது. அது இப்போது எனது நிலைவுக்கு வந்தது. அப்போது நான் மனவுறுதியற்றிருந்தபடியால் அவ்வழைப்புக்கு இணங்கமுடியவில்லை. நான் மேற்கொண்டிருந்த பணியின்மீது எனக்கு அதிக பாசமிருந்தது. நான் இல்லாவிடின், வேலை நின்றுவிடக்கூடும் அல்லது அது கெட்டுப்போகலாம்; அல்லது அது நடைபெறாமலே போய்விடலாம், எனச் செருக்குற்றேன். ஆகவே, அதை விட்டு விட எனக்கு மனம் வரவில்லை. மீண்டுமோர் தடவை அவனது வாக்கைக் கேட்டேன். "தளைகளைத் தகர்த்தெறியும் வலிமை உன்னிடமில்லையாதலால், உன் பொருட்டு நானே அவைகளைத் தகர்த்தெறிந்தேன். ஏனெனில், அவை நீடித்திருக்கவேண்டும் என்பது எனது திருவுள்ளமன்று. அவ்வித நோக்கம் எனக்கு எப்போதும் இருந்ததில்லை. நான் உனக்கு வேறொரு வேலை வைத்திருந்தேன். அதற்காகவும், நீயாகத் தெரிந்துகொள்ள முடியாத ஒன்றை உனக்குப் போதிக்கவும், என் பணியைச் செய்வதற்கு உன்னைப் பயிலவுமே நான் உன்னை இங்கு கொண்டுவந்திருக்கிறேன்" என அவன் எனக்குச் சொல்லுவதுபோலிருந்தது.

### கீதையில் கண்ட சாதனை

பிறகு அவன் கீதையின் பிரதியொன்று எனக்குக் கிடைக்கும்படிச் செய்தான். அவனது சக்தி என்னுள்ளே புகுந்ததால், கீதையில் கண்டுள்ள சாதனையைச் செய்யமுடிந்தது. "விருப்பு வெறுப்பற்று இருக்கவேண்டும்; பலனைக்கோராமல் அவன் பணிபுரிதல் வேண்டும்; தன்னிச்சையைத் துறந்து அவனது கரங்களில் அமைதியும் நம்பிக்கையும் உள்ள ஓர் கருவியாக ஆதல் வேண்டும்; மேலோன் கீழோன், நண்பன் பகைவன், வெற்றி தோல்வி, இவைகளையெல்லாம் சமநோக்குடன் பார்க்கவேண்டும்; ஆயினும் அவனது பணியைக் கவனமாகச் செய்தல் வேண்டும்" எனக் கண்ணன் அருச்சுனனுக்கு உபதேசம் செய்தான். அவன் பணி செய்ய விரும்புவோருக்கும் அவன் அதையே உபதேசம் செய்கிறான். இவ்

வுபதேசங்களை நான் என் புத்தியினால் அறிந்து கொள்வதோடு நில்லாமல், எனது உள்ளனுபவத்திலும் உணரவேண்டியவனானேன்.

### சநாதன தருமத்தின் பெருமை

இந்து சமயத்தின் பொருள் எனக்கு விளங்கிற்று. இந்து சமயமே சநாதன தருமம் என நாம் அடிக்கடி கூறுகிறோம். ஆனால், நம்மில் வெகு சிலரே அச் சமயம் எத்தகையது என்பதை உண்மையாக அறிவர். பிற சமயங்கள் பெரும்பாலும் நம்பிக்கையையும் கோட்பாடுகளையும் ஆதாரமாகக் கொண்டு விளங்குவன. ஆனால், சநாதன தருமம் வாழ்க்கையே யாகும். வெறும் நம்பிக்கையை அது அவ்வளவாக வற்புறுத்துவதில்லை. அது வாழ்க்கையில் கையாளப்பட வேண்டியதொன்றாகும். மக்கட்குலம் உய்ய வேண்டி இந்தத் தருமம் பண்டைக்கால முதல் இந்நாட்டில் தனிமையாகப் போஷிக்கப்பட்டு வந்தது. இம்மதத்தை உலகிற் களிக்கவே பாரத நாடு எழுச்சி பெற்றுவருகின்றது. பிற நாடுகளைப்போன்று சுய நலத்திற்காகவோ, வலிமை கொண்டபின் எளியாரை மதித்து நசுக்கவோ அது எழவில்லை. தன் வசம் ஒப்படைக்கப்பட்ட சநாதன ஒளியை உலகின்மீது சொரியவே அது எழுச்சி பெற்றுவருகின்றது. பாரதத் தாய் தனக்காக அல்லாமல் மக்களினத்திற்காகவே என்றும் வாழ்ந்து வந்திருக்கிறாள்; தன் பொருட்டல்லாமல் மக்களினத்தின் பொருட்டே அவள் பெருமையுற்று விளங்குவதும் அவசியமாகும்.

### சிறையில் கண்ட காட்சி

ஆகவே, இந்து சமயத்தின் மூலாதார உண்மையை எடுத்துக் காட்டி, நான் தெளிவடையும்படிச் செய்வதே அவனது அடுத்த வேலையாகும். அவன், சிறைக் காப்பாளர்கள் என் மீது இரக்கங் கொள்ளும்படிச்செய்தான். அவர்கள் சிறையதிகாரியான ஆங்கிலேயனிடம் சென்று " இவர் தனியறையில் அடைப்பட்டு அவதிப்படுகிறார். காலையிலும் மாலையிலும் அரை மணி நேரமாவது இவர் தம் அறைக்கு வெளியே உலாவ உத்தரவு கொடுங்கள் " எனக் கேட்டனர். அவ்வண்ணமே உத்தரவாயிற்று. நான் அவ்விதம் உலாவிக்கொண்டிருக்கையில்தான் இறைவனது சக்தி மீண்டும் என்னுள் புகுந்தது.

**மற்ற மனிதர்களிடமிருந்து என்னைப் பிரித்துத் தனித்து வைத்திருந்த சிறையை நோக்கினேன். அதன் உயரமான மதில்கள் இனியும் என்னைச் சூழ்ந்து சிறைப்படுத்தவில்லை. வாசுதேவனே என்னைச் சூழ்ந்துகொண்டிருந்தான். என் சிற்றறைக்கு எதிரேயிருந்த மரக்கிளைகளின் கீழ் உலாவினேன். ஆனால், அது மரமாக எனக்குக் காட்சியளிக்கவில்லை; வாசுதேவனே ஸ்ரீ கிருஷ்ணனே அங்கு நின்று**

கொண்டும் தன் நிழலை என் மீது பரப்பிக் கொண்டும் இருந்ததைக் கண்டேன். சிறைக் கம்பிகளையும், வெறும் கிராதிகளாயிருந்த கதவையும் நோக்கினேன். மீண்டும் அங்கு வாசுதேவனையே கண்டேன். நாராயணனே பாராகாரனாக இருந்து என்மீது காவல் புரிந்தான். படுப்பதற்கென எனக்கு அளிக்கப்பட்ட முரட்டுக் கம்பளியின் மீது படுத்திருக்கையில் ஸ்ரீ கிருஷ்ணனின் கரங்கள் என்னைத் தழுவின. அக் கரங்கள் எனது நண்பனின், எனது காதலனின் கரங்களேயாகும்! ஆண்டவன் எனக்கு அளித்த ஆழ்ந்த காட்சியின் முதற்பயன் இதுவேயாகும். சிறையில் கைதியாயுள்ள கள்ளர், கொலைஞர், வஞ்சகர் அனைவரையும் நோக்கினேன். அவர்களை நோக்குகையில், வாசுதேவனது உருவமே என் கண்ணுக்குத் தென்பட்டது. இருளடைந்த அவர்களின் உள்ளங்களிலும், தீயவழியில் உபயோகம் செய்யப்பட்ட அவ்வுடலங்களிலும் நாராயணனையே கண்டேன். இக்கள்வர், கொலைஞர் பலரிடையே நான் கண்ட அனுதாபமும், நேசமும், தங்களது துரதிருஷ்ட நிலையிலும் அவர்கள் காட்டின கருணை என்னையும் வெட்கமடையச் செய்தன. அவர்களில் ஒருவன் ஒரு முனிவனைப் போலக் காணப்பட்டான். அவன் என் நாட்டுக் குடியானவன்; கபடமும் சாதி இறுமாப்பும் கொண்டுள்ள நாம் இழிவு படுத்தும் கீழ்மக்களில் ஒருவன். அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. கொள்ளைக்காரன் எனக் குற்றஞ்சாட்டி அவனுக்குப் பத்து வருடங்கள் கடுங்காவல் விதித்திருந்தனர்.

மீண்டுமொரு தடவை இறைவன் என்னைப் பார்த்து, "எவ்விதமான மக்களிடையே எனது பணியை ஒரு சிறிது செய்யும் பொருட்டு உன்னை அனுப்பியுள்ளேன், பார்! நான் கைதூக்கி விட்டுக் கொண்டிருக்கும் மக்கள் இத்தகைய இயல்புடையவர்கள். இது காரணம்பற்றியே அவர்களைக் கைதூக்கி விடுகிறேன்" எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

### நீதி மன்றத்தில் கண்ட காட்சி

கீழ்க் கோர்ட்டில் விசாரணை ஆரம்பமாயிற்று. எங்களை மாஜிஸ்டிரேட்டின்முன்கொண்டுவந்து நிறுத்தினர். அப்போதும், அதே உட்பார்வை எனக்குத் தொடர்ந்து இருந்துவந்தது. இறைவன் என்னை நோக்கி, "உன்னைச் சிறைப்படுத்தினபோது, நீ மனம் நெகிழ்ந்து உன் பாதுகாப்பு எங்கே என என்னிடம் முறையிட்டாயல்லவா? இப்போது மாஜிஸ்டிரேட்டையும் உனக்கு எதிராக வழக்கு நடத்தும் சர்க்கார் வக்கிலையும் பார்" எனப் பணித்தார்.

அவ்வண்ணமே பார்த்தேன். நான் பார்த்தது மாஜிஸ்டிரேட்டு அல்லர்; வாசுதேவனே, நாராயணனே நீதிபதி ஆசனத்தில் அமர்ந்திருந்தான். சர்க்கார் வக்கிலிடம் என் பார்வையைச் செலுத்தினேன். ஆனால், நான் கண்டது வழக்கை நடத்தும் சர்க்கார் வக்கீல்

**அல்லர்; எனது காதலனும் தோழனுமான ஸ்ரீ கிருஷ்ணனே அங்கு அமர்ந்து புன்னகை புரிந்தான்.**

"இப்பொழுது நீ பயப்படுகிறாயா? நான் எல்லா மனிதர்களிடத்திலும் உள்ளேன். அவர்களின் செயல்களையும் சொற்களையும் நானே மேற்பார்வையிட்டு நடத்துகிறேன். நான் உன்னை இன்னும் பாதுகாத்து வருகிறேன்; அஞ்சவேண்டாம். உன்மீது கொண்டுவரப்பட்ட இவ்வழக்கை என் வசம் விட்டுவிடு. அதைப் பற்றிய கவலை உனக்கு எதற்கு? நான் உன்னை இங்கே கொண்டு வந்திருப்பது விசாரணையின் பொருட்டல்ல; வேறு காரணத்திற்காக. என் வேலைக்கு இவ்வழக்கு ஒரு சாதனமே யொழிய வேறொன்றுமில்லை" என அவன் என்னைத் தேற்றினான்.

**சித்தரஞ்சன தாஸரின் பேருதவி**

பிறகு, செஷன்ஸ் கோர்ட்டில் விசாரணை ஆரம்பித்தது. அப்போது என் வக்கீலுக்கு உதவியாகப் பல குறிப்புக்களைத் தயாரிக்கலானேன். அவைகளில், எனக்கு விரோதமாகக் கொடுக்கப்பட்ட சாட்சியங்களில் எவை எவை பொய்யென்றும், எந்த எந்த விஷயமாகச் சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்யலாம் என்றும் காட்டியிருந்தேன். அநேகமயம் நான் எதிர்பாராத சம்பவம் ஒன்று நடந்தது. என் சார்பில் எதிர்வாதம் செய்வதற்கான ஏற்பாடுகள் திடீரென மாறி வேறொரு வக்கீல் என் பொருட்டு வழக்கை நடத்தி வந்தார். எதிர்பாராமல் வந்த அவர் என் நண்பரேயாவர். ஆனால் அவர் வருவதாகவே எனக்குத் தெரியாது. அவர் யார் என்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். என்னைக் காப்பதன் பொருட்டு தம்முடைய இதர சிந்தனைகளை எல்லாம் விலக்கி வைத்து, தொழிலின் இதர வேலைகள் யாவற்றையும் விட்டுவிட்டு, ஒருநாள் தப்பாமல் பல மாதங்கள் இரவோடு இரவாக உட்கார்ந்து பாடுபட்டுத் தமது உடல்நலத்தை முற்றிலும் கெடுத்துக் கொண்ட ஸ்ரீயுத சித்தரஞ்சன தாஸ்தான் அவர்.

அவரைப் பார்த்ததும் நான் திருப்தியடைந்தேன். ஆயினும் அவருக்காகச் சில குறிப்புக்களை எழுதுவது அவசியமென இன்னும் எண்ணினேன். பின்னர் அவ்வெண்ணம் என்னை விட்டகன்று, என் உள்ளத்திலின்றும் எனக்கொரு வாக்கு எழுந்தது. "இம்மனிதரே உன்னைச் சூழ்ந்து கொண்டிருக்கும் அபாயங்களிலின்றும் உன்னைக் காப்பார். அந்தக் குறிப்புத் தாள்களை எல்லாம் அப்புறம் வை. அவருக்குத் தேவையான குறிப்புக்களைக் கொடுக்க நான் இருக்கிறேன்; நீ வேண்டியதில்லை" என்பதே அவ்வாக்காகும். அது முதற்கொண்டு வழக்கு விஷயமாக என் வக்கீ

லுடன் நானாக யாதொன்றும் சொல்லவில்லை; ஒரு தகவல் கூடக் கொடுக்கவில்லை. எப்போதாகிலும் என்னைக் கேட்ட கேள்விக்கு நான் அளித்த விடையானது என் கட்சிக்குச் சாதகமாக இருக்க வில்லை. வழக்கை அவரிடமே விட்டுவிட்டேன். அவரும் அதை முற்றிலும் கைக்கொண்டு நடத்தினார். கடைசியாக, அது எவ்விதம் முடிந்தது என்பதை நீங்கள் அறிவீர்கள்.

**இறைவன் திருவுள்ளம்**

என் விஷயமாக ஆண்டவனது திருவுள்ளக்கருத்து என்ன என்பதை வழக்கின் தொடக்கத்திலிருந்தே அறிந்திருந்தேன். ஏனெனில், அதை நான் மீண்டும் மீண்டும் செவியுற்றேன். அடிக் கடி என் உள்ளத்திலிருந்து எழுந்த வாக்கு பின்வருமாறு சொன் னது:—" நானே நடத்துகிறேன்; அஞ்சேல்! நான் எக்காரியத்தின் பொருட்டு உன்னைச் சிறைக்குக் கொண்டுவந்தேனோ, அதன்மீது கவனஞ்செலுத்து. வெளியே வந்தவுடன், உன்னிடம் பயமோ, தயக்கமோ துளிக்கூட இருந்தலாகாது. இது நினைவிலிருக்கட்டும். நான்தான் இதைச் செய்கிறேன்; நீயல்ல, வேறெவருமல்லர்; இது ஞாபகத்திலிருக்கட்டும். என்ன கவலைகள் ஏற்படினும், என்ன அபாயங்கள், துன்பங்கள் வரினும், என்ன கஷ்டங்கள் நேரிடினும், எவைதாம் சாதிக்க முடியாதவையாக இருப்பினும், என்னால் முடி யாததோ, எனக்குக் கடினமாக இருப்பதோ யாதொன்றும் இடை யாது.

***சமுதாயத்தின் சிவனிலும், அதன் எழுச்சியிலும் நான் இருக் கிறேன். நான் வாசுதேவன்; நான் நாராயணன். எனது இஷ்டம் எதுவோ அது நடந்தே தீரும்; பிறர் விரும்புவது நடவாது. நான் செய்து முடிக்கத் திருவுள்ளம் கொண்டதை மானிட சக்தி எதுவும் தடுக்கமுடியாது.***

**என்னைவிட மேலான தியாகிகள்**

இதற்கிடையே, இறைவன் என்னைத் தனிக் காவலிலிருந்து வெளியே கொண்டுவந்து, என்னுடன் குற்றஞ்சாட்டப்பட்டவர் களுடன் என்னையும் வைத்தான். நீங்கள் எனது தியாகத்தையும் என் தாய்நாட்டின்மீதுள்ள அன்பையும் பற்றிப் பெரிதும் பேசி னீர்கள். நான் சிறையிலிருந்து வந்தது முதற்கொண்டு அவ்விதப் பேச்சையே கேட்டு வருகிறேன். அது எனக்குச் சங்கடமும் ஒரு சிறிது வேதனையும் தருவதாக இருக்கிறது. ஏனெனில், எனது பல வீனத்தை நான் அறிவேன். என் பிழைகளுக்கும் வழுக்குகளுக் கும் நான் இரையாகிறேன். நான் சிறை செல்லுமுன் இவற்றை உணராமலில்லை. ஆனால், நான் தனிக்காவலில் இருக்கையில் இவை மூண்டெழுந்து என்னை எதிர்த்த போதே இவற்றின் வலி

மையை முற்றிலும் உணர்ந்தேன். அது சமயமே, நான் பலவீனங்கள் மலிந்த ஒரு பிண்டமென்லும், என்னுள்ளே ஒரு உயரிய சக்தி புகுந்து நான் வலிமை பெற்றுலொழிய, சாதாரணமாகக் குற்றம் நிறைந்த, பரிபக்குவமற்ற ஒரு கருவியாகவே நான் இருப்பேன் என்றும் அறிந்தேன். அப்பொழுது நான் இவ் வாலிபர்களிடையே இருக்கலானேன். அவர்களில் பலரிடத்தில் ஒரு மகத்தான தீரமும், தன்னலத் தியாகமும் விளங்கக் கண்டேன். அவர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நான் ஒரு அற்பனே. ஓரிருவர் வன்மையிலும் குணத்திலும் என்னைவிட மேம்பட்டவர்களாக இருந்தனர். அது பெரிதல்ல: பலர் அவ்விதம் இருக்கக்கூடும். ஆனால், நான் பெருமிதம் கொண்டிருந்த அறிவாற்றலில் அவர்கள் என்னையும் மீறி நின்றதுதான் விசேஷம். ஆண்டவன் எனக்கு அடுத்தாற்போல் கூறினன். "இவர்களே எனது ஆணையினல் மலர்ந்து வரும் மகத்தான சமுதாயத்தின் இளஞ் சந்ததிகள். இவர்கள் உன்னைவிட மேலானவர்கள். நீ பயப்படுவதற்கு என்ன இருக்கிறது? நீ விலகி நின்றாலும் சரி, உறங்கினாலும் சரி, வேலை என்னவோ நிற்கப் போவதில்லை. உன்னை நான் ஒதுக்கி விட்டாலும், உன் காரியத்தை மேற்கொண்டு நடத்தவும், அதை இன்னும் அதிக சாமர்த்தியத்துடன் செய்யவும் கூடிய இளைஞர்கள் இதோ இருக்கின்றனர். இந்த இந்திய நாடு உய்ய உதவும் ஒரு சொல்லை அதற்குச் சொல்லவே உனக்கு நான் கொஞ்சம் சக்தி அளித்திருக்கிறேன்.''

### உண்மைபால் எனது நோட்டம்

பிறகு, திடீரென ஒரு சம்பவம் நடந்தது. அதிகாரிகள் உடனே என்னை ஒரு தனி அறைக்குள் கொண்டு சென்றனர். அக்காலத்தில் எனக்கு என்ன நடந்தது என்பதை நான் கூற விரும்பவில்லை. ஆனல், இதுமட்டும் சொல்லுவேன்; தினந்தோறும் ஆண்டவன் எனக்குத் தன் அற்புதங்களைக் காட்டி இந்து மதத்தின் சம்பூரண உண்மையை நான் சாட்சாத்காரமாக அறியும்படிச் செய்தான்.

முன்னர் எனக்குப் பல சந்தேகங்கள் இருந்தன. நான் இங்கிலாந்தில், அன்னியக் கருத்துக்கள், பாவனைகள், ஆசாரங்களினிடையே, நமக்கு முற்றிலும் புறம்பான சூழ் நிலையிலே வளர்ந்தேன். இந்து சமயத்திலுள்ள பல விஷயங்கள் வெறும் கற்பனைகள் என்றும், மதி மயக்கமென்றும், மாயையென்றும் நான் எண்ணி வந்ததுண்டு. ஆனல், இப்போது ஒருநாள் தவருமல் இந்து மதத்தின் உண்மைகளை என் மனத்தில் மட்டுமன்றி, என் உள்ளத்திலும், என் உடலிலுங்கூட உணர்ந்து தெளிந்தேன். அவை எனக்குச் சீவனுள்ள அனுபவங்களாகிவிட்டன. சட சாத்திரம் விளக்க முடியாத பொருள்கள் எனக்குப் புலனாயின.

நான் ஆண்டவனை முதன் முதலாக அணுகியபோது, முற்றிலும் ஒரு பக்தன் என்னும் முறையிலோ, ஞானி என்னும் முறையிலோ, அவனை நெருங்கவில்லை. வெகு காலத்திற்குமுன், அதாவது சுதேசி இயக்கம் ஆரம்பித்துப் பொதுவாழ்வு என்னை ஆகர்ஷித்த சில வருடங்களுக்குமுன், பரோடாவில் இருக்கையில், என் மனம் இறைவன்பால் சென்றது. நான் அதுகாலை அவனை அறிய முயன்றபோது எனக்கு அவனிடம் மனப்பூர்வமான நம்பிக்கை இருக்கவில்லை. நான் நாத்திகனாகவும் சமுசயவாதியாகவும் இருந்தேன். கடவுள் ஒருவர் இருக்கிறார் என்றுகூட நான் நிச்சயமாக இல்லை. அவரது சாந்நித்தியத்தை நான் உணரவில்லை. ஆயினும், ஏதோ ஒன்று, வேதங்கள், கீதை, இந்து சமயம் இவற்றின் உண்மைகளின்பால் என்னை ஆகர்ஷித்தது. இந்து யோகத்திலும் வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்ட இந்து மதத்திலும் எங்கேயாகிலும் ஒரு மகத்தான உண்மை இருக்கவேண்டுமென உணர்ந்தேன். ஆகவே, யோகத்தின்பால் மனஞ்செலுத்தி அதைப் பயிலவும், என் எண்ணம் சரிதானென்று கண்டுபிடிக்கவும் முடிவு செய்தபோது நான் பின்கண்ட பாவனையுடன் அவனைப் பிரார்த்தனை செய்தேன். "நீ இருப்பது உண்மையாயின், எனது உள்ளத்தை நீ அறிவாய். நான் வீடு பேற்றையோ, மற்றவர் கேட்கும் யாதொன்றையோ, கேட்கவில்லை என்பதை நீ அறிவாய். இப்பாரத சமுதாயத்தை உய்விக்கச் சக்தி வேண்டுமென்றுதான் நான் கேட்கிறேன். நான் அன்பு செலுத்தும் இம்மக்களுக்காக வாழவும், அவர்களுக்குத் தொண்டுபுரியவுமே உனது அனுமதியைக் கோருகிறேன். அவர்களுக்கு என் வாழ்நாட்களை அர்ப்பணம் செய்யவேண்டுமென உன்னைப் பிரார்த்திக்கிறேன்."

யோக சித்தி அடைய வெகு நாட்கள் முயன்றேன். கடைசியாக, ஒருசிறிது அதில் வெற்றியடைந்தேன். ஆனால், நான் எதை மிகவும் விரும்பினேனோ அதையடையாததால் எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. ஆகவே, சிறையின் தனிமையில், ஒதுக்கமாயிருந்த சிற்றறையின் ஏகாந்தத்தில், நான் அதையே மீண்டும் வேண்டினேன். "உனது ஆணை என்னவென்பதை எனக்குக் கூறுவாயாக. எனக்கு இன்னசெய்வது, இவ்விதம் செய்வது, எனத் தெரியவில்லை. எனக்கு உனது திருவாசகத்தைத் தந்து அருளுவாயாக" என்றேன். யோக நிலையில் இறைவனுடன் ஒன்றியிருக்கையில் இரு வாக்குகள் பிறந்தன.

### ஆண்டவன் ஆணைகள்

"உனக்கொரு பணி இட்டிருக்கிறேன். இப்பாரத சமுதாயத்தின் உய்வுக்கு உதவிசெய்வதே அப் பணியாகும். சமீபத்திலேயே

நீ விடுதலை பெறுவாய். இந்தத் தடவை நீ தண்டனையடைய வேண்டுமென்பதோ, அல்லது இதரர்களைப்போல நாட்டின்பொருட்டுச் சிறையில் கஷ்டங்களை அனுபவித்துக் காலங் கழிக்கவேண்டுமென்பதோ எனது சித்தமல்ல. நான் உன்னைப் பணிக்கே அழைத்திருக்கிறேன். அதுவே நீ கேட்டிருந்த ஆதேசம் (ஆணை) ஆகும். நீ வெளியே சென்று என் பணியைச் செய் என்று நான் உத்தரவு கொடுத்திருக்கிறேன்" இது முதல்வாக்கு.

இரண்டாவது வாக்கு வருமாறு:—"இந்து சமயத்தின் உண்மையைப்பற்றி உனக்குச் சில சந்தேகங்கள் இருந்தன அல்லவா? அச் சந்தேகங்கள் தெளியும் பொருட்டு, இவ்வாண்டு நீ தனிமையிலிருக்கையில் உனக்குச் சில விஷயங்களைக் கண்கூடாகக் காட்டியுள்ளேன். இந்த இந்து மதத்தை உலகம் மதிக்கும்படி நான் உயர்த்திக்கொண்டிருக்கிறேன். ரிஷிகள், முனிவர்கள், அவதாரங்கள் மூலமாக அதை நான் பரிபக்குவப்படுத்தியும் விருத்தி செய்துமிருக்கிறேன். அது இப்போது உலக சமுதாயங்களிடையே என் வேலையைச் செய்ய முற்பட்டிருக்கிறது. எனது வாக்கை வெளியிடுவதற்காக இச் சமுதாயத்தை எழுப்பி வருகிறேன். அதுவே சநாதன தருமம். இதற்கு முன் நீ அதை உண்மையாக அறிந்து கொள்ளவில்லை. இப்பொழுது அதன் ரகசியத்தை உனக்கு வெளிப்படுத்திவிட்டேன். உனது நாத்திகமும் சமுசயமும் உன்னை விட்டு நீங்கும்படிச் செய்துவிட்டேன். எவ்விதமெனில், உன் உள்ளேயும் புறத்தேயும், தூலமாகவும், மானசீகமாகவும் அத்தாட்சிகள் காட்டி உனக்குத் திருப்தியளித்திருக்கிறேன். நீ வெளியே செல்லும்போது **உன் நாட்டினரை நோக்கி, அவர்கள் புத்துயிர்பெற்று வருவது சநாதன தமருமத்திற்காகத் தான் என்றும், அவர்கள் உயிர்த்தெழுவது தங்கள்பொருட்டல்ல, உலகத்திற்காகவே, என்றும் விடாமல் கூறு. உலக சேவைக்காகவே நான் அவர்களுக்கு விடுதலையளிக்கிறேன்.** ஆகவே, பாரதநாடு முன்னேற வேண்டுமெனச் சொல்லும்போது சநாதன தருமம் முன்னேறவேண்டுமென்பது,நான் பொருள். பாரதநாடு பெருமையுறவேண்டுமெனில், சநாதன தருமம் பெருமையுறவேண்டும் என்றுதான் அருத்தம். பாரதநாடு விரிந்து பரவவேண்டுமென்று கூறும்போது சநாதன தருமம் விரிந்து பரவவேண்டுமென்பதுதான் கருத்து. அந்தத் தருமத்திற்காகவும் அந்தத் தருமத்தினாலுமே பாரதநாடு உயிர் வாழ்கின்றது. அம் மதத்தை மேம்படுத்த, நாட்டையே மேம்படுத்த வேண்டும். **நான் எங்கும் உள்ளேன்; எல்லா மனிதர்களிடமும், எல்லாப் பொருள்களிடமும், இந்த இயக்கத்திலும் உள்ளேன், என்பதை உனக்குக் காட்டியுள்ளேன். நாட்டிற்காக உழைப்பவரிடம் மட்டுமல்ல, அவர்களை எதிர்த்து வழிமறிப்போரிடமும் உள்ளேன். நான் ஒவ்வொருவரிடமும் உள்ளிருந்தே வேலைசெய்கிறேன். மக்கள் யாது செய்யினும், யாது எண்ணினும், அவர்கள் என் கருத்து நிறைவேற**

வதற்கு உதவியாக இருப்பார்களே யொழிய, வேறொன்றும் செய்ய முடியாது. அவர்களும் என்பணியைச் செய்கின்றனர். அவர்கள் என் விரோதிகளல்லர். என்கருவிகளேயாவர். உன் செயல்கள் யாவற்றினும், நீ எவ்வழி செல்கிறாய் என அறியாமலேயே நீ முன்னேறுகிறாய். ஒன்று செய்ய நினைத்து நீ மற்றொன்றைச் செய்கிறாய். ஒரு குறித்த பயனே நோக்காக இருக்கும்; ஆனால், உனது முயற்சிகளோ, அதற்கு வேறான அல்லது நேர் மாறான ஒரு பயனை உண்டு பண்ணும். இறைவனது சக்தியே வெளிப்பட்டுத் தோன்றி மக்களது உள்ளத்தில் வேலைசெய்து வருகிறது. வெகுகாலமாக இந்த எழுச்சியை நான் ஆயத்தப்படுத்தி வருகிறேன். இதற்கு இப்போது காலம் வந்திருக்கிறபடியால், இதை நானே நடத்தி நிறைவேற்றி வைப்பேன்."

### சநாதன தருமத்தின் சிறப்பு

நான் உங்களுக்குச் சொல்லவேண்டியது இதுவே யாகும். "சமயப் பாதுகாப்புக் கழகம்" என்பது உங்களது சங்கத்தின் பெயர். நன்று. இந்து சமயத்தைப் பாதுகாத்து அதை உலகின் முன் உயர் நிலைக்குக் கொண்டுவருவதே உங்கள் முன்னே உள்ள வேலையாகும். ஆனால் இந்து சமயம் என்பது என்ன? சநாதனமானது என நாம் கூறும் இந்தத் தருமம் என்ன? இந்து சமுதாயம் இச்சமயத்தை அனுசரித்து ஆதரித்து வந்திருப்பதாலும், சமுத்திரமும் இமயமும் சூழ்ந்து தனித்து நிலவும் இச் சம்புத் தீவில் இது வளர்ந்ததாலும், இப்புனிதப் பழமை நாட்டில் பல்லூழி காலமாகப் பாதுகாக்கப்பட்டு வருதற்கு இது ஆரிய இனத்தவருக்கு ஒப்படைக்கப்பட்டிருப்பதாலுமே இதற்கு இந்து சமயமெனப் பெயர் வந்தது. இது ஒரு நாட்டின் எல்லைக்குள் அடங்கியதல்ல. உலகில் எல்லையுட்பட்ட ஒரு பகுதிக்கே இது எப்போதும் விசேஷமாக உரியது என்பதில்லை. இந்து சமயம் என நாம் கூறுவது உண்மையாகவே சநாதன தருமமாகும். ஏனெனில், அது மற்றெல்லாச் சமயங்களையும் தன்னுள் அடக்கியுள்ள அகில லோக சமயமாக விளங்குகிறது. ஒரு சமயமானது அகிலமாக இராவிடின், அது சநாதனமாக இருக்க முடியாது. குறுகிய போக்குடையதாயும், சமய பேதங்களை வளர்ப்பதாயும், தனித்து நிற்பதாயுமுள்ள ஒரு மதம், சொற்ப காலமே, ஒரு குறித்த காரியத்தை நிறைவேற்றும் வரையிலுமே, நிலைத்திருக்க முடியும். இம்மதம் ஒன்றே லோகாயதத்தை வெல்லக் கூடியது. ஏனெனில், இது விஞ்ஞான சாத்திரத்தில் கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகளையும் தத்துவ விசாரணைகளையும் முன்னறிந்து தன்னுள் அடக்கியுள்ளது. இம் மதம் ஒன்றே இறைவனுக்கும் நமக்கும் உள்ள தொடர்பை மக்களுக்கு உணர்த்துவதோடு, மனிதன் அவனை அடைவதற்குக் கூடுமான

எல்லா வழிகளையும் தன்னுள் அடக்கி நிற்பது. இறைவன் எல்லா உயிர்களிலும் எல்லாப் பொருள்களிலும் குடிகொண்டுள்ளான்; அவனாலேயே நாம் இயங்கி உயிர் வாழ்கிறோம், என்னும் உண்மையை எல்லாச் சமயங்களும் ஒப்புக்கொள்ளுகின்றனவாயினும், இந்தச் சமயம் ஒன்றே அவ்வுண்மையை ஒவ்வொரு நிமிடமும் நமது வாழ்க்கையின் நடைமுறையில் வற்புறுத்துகின்றது. இவ்வுண்மையை அறிவதற்கும் நம்புவதற்கும் உதவியளிப்பது மட்டுமன்றி, நமது ஜீவனின் ஒவ்வொரு அம்சத்திலும் இதைச் சுயானுபவமாக அடைவதற்கும் வழிமுறைகளை வகுப்பது இம்மதம் ஒன்றே. உலகு வாசுதேவனின் லீலை என்பதை உலகிற்கு எடுத்துக் காட்டுவது இம் மதம் ஒன்றே. அந்த லீலையின் மிக நுட்பமான நியதிகளையும், மிக உன்னதமான விதிகளையும் விளக்கி, நாம் எவ்விதம் அந்த லீலையில் நமக்குரிய பாகத்தை நன்கு நடிக்கலாமெனக் காட்டுவது இது ஒன்றே. வாழ்க்கையின் மிகச் சிறு விவரங்களையும் சமயத்தினின்று பிரிக்காமலிருப்பது இது ஒன்றே. சாகா நிலையின் ரகசியத்தை அறிந்து மரண பயத்தை நம்மிடமிருந்து முற்றிலும் போகும்படிச் செய்திருப்பதும் இதுவே.

இன்று உங்களுக்குப் பேசுமாறு இறைவன் என் நாவிற் பொழிந்த சொல் இதுவேயாகும். நான் பேசக் கருதியிருந்ததை அவன் என் மனத்தினின்று விலக்கி விட்டான். அவன் எனக்கு அருளியதற்கு மேலாக நான் ஒன்றும் வழங்குவதற்கில்லை. அவன் எனக்குச் சொல்லிய சொல்லைத்தான் நான் உங்களுக்குச் சொல்ல வல்லேன். அதை இப்போது சொல்லியாய்விட்டது.

### சநாதன தருமமே சுதேசியம்

முன்னொரு சமயம் இதே சக்தியுடன் பேசினேன். அப்போது, இந்த இயக்கம் அரசியல் இயக்கமல்ல என்றும், சுதேசியம் அரசியலல்ல, அது ஒரு மதம், ஒரு கொள்கை, ஒரு நம்பிக்கையாகும் என்றும் கூறினேன். இன்று அதையே, ஆனால் வேறு விதமாக, மீண்டும் கூறுகிறேன். சுதேசியம் ஒரு கொள்கை, மதம், நம்பிக்கை என இனியும் கூறாமல், சநாதன தருமமே நமக்குச் சுதேசியம் என்கிறேன். இந்த இந்து சமுதாயம் சநாதன தருமத்துடன் உதித்து, அதனுடனேயே இணங்கி வளர்கின்றது. சநாதன தருமம் க்ஷீணிக்கும்போது சமுதாயம் க்ஷீணிக்கின்றது. சநாதன தருமம் அழியக்கூடுமானால் இந்து சமுதாயம் அதனுடன் அழியும். சநாதன தருமமே சுதேசியம். இதுவே நான் உங்களுக்குச் சொல்ல வேண்டிய நன்மொழியாகும்.

## ௯. பகிரங்கக் கடிதம்

ஸ்ரீ அரவிந்தர் 1909, மே மாதத்தில் விடுதலை யடைந்த போது தேசியக் கட்சி சிதறுண்டிருந்ததைக் கண்டார். பால கங்காதர திலகர் ஏற்கெனவே வட பர்மாவில் மாண்டலேயில் நீண்ட காலக் காவலில் வைக்கப்பட்டிருந்தார். அசுவினி குமார தத்தர், 'சஞ்சீவினி' பத்திரிகையின் ஆசிரியரான கிருஷ்ண குமார தத்தர், சுபோத சந்திர மல்லிக், முதலிய வங்காளத்தலைவர்கள் பலர் நாடு கடத்தப்பட்டனர். சிலர் தாமாகவே அன்னிய நாடுகள் சென்றனர். தேசியக்கட்சி இன்னும் உயிருடனிருந்த போதிலும், மிதவாதிகளே காங்கிரஸில் ஆக்கம் பெற்றிருந்தனர்.

### 'கர்மயோகி' பத்திரிகை

இந் நிலையில், ஸ்ரீ அரவிந்தர் தேசிய வாதிகளின் தனித்தலைவராக இருந்து தேசிய இயக்கத்தை உயிர்ப்பிக்க முயன்றார். இவ் வேலையில் தமக்கு உதவியாக ஆங்கிலத்தில் 'கர்மயோகி' என்னும் பத்தரிகையையும் வங்க மொழியில் "தர்மம்" என்னும் பத்திரிகையையும் வாரா வாரம் வெளியிடலானார். இப் பத்திரிகைகளின் மூலமாக, பாரத சமுதாயம் தபசினாலேயே பெருமை யுற்றிருந்த தென்றும், அத் தபசு வரவரக் குன்றியதனாலேயே மக்கள் படுகுழியில் விழுந்து தௌர்ப்பாக்கிய நிலையையடைந்தன ரென்றும், இழந்த அத்தியாத்ம சாதனையை மீண்டும் உயிர்ப்பித்து, பிரம்ம தேஜஸை மீண்டும் பெற்று, உண்மையை அனுபவத்தில் கொண்டு வருவதனாலேயே நாடு விடுதலை பெறுமென்றும் கூறினார். இத்துடன், இந்தியக் கலைகளில் காலத்திற் கொவ்வாதனவற்றைத் தள்ளி, நிரந்தரமாக தேசத்திற்கு நன்மை பயக்கக்கூடிய அம்சங்களை வைத்துக்கொண்டு, அவைகளைத் தொகுத்து ஒன்றோடொன்று சமரசப் படுத்த வேண்டுமென்றும் வற்புறுத்தினார். இவ் விரிவான நோக்குடனேயே, இவ்விரண்டு பத்திரிகைகளிலும் அத்தியாத்ம சாதனை, கலைப்பண்பு இவை சம்பந்தமாக உள்ள விஷயங்களை விமர்சனம் செய்து, சுவானுபூதியில் பிறந்த ஒளியினால் அவைகளை

விளக்கி, ஒரு புதிய பூரண கலைப்பண்பை வகுக்க ஆரம்பித்தார். மேலும், நடைமுறை அரசியலிலிருந்து முக்கியமான செய்திகளையும் சம்பவங்களையும் பொறுக்கியெடுத்து முற்போக்கான தேசியதத்துவத்தின் ஒளியில் அவைகளைச் சீர்தூக்கிப் பார்த்துக் குறிப்புரைகள் எழுதிவந்தார்.

## ஆவேச மொழிகள்

இதே காலத்தில், ஸ்ரீ அரவிந்தர் ஆங்காங்கு சென்று, கணீரென்றொலிக்கும் தமது புதிய திருவாக்கால் மக்களை எழுப்பி ஒரு புதிய ஆவேசத்தையும் தைரியத்தையும் தந்தார். ஜூலை மாதம் நடைபெற்ற ஜலகதி மகாநாட்டில் அவர் பேசுகையில், கடவுளே இவ்வியக்கத்திற்குத்தலைமை வகித்து இதை நடத்தி வருகிறாரென்றும், இவ்வடக்குமுறைகளின் மூலமாகக் கடவுளே நமது உறுதியைப் பரீட்சித்து நம்மை உருப்படுத்தி வருகிறாரென்றும், தேசியவாதிகளனைவரும் சிறை சென்றாலும் இயக்கம் நின்றுவிடாதென்றும், மக்கள் நாட்டின் பொருட்டுப் பெருந்தியாகம் செய்யவும், பல கஷ்டங்களை யனுபவிக்கவும் முன்வர வேண்டுமென்றும் கூறினார்.

## நாட்டவர்களுக்குப் பகிரங்கக் கடிதம்

ஜலகதி மகாநாட்டிற்குப் பிறகு, ஸ்ரீ அரவிந்தரை நாடு கடத்தப் போவதாகப் பலமான வதந்திகள் கிளம்பின. தாம் நாடு கடத்தப்பட்டால் என்ன செய்வதெனத் தெரியாது திகைத்து நிற்கக்கூடிய தேசியக் கட்சியினருக்கு வழிகாட்டும்பொருட்டு, அவர் ஜூலை மாதம் 31-ந் தேதி 'கர்மயோகி' பத்திரிகையில் "என் நாட்டவர்களுக்குப் பகிரங்கக் கடிதம்" என்னுமொரு கட்டுரையை வெளியிட்டார்.

அக் கட்டுரையின் முற்பகுதியில் இன்றும் பாரத மக்களுக்கு எழுச்சி தரக்கூடிய விழுமிய கருத்துக்கள் அடங்கியிருப்பதாலும், பிற்பகுதியில் தேசிய வாதிகளின் கொள்கைகளையும், அவர்கள் கால நிலைமையை அனுசரித்து ஒழுகவேண்டிய முறைகளையும் விரிவாக விளக்கியிருப்பதாலும், அதை அப்படியே கீழே மொழி பெயர்த்துள்ளோம்:

இன்று, இப் பாரத நாட்டில் தன் கடமையாற்றும் பொது நல ஊழியன், தனக்கு நாளை என்ன நேரிடுமோவென அஞ்சக்கூடிய ஒரு நிச்சயமற்ற நிலைமையிலிருக்கிறான். என்மீது சாட்டப்பெற்ற குற்றத்திற்கு ஆதாரமாக நம்பத்தகுந்த சாட்சியம் துளிக்கூட இல்லாதிருந்தும், ஒரு வருட காலம் தனிக் காவலில் வைக்கப் பட்டிருந்து, சமீபத்தில்தான் வெளிவந்துள்ளேன். நிரபராதியென விடுதலை யடைந்து விட்டதனாலேயே நான் கவலையற்றிருக்க முடியாது; ஏனெனில், என்மீது மீண்டும் ஏதாவதொரு குற்றஞ் சுமத்தவோ, முறைப்படிக் குற்றஞ் சாட்டிச் சாட்சியம் சோதிக்கக் கூடத் தேவையில்லாமல் இஷ்டப்படி ஆளைத் தூக்கி நாடுகடத்த அதிகாரமளிக்கும் ஓர் சட்டத்தைப் பிரயோகிக்கவோ கூடும். அதுவும், ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகள் வேட்டை நாய்களைப் போல நம்மீது சீறிக்கொண்டும், நாட்டுப் பற்றையும் நாட்டுப் பணியையும் பற்றிப் பேசத்துணியும் ஒவ்வொருவனையும் சர்க்கார் நாடு கடத்தி விடவேண்டுமென இடைவிடாமல் கூக்குரலிட்டுக்கொண்டும் இருக்கும்போது, உடல் சுதந்திரம் என்பது வெட்டிப்பேச்சே யாகும். கல்கத்தா போலீசார் என்னைத் தூக்கி நாடுகடத்தவேண்டிய தன் அவசியத்தைச் சர்க்காருக்கு வற்புறுத்தியிருக்கின்றனர் என்று ஒரு பலமான வதந்தி உலவுகிறது. எவ்வளவுதான் நாடு அமைதியாகவும், நமது நடவடிக்கைகளில் நாம்சட்டதிட்டங்களுக்கு உட்பட்டும் இருப்பினும், சிம்லா அதிகாரிகள் தயங்குவதுங்கூட, சர்வ வல்லமை பொருந்திய சர்க்கார் பாதுகாப்பாளர்களின் சொல்லே இறுதியில் செல்லும் எனவும் தெரிகிறது. இந் நிலையில், என் நாட்டவர்களுக்கும், விசேஷமாகத் தேசியக் கட்சியின் கொள்கைகளைத் தழுவியவர்களுக்கும், தற்காலத் தேவைகளையும் எதிர்கால உபாயங்களையும் விளக்குவது நலமெனக் கருதி, இக் கடிதம் வரைகின்றேன். நான் நாடு கடந்தப்பட்டால், இன்னது செய்வதென வழிதுறை அறியாமலிருப்பவர்களுக்கு இது வழி காட்டியாக உதவலாம். நான் மீண்டும் திரும்பி வராவிடின், இதுவே என் நாட்டவர்களுக்கு நான்விட்டுச் சொல்லும் கடைசி யான அரசியல் சாசனமாக இருக்கும்.

### புதிய தலைவனை எதிர்பார்த்து நில்லுங்கள்

தேசியக் கட்சியின் நிலைமை கடினமாக இருப்பினும், சமாளிக்க முடியாததல்ல. தலைவர்கள் தண்டனை அடைந்தாலோ, நாடுகடத்தப்பட்டாலோ, கட்சி சிதைந்து விடுகிறதெனச் சிலர் கூறுவர். இது, விஷயங்களை மேற்போக்காக ஆராய்வதினின்று வரும் பிழையாகும். கட்சி என்னவோ உயிரோடு இருக்கின்றது. அதன் வலுவும் செல்வாக்கும் முன்னைவிடக் குறைந்து விடவில்லை. ஆனால், அதற்கு வேண்டுவது ஒரு காரிய முறையும் தலைவனுமேயாகும்.

முன் சொன்னதை அதுவே எளிதில் வகுத்துக்கொள்ளலாம். பின் சொன்னதை இறைவனொருவனே அதற்கு அளிக்க வல்லவன். பெரிய இயக்கங்களெல்லாம், கடவுளால் அருளப்பட்டு, அவனது சக்தி பாய்ந்துசெல்லுவதற்கு வாய்க்காலாகவிருக்க இணங்கும் தலைவனுக்காகவே காத்திருந்து, அவன் வந்தபிறகே வெற்றியுற முன்னேறித் தங்கள் கருத்துக்களை நிறைவேற்றிக் கொள்ளுகின்றன. பெருஞ்செல்வாக்கும், மேதையும், உயரிய அருட்கொடைகளும் வாய்ந்தவரும், வேறு எந்த இயக்கத்தையும் நடத்தக் கூடிய பெருமை வாய்ந்தவருமான திட புருடர்களே இதுகாறும் நமக்குத் தலைமை வகித்திருக்கின்றனர். ஆனால், உலகெங்கும் பொங்கி வரும் புரட்சிப் பெருவெள்ளத்தில் பிரதானமாக விளங்கும் இவ்வியக்கத்தை நிறைவேற்றிவைக்க அவர்களாலும் முடியவில்லை. ஆகவே, எதிர்கால உரிமைகளைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ள தேசீயக் கட்சியார், என்ன துன்பங்கள், தோல்விகள் வரினும், அமைதியுடனும் நம்பிக்கையுடனும் இருந்தும், இறுதியில் வெற்றிபெறுவது திண்ணமெனக் கொண்டும், தாங்கள் இந்திய சுதந்திரத்துக்கு மட்டுமன்றி, உலகிற்கே பொறுப்புடையவர்களென மனத்தில் இறுத்தியும், புதிய தலைவனை எதிர்ப்பார்த்து நிற்கவேண்டும்.

### அறமே நமது பலம்

இதற்கிடையே, நமது நிலைமையில் பல இடுக்குகள் உள்ளபடியால், நாம் துணிவுடனும், ஆனால், எச்சரிக்கையாகவும் செல்ல வேண்டியதாக இருக்கிறது. நமது நிலைமை தூல பலத்தையல்ல, அறத்தின் வலிமையையே கொண்டதாகும். இந் நாட்டின் தூல பலமெல்லாம் இங்கு அமைந்துள்ள அரசாங்கத்திலிடமே உளது. நமது வெற்றி அதன் தற்கால உருவைக் குலைத்து அதன் அமைப்பை அடியோடு மாற்றவல்லது. அவ்வரசாங்கம் தன் தூல பலம் முழுவதையும் கொண்டு அந்த உருமாறுதலை எவ்வளவு காலம் தடுக்கமுடியுமோ அவ்வளவு காலம் தடுப்பது இயற்கையேயாகும். நாட்டிற் குரிய அற வலிமை யெல்லாம் நம்பால் உளது. நீதியும் இயற்கையும் நம் பக்கம் உள்ளன. மனிதன் அமைத்த சட்டம் எல்லாவற்றிற்கும் மேலாக உள்ள ஆண்டவனின் திருவுள்ளமே நமது செயலைத்தாங்கி நிற்கின்றது. இளமையும் எதிர்காலமும் நம்மை ஆதரிக்கின்றன. நாம் சாகாமல் எஞ்சி நிற்பதற்கும், இறுதியில் வெற்றியடைவதற்கும், அந்த அறத்தின் சத்தியையே நாம் சார்ந்திருக்கவேண்டும். பரபரத்து, ஆத்திரத்தின் வயமாகி, நாம் வலுவுற்றுள்ள அற நிலையைக் கைவிட்டு, நாம் மெலிவுற்றுள்ள தூல பலத்தை நம்பி எக்காரியத்திலும் இறங்கலாகாது.

### நமது லட்சியமும் முறைகளும்

சட்டம் எதுவும் கண்டிக்க முடியாத லட்சியமே நமது லட்சியமாகும். தற்கால அரசாங்கம் எதுவும் சட்ட விரோதமென வெளிப்படையாகக் கூற முடியாத முறைகளே நாம் விரும்பி வகுத்துக்கொண்ட முறைகளாகும். 'அவை சட்ட விரோதமானவை' என அது கூறுமாயின், நாகரிக அரசாட்சியெனக் கருதப்படுவதற்கு அது தன்னுரிமையை இழந்துவிடும். அந்த லட்சியத்தையும் அம் முறைகளையும் கடைப்பிடித்து, நமது இறுதியான வெற்றிக்கு அவைகளையே சார்ந்திருக்க வேண்டும். ஒரு சமுதாயம் நிலைத்திருக்கவேண்டின், சட்டதிட்டங்களுக்கு மரியாதை செலுத்தும் இயல்பு அதனிடம் விளங்குவது இன்றியமையாததாகும். அத்தகைய சிறப்பியல்பு இந்திய மக்களிடம் எப்போதுமே உண்டு. ஆகவே, சட்டதிட்டங்களின் படியே நாம் கண்டிப்பாக ஒழுக வேண்டும். ஆயினும், அதே சமயத்தில், நமது லட்சியமும் நமது பிரசாரமும் முன்னேறும் பொருட்டு, அச் சட்டதிட்டங்கள் நமக்களிக்கும் பாதுகாப்பையும் அவை நமக்கு இன்னும் விட்டிருக்கும் சிறுசுதந்திரங்களையும் ஒன்றுவிடாமல் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

### கொலைகள் அடக்குமுறையின் பலன்களே

நாட்டில் கலவரம் விளைவித்தச் சில்லறைக் கொலைகளுடன் நாம் சம்பந்தப்படவில்லை. அவைகளுக்கும் நமக்கும் யாதொரு தொடர்புமில்லை என ஒருதரம் தெளிவாகவும் திடமாகவும் கூறிய பிறகு இனியும் அவற்றைப் பற்றிய கவலை நமக்கு வேண்டியதில்லை. விஷம் போன்று கேடு தரும் கொள்கையின் விளைபயன்களே அவை. அக் கொள்கையைக் கையாளுவோர் தங்கள் பிழைகளினின்று விலகிக்கொண்டாலன்றி, விஷமரம் தன் மரபுக்கேற்பக் கனிதருவதை எம் மானுட சக்தியும் தடுக்க இயலாது. சட்டதிட்டங்களை நிர்ணயிப்பதிலோ, அவற்றைக்கொண்டு அரசு செலுத்துவதிலோ, யாதொரு பங்கும் பெற்றிராத நாம் இவ் விஷயத்தில் யாதொன்றும் செய்வதற்கில்லை. நாடுகடத்துவது, விசேஷ அறிக்கையின் மூலமாக அமுல் நடத்துவது, இவையே அறிவுடனும் ஆற்றலுடனும் ஆளத் தெரியாதவர்கள் பெரிதும் விரும்பும் சாதனங்களாகும். உறுதியாகவும் தீரமாகவும் நின்று பிரசாரம் செய்வதாலும், நமது நியாயமான திட்டத்தையும் உன்னதமான லட்சியத்தையும் அனுசரித்துப் பணி ஆற்றுவதனாலுமே நாம் அவற்றை எதிர்க்க முடியும்.

### நாம் கேட்பது ஒரு இனமாக வாழும் உரிமையே

சுயராச்சியம், அல்லது 'அன்னியரின் ஆதிக்கத்திற்கு உட்படாத பூரண சுய ஆட்சியே, நமது லட்சியமாகும். ஒவ்வொரு

சமுதாயமும் தனக்குரிய ஆற்றல்களைக் கொண்டும், தனது இயல்பு, லட்சியங்களுக்கு இணங்கவும், தனது சொந்த வாழ்க்கையை வாழ்வதற்கு உரிமை வேண்டுமெனவே நாம் கேட்கிறோம். நமது நாகரிகத்திற்குக் கீழ்ப்பட்ட ஒரு நாகரிகத்தை நம்மீது திணிக்கவும், உயர் தகுதியுடையோர் என்னும் சற்றும் பொருந்தாத காரணத்தைக் கொண்டு, நம் முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்ற அருஞ் செல்வங்களினின்று நம்மைத் தள்ளிவைக்கவும், அன்னியர்கள் உரிமை கொண்டாடுவதை நாம் மறுக்கிறோம். நீண்டகால அடிமை நிலையின் காரணமாக நமக்கு இயற்கையாகவுள்ள திறமையிலும் ஆற்றலிலும் குற்றங் குறைகளேற்பட்டிருப்பதை ஒப்புக்கொள்ளுகிறோமாயினும், அத் திறமையும் ஆற்றலும் மீண்டும் நம்முள்ளே உயிர்த்தெழுவதை உணருகிறோம். பல நூற்றாண்டுகளாக அனுபவித்த இன்னல் தோல்விகளின் ஊடேயும், ஒப்பற்ற தேசீய சக்தியானது இந் நாட்டு மக்களைப் பாதுகாத்து வந்திருப்பதையும், நேற்றுவரையிலுங்கூட நம்முன்னோர்கள் அருஞ்செயல்கள் ஆற்றிவந்திருப்பதையும், அன்னியருக்கு அடிமையுற்ற வேறெந்த நாடும் பெற்றிராத மேன்மையும் அருங்குணங்களும் வாய்ந்த சான்றோர் பலரும் இங்கு விளங்குவதையும் சுட்டிக் காட்டி, கேட்டற்கரிய இத்தகைய ஜீவ சக்தியையுடைய மக்களை, குழந்தைகளும் பலவீனர்களும் மலிந்ததோர் சமுதாயமெனத் தாழ்த்திவிட இயலாதெனக் கூறுகிறோம். நம் முன்னோர்களுக்கு நாம் எவ்விதத்தாலும் தாழ்ந்தவர்களல்லோம். நமக்கு அறிவும் தைரியமும் உண்டு. அளப்பரியதாயும், பலதிறப்பட்டதாயும், நமது இனத்திற்கே உரியதாயுமான திறமையும் உண்டு. அவற்றைச் செலுத்துவதற்கு ஓரிடமும் வாய்ப்புமே நாம் வேண்டுவனவெல்லாம். தேசீய அரசாங்கம், சுதந்திர சமூகம், பெருமை வாய்ந்த இந்தியக் கலைப்பண்புகள் இவையே அந்த இடத்தையும் வாய்ப்பையும் அளிக்கக் கூடியவை. அவை நமக்களிக்கப்படாத வரையில், அவற்றை அடைவதன் பொருட்டு இடைவிடாமல் கிளர்ச்சி செய்வதைத் தவிர, நமது அறிவுக்கும் தீரத்திற்கும் திறமைக்கும், வேறு என்ன வேலை உளது?

### பகைமையல்ல ஒற்றுமையே லட்சியம்

வேறு எந்த சமுதாயத்தினிடமோ, இந் நாட்டில் சட்டப்படி ஏற்பட்டுள்ள அரசாங்கத்தினிடமோ, பகைமை பாராட்டுவது நம்முடைய சுயராச்சிய லட்சியத்தில் அடங்கியதன்று. நாம் அதிகார வர்க்கத்தின் ஆட்சி முறையைக் காண்கிறோம்; அதை ஜன நாயக ஆட்சிமுறையாக ஆக்க விரும்புகிறோம். நாம் ஓர் அன்னிய அரசாங்கத்தைக் காண்கிறோம்; அதை இந் நாட்டிற் குரியதாக ஆக்கவே முயலுகிறோம்; நாம் ஓர் அன்னிய ஆதிக்கத்தைக் காண்

கிறோம்; அதை இந்தியமயமாக்கவே விரும்புகிறோம். இந்த ஆர்வத்தினின்று பகைமையும் பலாத்காரமுமே இன்றியமையாமல் ஏற்படுகின்றன எனக் கூறுவோர் பொய் பேசுவோரே யாவர். நமது லட்சியமான தேசபக்தி, அன்பையும் சகோதரத்துவத்தையும் ஆதாரமாகக் கொண்டது; அது நமது சமுதாய ஒற்றுமையுடன் நில்லாமல், அதற்கப்பாலும் சென்று மக்களினத்தின் இறுதியான ஒற்றுமையை எதிர்நோக்குகிறது. ஆனால், ஒற்றுமையெனில், ஆண்டானுக்கும் அடிமைக்கும், உண்போனுக்கும் ஊணுக்குமுள்ள ஐக்கியத்தையல்ல; சகோதரர்களாயும், சரிசமானவர்களாயும், சுதந்திரபுருடர்களாயும் உள்ளவர்களுக்குள்ள ஒற்றுமையைத்தான் நாடுகிறோம். ஒரு தனி இனமாகவும் சமுதாயமாகவும் ஒன்று சேர்ந்து வாழும் உரிமையை அடைய வேண்டுமென்றே நாம் கேட்கிறோம். ஏனெனில், மக்கட் குலத்தில் சகோதரத்துவம் இறுதியாகக் கைகூடுவதற்கு அது ஒன்றே உற்ற வழியாகும். தனிப்பண்புடைய மக்களை அழித்து விடுவதனாலும், புறத்தில் காணும் வேற்றுமைகளைத் துடைத்துவிடுவதனாலுமல்ல. உள் நாட்டில் ஒற்றுமைக்கு இடையூறாகவுள்ளனவற்றையும் பகைமை, வன்மம், மனஸ்தாபம், இவற்றின் காரணங்களையும் விலக்கிவிடுவதனாலேயே அச் சகோதரத்துவம் ஏற்படக்கூடும். நம் உரிமைகளுக்காகப் போராடுவதானது, அவற்றைத் தவறாக மறுப்போரைப் பகைப்பதாகாது. துன்பங்களை ஏற்று, விடாமல் முயலவும், எவருக்கும் அஞ்சாமல் உண்மையைத் தைரியமாக எடுத்துரைக்கவும், நம் உரிமைகளை நிலைநிறுத்தவும், முன்னேற்றத்தை மறுக்கும் திறனை நிலைகுலைக்கவும், நியாயமாக வற்புறுத்துதற்குரிய சாதனங்கள் யாவற்றையும், அறவலியின் ஆதாரமனைத்தையும் பயன் படுத்தவும் நாம் உறுதிகொண்டிருப்பதையே அது காட்டுகிறது.

### தேசியக் கட்சியின் வேலைத்திட்டம்

தன்னுதவியும் சாத்துவிக எதிர்ப்புமே நாம் கையாளும் முறைகள். நம் தொழில்களை வளர்ப்பது, நம் சச்சரவுகளை நாமே தீர்த்துக்கொள்ளுவது, பொதுக்கூட்டங்களில் ஒழுங்கையும் அமைதியையும் காப்பது, சுகாதார விஷயங்களைக் கவனிப்பது, நோயாளிகளுக்கும் துன்புற்றவர்களுக்கும் உதவியளிப்பது, பஞ்சத்தில் அடிப்பட்டவர்களின் இடர்களைத் தீர்ப்பது, நமது அறிவு வளர்ச்சிக்கும், தொழிலாக்கத்திற்கும் உடல் நலத்திற்கும் உகந்த கல்வி முறைகளை வகுப்பது, சட்டதிட்டங்களை எதிர்க்காமலும் அரசினரின் சட்ட ரீதியான அதிகாரத்தை மறுக்காமலும் முடிந்த வரையில் நமது உள்நாட்டு விவகாரங்களுக்கென நாமே ஒரு அரசாங்க அமைப்பை நிறுவிக்கொள்ளுவது, இவ்வழிகளில் நமது திற

மையைக் காட்ட ஒன்று கூடி நம்மை ஒழுங்குபடுத்திக்கொள்ளு வதே, தேசீயக் கட்சியார் வெளிப்படையாகவும் நிஷ்கபடமாகவும் ஏற்றுக்கொண்ட வேலைத்திட்டமாகும். அநேகமாக இவ் விஷயங் கள் எல்லாவற்றிலும் நமது திறமையைத் தெளிவாகக் காட்டும் அளவு வங்காளத்தில் நாம் முன்னேறியிருந்தோம். ஒரு வலுவான, ஒன்று பட்ட, நன்கமைந்த வங்க சமுதாயம் சீக்கிரத்திலேயே உரு வாகிவிடுமென்னும் உறுதி ஏற்பட்டிருந்தது. சூரத்தில் முற்றின நமது உட்போராட்டங்களும், அவற்றின் பின்னேடே ஆரம்பமான அடக்கு முறைகளும், இறுதியில் நம் அமைப்புக்களை அழித்தன. அதிகாரவர்க்கத்தின் குட்டித் தெய்வங்கள் சுதேசி இயக்கத்தின் தொண்டர்களையும் அபிமானிகளையும் பயமுறுத்தி அவர்களுடைய உறுதியை அடியோடு குலைத்தன. இவை நமது முன்னேற்றத்திற் குப் பெருந்தடைகளாகி, நம் எண்ணங்கள் நிறைவேறும் காலம் தற்போதைக்கில்லாமல் வெகு தொலைவிலேயே உள்ளதென நாம் ஐயுறும்படிச் செய்துவிட்டன. ஆனால், இத்தடை தாற்காலிக மானதே. நாம் வேண்டுவதெல்லாம், நமது தலைவர்களிடம் துணி வும், அரசியல் மேதையும், விவேகமுமே. அவைமட்டும் இருப்பின், மக்களிடம் துணிவும், நம்பிக்கையும் மீண்டும் துளிர்த்துவிடும்; அடக்குமுறைச் சட்டங்களுடன் கூட முரண்படாத புதிய அமைப்பு முறைகளை நாம் வகுத்துக்கொள்ள இயலும்.

### சாத்துவிக எதிர்ப்பு முறையின் மூலக்கருத்து

சாத்துவிக எதிர்ப்பு முறையானது ஒருவிதத்தில் தன்னுதவித் திட்டத்திற்கு ஓர் இன்றியமையாத உப பலமாக இருப்பதற்கும், மற்றொருவிதத்தில் அரசாங்கத்தை வற்புறுத்தவும் நெருக்கவும் ஒரு வழியாக இருப்பதற்கும் தோற்றுவிக்கப்பட்டது. சட்டங்கள் செய்வதிலும், பண நிருவாகத்திலும், ஆட்சி செலுத்துவதிலும், உண்மையான பங்கும் அதிகாரமும் நமக்களிக்கப்படாத வரையில் ஒத்துழைக்க மறுப்பதே இம்முறையின் மூலக் கருத்தாகும். பதி னெட்டாம் நூற்றாண்டில் அமெரிக்காவில் அரசியலமைப்பு விஷய மாக ஏற்பட்ட கிளர்ச்சியில் "பிரதிநிதித்துவம் இல்லையேல் வரியு மில்லை" என்பது குறிப்புச் சொல்லாக வழங்கியதுபோலவே, இருபதாம் நூற்றாண்டில் "அதிகாரமில்லையேல் ஒத்துழைப்பு மில்லை" என்பது நமது நியாயமான கிளர்ச்சியில் (நமக்குத்தான் அரசியலமைப்பு இல்லையே) குறிப்புச் சொல்லாக வழங்கவேண்டும்.

### பகிஷ்காரம்

இந்த ஒத்துழைப்பு மறுத்தலை 'பகிஷ்காரம்' என்னும் சௌகரியமான சொல்லில் அடக்குகிறோம். நம் செல்வங்களைச் சுரண்டும் தொழில்கள், அன்னியக் கல்வி முறை, அரசாங்க முறை,

நீதி பரிபாலனம், உத்தியோகஸ்தர்களுடன் உறவுகள், இவை யாவற்றிலும் ஒத்துழைக்க மறுப்பதே பகிஷ்காரம் எனப்படும். இந்த ஒத்துழையாமையை நாம் பூரணமாயும் ஒரே கண்டிப்பாயும் செய்யவில்லை என்பது வெளிப்படை. ஆயினும், நமது ஆன்ம பலத்தைக் கொண்டு எதிர்ப்பது மேன் மேலும் அவசியமாகும் போது, அதற்குத் தக்கபடி இம் முறையையும் விரிவாக்கி மேலோங்கச் செய்யவே கருதியுள்ளோம். இது நமது வழி முறையின் ஓர் அம்சம். தன்னுதவித் திட்டத்தின்படி நம்முடைய விவகாரங்களை நாமே ஒழுங்குபடுத்திக் கொண்டு செல்லும் மார்க்கத்தில் நாம் மேன் மேலும் பெறும் ஆற்றல்களுக்குத் துணையாகப் பகிஷ்காரத்தைப் பிரயோகிப்பது இன்றியமையாததாகிறது. இது நமது முறையின் மற்றோர் அம்சம். சுதேசக் கைத்தொழில்கள் ஆக்கம் பெறுவதற்கு அன்னிய நாட்டுச் சரக்குகளை விலக்குவது ஓர் அத்தியாவசியமான நிபந்தனையாகும். தேசீயக் கல்வியின் வளர்ச்சிக்குச் சர்க்கார் பள்ளிக்கூடங்களைப் பகிஷ்கரிப்பது இன்றியமையாததாகும். வழக்குகளைப் பஞ்சாயத்துக்களின் மூலமாகத் தீர்க்கும் முறையைப் பரப்புவதற்குப் பிரிட்டிஷ் கோர்ட்டுகளைப் பகிஷ்கரிப்பது அவசியமாகிறது. இந்த பகிஷ்காரத்தை எவ்வளவு தூரம் விரிவுபடுத்துவது? இதன் நிபந்தனைகள் யாவை? என்பவையே நாம் கவனிக்கவேண்டிய பிரச்னைகள். ஒவ்வொரு விஷயத்திலும் தனித்தனியாகக் காணப்படும் சமய சந்தர்ப்பங்களை உத்தேசித்தே அவைகளைத் தீர்க்க வேண்டும். முதலில் சாத்துவிக எதிர்ப்புக்கு ஒரு பொது உற்சாகத்தைக் கிளப்பவேண்டும்; பின்னர் அதை ஒழுங்குபடுத்தவும், வகைப்படுத்தவும், அவசியமான இடங்களில் வரையறுக்கவும் கூடும்.

### அடிப்படையான விஷயங்களில் வித்தியாசம்

நம்மிடையே ஏற்பட்டுள்ள சச்சரவே நம் முன்னேற்றத்திற்கு முதல் இடையூறாக இருக்கின்றது. அதுவே தற்போதைக்கு காங்கிரசைச் சின்னபின்னப்படுத்தி, அது இருந்த இடத்தில் போலித் தேசீயச் சபையொன்று ஏற்படும்படிச் செய்திருக்கிறது. இப் போலிச் சபை சென்ற வருடம் சென்னையில் கூடினதுமன்றி, பெருமதிப்பிற்குரிய உள்ளூர்த் தலைவர்களின் ஆதரவற்றிருந்தும், மீண்டும் லாகூரில்கூட எத்தனித்திருக்கிறது. இந்த சச்சரவானது தலைவர்களின் சொந்த விஷயமாகவோ, அற்ப வேற்றுமைகளைக் குறித்தோ மட்டும் ஏற்பட்டதென எண்ணுவது பெருந் தவறாகும். பொதுஜனங்கள் ஈடுபட்டுள்ள இத்தகையப் போராட்டங்களில் அற்பமான சொந்த விஷயங்களும் வேற்றுமைகளும் குறுக்கிட்டு நிலைமையைக் குழப்பி மனக் கசப்பை யுண்டாக்குவது சகசமே. ஆனால், விவாதத்தின் உண்மையான பிரச்னைகள், இந் நாட்டில்

சுயராச்சியத்தின் உட்கருத்தும் உருவும் எதிர்காலத்தில் எந்த ரீதியில் அமையவேண்டும் என்பதைத் தழுவியனவாகவே இருந்தன. அந்த உட்கருத்தும் உருவும் ஜனநாயக ரீதியில் அமைந்திருப்பதா? சிறு தொகையினர் ஆட்சியின் ரீதியில் அமைந்திருப்பதா? அவைகளின் நடைமுறை அரசியலமைப்புச் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டிருப்பதா? யதேச்சையாக இருப்பதா? இயக்கமானது தனது குறியிலும், கொள்கையிலும், உட்கருத்திலும் முற்போக்குடையதாகவும் தேசீய மயமாகவும் இருப்பதா? குறுகிய போக்குடையதாயும் ஸ்தல சம்பந்தமானதாகவும் இருப்பதா?—இவையே தீர்க்கப்படவேண்டிய விஷயங்களாக இருந்தன. தேசீயக் கட்சி ஜனநாயகத்தையும் அரசியலமைப்புத் திட்டத்தை அனுசரித்த ஆட்சியையும் முற்போக்கையும் ஆதரித்தது. மிதவாதக் கட்சியானது, மதிப்புள்ள மூத்த தலைவர்களுக்கு அதீத மரியாதை செலுத்துவதே பெரிதெனக் கொண்டு, தாங்கள் செய்வதன் பலாபலனை உணராமல் சிறுதொகையினரின் ஆட்சியையும், சுயேச்சாதிகாரத்தையும், பிற்போக்கான முறைகளையும் ஆதரித்து நின்றவர்களுக்கு உதவியளித்தது. போராட்டத்தின்போது தனி நபர்களின் இயல்புகளும் விருப்பு வெறுப்புக்களும் எல்லாவற்றிற்கும் மேலாக நின்றன. சண்டையில் இறங்கிய இரு சாராரும், அற்ப வேற்றுமைகளைச் சாக்காக வைத்துக்கொண்டு ஒருவர் மேலொருவர் சீறி விழுந்தனர். கட்சிச் சண்டைகளுக்குரிய சூழ்ச்சிகளெல்லாம் தாராளமாகப் பிரயோகிக்கப்பட்டன. இறுதியில், மிதவாதத் தலைவர்கள் வேற்றுமைக்குரிய உண்மையான விஷயங்களை வாதிக்க மறுப்பதில் காட்டின பிடிவாதம் ஒரு புறமும், இருகட்சியினருக்குள்ளுமிருந்த இளைஞர்கள் காட்டின கட்டற்ற உணர்ச்சி மற்றொரு புறமும் சேர்ந்து, சூரத்தில் பலாத்காரத்தில் முடிவுபெற்று காங்கிரஸ் கலைய வேண்டியதாயிற்று. தேசீய முன்னேற்றத்திற்கேற்ப இனி எப்போதாகிலும் இப் பிரச்னை தீர்க்கப்படவேண்டுமாயின், பொதுப் பணியில் தனி நபர்களுக்குரிய அற்ப வேற்றுமைகளை அகற்றி, உண்மையான விவாதத்திற்குரிய விஷயங்களை நேர்மையாகவும் அமைதியாகவும் ஆராய்வது அவசியமாகும்.

நாம் லட்சியமாகக்கொள்ள வேண்டிய சுயராச்சியத்தின் சிறப்பியல்பு, சாத்துவிக எதிர்ப்புமுறை, சில தீர்மானங்கள் அமைந்திருக்கவேண்டிய தோரணை, இவையே இரு கட்சிகளிடையே பிளவை உண்டு பண்ணின பிரதான விஷயங்களாகும். தீர்மானத்தின் அமைப்பு காங்கிரஸ் மகா சபையினுலேயே நிர்ணயிக்கப்பட வேண்டியதொரு விஷயமாகும். விவாதத்தை அமுக்கிவிடக் கூடாது என்றும், தேசீய சபையின்முன் கருத்துக்களை வெளியிடத் தங்களுக்குள்ள நியாயமான உரிமைகளைப்

பறித்துவிடக் கூடாதென்றுந்தான் தேசீய வாதிகள் கேட்கின்றனர். மற்ற விஷயங்களில் தங்கள் லட்சியத்தையோ காரிய முறையையோ அவர்கள் விட்டுக்கொடுக்க முடியாது. சுதந்திரமாக ஆலோசனை செய்து முடிவு செய்யும் ஒரு சபையில், இத்தகைய வித்தியாசங்கள் ஒற்றுமையுடன் முன்னேறுவதற்கு ஒரு தடையாக இருத்தலாகாது என்பதே அவர்களின் கட்சி. சுயராச்சியத் தீர்மானத்தில் "குடியேற்ற நாட்டுச் சுய ஆட்சி" என்பதற்குப் பதிலாக "பரிபூரணச் சுய ஆட்சி" என்று அமைத்து அவ்விஷயத்தை எளிதில் தீர்த்து விடலாம். சாத்துவிக எதிர்ப்பு விஷயமாக உள்ள வித்தியாசம் தற்சமயம் பகிஷ்காரத் தீர்மானத்தின் சம்பந்தமாகவே ஏற்பட்டுள்ளது. மிதவாதிகளிற் பலரும் ஆதரிக்கும் இத்தீர்மானத்தைத் தேசீயக் கட்சியினர் கைவிட ஒருப்படார்.

### காங்கிரசின் அமைப்பு

ஆனல், இவ்விஷயத்தையும் சுயேச்சையுடன் தேர்ந் தெடுக்கப்பட்ட காங்கிரஸ் மகாசபையின் தீர்ப்புக்கு விட்டுவிட அவர்கள் சம்மதிக்கின்றனர். ஒரு குறிப்பிட்ட கருத்துடைய சிலர் மட்டுமே அடங்கியுள்ள விஷயாலோசனைக் கமிட்டியே முடிவாகத் தீர்ப்பு கூறும் அதிகாரத்தைப் பெற்றுள்ளது என்பதை மட்டுமே அவர்கள் ஆட்சேபிக்கின்றனர். ஆகவே, இவ்விஷயங்களில் எல்லாமே உண்மையான பிரச்னை காங்கிரசின் நிர்மாணத்தைப் பற்றியதாகும். தற்சமயம் காங்கிரஸ் எனத் தன்னை அழைத்துக்கொள்ளும் மகா சபையானது ஜனநாயகத்திற்கு இடந்தராத குறுகிய அமைப்புத் திட்டத்தை ஏற்றுக்கொண்டுள்ளது. ஜனங்கள் சுதந்திரமாகத் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதைத் தடுக்கும் வகையில் அந்தத் திட்டம் அமைந்திருக்கிறது. அது, பிரதிநிதியாக நிற்க விரும்பும் ஒவ்வொருவரும் குறித்தவாசகங்களடங்கிய உறுதிமொழிகள் சிலவற்றை ஒப்புக்கொள்ள வேண்டுமென நிர்ப்பந்தப் படுத்துகின்றது. பிரதிநிதிகள் மக்களால் நேராகத் தேர்ந்தெடுக்கப்படாமல் குறிப்பிட்ட சங்கங்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்பதே அதன் கருத்தாகும். மேலும், தேர்ந்தெடுக்கப்படாத பலரைச் சேர்த்துக் கொண்டு அவர்களுக்குச் சபையின் காரியங்களை நடத்துவதில் விசேஷ அதிகாரமளிக்கின்றது. இவற்றையும் இவை போன்ற திட்டங்களையும் எந்த ஜனநாயகக் கட்சியும் ஒப்புக்கொள்ள முடியாது. தேசீய வாதிகளின் மகாநாடோ, அல்லது மிதவாதிகளின் கன்வென்ஷன் கூட்டமோ தனித்தனியாகச் சங்கம் நிறுவிக்கொள்ளக் கூடும். ஆனல், காங்கிரஸ் ஒரு தேசீய சபையாகும். அது மக்களால் விதிப்படி தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைத் தடையின்றிச் சேர்த்துக்கொள்ளும் தேசீய மகாசபையாக விளங்க வேண்டும். ஏற்கெனவே பொதுஜன ஆதரவற்றிருக்கும் ஒரு சபை

யில், இப்பிற்போக்கான நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றிவிடுவ தனால் அமைப்புத் திட்டத்தின் குறைகள் நீங்கிவிடா. பழைய வழி களில் தேர்ந்தெடுக்கப்பட்ட காங்கிரஸ் ஒன்றே எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய எதிர்கால அமைப்புத் திட்டங்களையும் முறை களையும் நிர்ணயிக்கக் கூடும்.

### வேற்றுமைகளை அகற்றும் வழி

ஆதலின், கன்வென்ஷன் காங்கிரஸைத் தன் இஷ்டப்படித் திருப்புவதனால் பிரச்னை தீரப்போவதில்லை. இரு கட்சித் தலைவர் களும் கமிட்டியில் கூடி, வேற்றுமைகளைப் போக்கிக்கொள்ளு வதற்கும், காங்கிரஸ் இனி அமைதியாகவும் சுயேச்சையாகவும் வேலை செய்வதற்கும் ஒரு ஏற்பாட்டுக்கு வரும்படி மாகாண மகா நாடுகள் அவர்களுக்கு அதிகாரமளிக்க வேண்டும். இத்தகைய முயற்சியில் சிறுபான்மையோர் எவரேனும் கலந்துகொள்ள மறுப் பின், மாகாண ஜனங்களின் உத்தரவு பெற்ற பெரும்பாலோர் அவர்களை அலட்சியம் செய்து பொதுஜன விருப்பத்தை நிறை வேற்றிவைப்பது நியாயமேயாகும். வழி முறைகள் நிர்ணயிக்கப் பட்டு விட்டால், அவற்றை ஜனங்களால் சுயேச்சையாகத் தேர்ந் தெடுக்கப்பட்ட காங்கிரஸ் சபைக்கு அனுப்பி அதனால் அங்கீகரிக்கப் படவோ, நிராகரிக்கப்படவோ திருத்தப்படவோ விட்டுவிடலாம். இம் முறையினால், சரியான வழியில் அமைந்த ஒரு காங்கிரஸ் மீண்டும் ஏற்படும். சூரத்தில் பிரச்னை தீர்க்கப்படுவதற்குத் தடை யாயிருந்த பிடிவாதங்களும் உணர்ச்சிகளும் மீண்டும் தலையெடுக்க விடாமல் பார்த்துக்கொள்ளுவதற்கு பழைய அருவருப்பான அனு பவங்களின் நினைவு நமக்குத் தகுந்த எச்சரிக்கையாக இருக்கு மென நம்பலாம்.

### சீர்திருத்தங்களும் தேசீயவாதிகளின் நோக்கும்

காங்கிரசுக்குள் இருப்பதைவிட வெளியிலே ஒற்றுமையுடன் வேலை செய்வதற்குரிய வாய்ப்புகள் அதிகமாக இருக்கின்றன. ஒற்றுமையைக் குலைக்கவோ, வேலையைத் தடை செய்யவோ கூடிய இரு விஷயங்கள் உள்ளன. இப்போது அளிக்கப்பட் டிருக்கும் அரசியல் சீர்திருத்தங்களை ஏற்றுக்கொள்ளுவதா, தள்ளி விடுவதா என்பதே முதல் விஷயம். இச் சீர்திருத்தங்களில் ஜனங் களுக்கு அதிகாரமளிக்கும் யாதொரு அம்சத்தையோ, ஒரு வகுப் புக்கு அதீதமான பிரதிநிதித்துவம் அளிக்கும் தவறான கொள்கை யைத் தவிர வேறு யாதொரு புதிய அரசியல் கொள்கையையோ நாம் காணமுடியாது. ஒத்துழைப்பு என்னும் விரிவான பிரச்னை இத்துடன் சம்பந்தப்பட்டுள்ளது. பூரண சுயராஜ்யம் கிடைக்கும் வரையில் தேசீயக் கட்சியானது விடாமலும் கண்டிப்பாகவும்

ஒத்துழைக்க மறுக்கக் கடமைப்பட்டுள்ளது எனப் பொதுவாகக் கருதப்படுகின்றது. தேசீயவாதத் தலைவர்கள் இந்தத் தவறான எண்ணத்தைப் போக்கி, நிலைமையைத் தெளிவுபடுத்த யாதொன்றும் 'செய்ய அக்கரை கொள்ளவில்லை. அது சமயம் விவகார அரசியலில் இல்லாத ஒரு விஷயத்தைப்பற்றி வீண்வாதம் செய்வதைக் காட்டிலும், தங்களது லட்சியத்தை மக்கள் ஏற்றுக் கொள்ளும்படிச் செய்வதிலும், சாத்துவிக எதிர்ப்புக்கும் பூரணமான தன்னுதவிக் கொள்கைக்கும் ஊக்கமளித்து அவற்றை மக்களிடையே பரவச் செய்வதிலும் கவனஞ் செலுத்தினர். ஆனால், பூரண சுயராச்சியம் கிடைக்கும் வரையில் ஒத்துழைப்பதில்லை என்னும் கருத்தின்படி ஒரு கட்சி உண்மையாகவே நடக்குமாயின், அது வெறும் லட்சியவாதிகளின் கட்சியாக இருக்குமே யொழிய நடைமுறை விஷயங்களைப்பற்றி சிந்தனை செய்து காரியத்தில் இறங்குவோரின் கட்சியாக இருக்காது.

'அதிகார மில்லையேல் ஒத்துழைப்பு மில்லை' என்பதே தேசீயவாதிகளின் கொள்கையாகும். எவ்வித அதிகாரமும் நமக்கு மறுக்கப்படுகிறதால், எவ்வளவு காலம் அவ்விதம் மறுக்கப்படுகின்றதோ அவ்வளவு காலம் வரையிலும் ஒத்துழையாமையைக் கூடுமான வரையில் பூரணப்படுத்த வேண்டுமெனத் தேசீயக் கட்சி அறைகின்றது. ஆனால், ஜனங்கள் தேர்ந்தெடுக்கும் சட்ட சபைக்கு அதிகாரம் அளிக்கப்படுமாயின், எந்த அரசியல் கட்சியும் அந்த அதிகாரத்தை நிராகரித்து வியாபார பகிஷ்காரத்தை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்காது. அதே மாதிரியாக, கல்வி முறையும் சர்க்காரின் ஆதிக்கத்தினின்றும் விடுதலையடைந்து ஒரு பொதுஜன சபையின் பொறுப்புக்கு விடப்பட்டால் (ரே பிரபு ஒரு சமயம் இவ்விதமாகவே விட்டுவிடக் கருதினர்.) பொது அறிவுள்ள எந்த அரசியல் வாதியும் அத்தகையக் கல்வி முறையைப் பகிஷ்கரிக்க நாட்டைத் தூண்டமாட்டான். நீதிமன்றங்கள் எல்லாம் இந்திய நீதிபதிகளாலேயே அமைக்கப்பட்டு, நிருவாக சபைக்கல்ல, ஜனப் பிரதிநிதியான மந்திரியின் பொறுப்புக்கே மாற்றப் படுமாயின், அவ்வண்ணம் முறையாக நடைபெறும் நீதிமன்றங்களுக்குப் பஞ்சாயத்துக்கள் துணைபுரியும் சாதனங்களாக அமைந்துவிடும். பொது ஜனங்களுக்குரிய அதிகாரத்தினின்று அவர்களை விலக்கி வைக்கும் ஓர் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க மறுப்பது சரியேயாயினும், மக்களுக்கு உண்மையான செல்வாக்கை அளிக்கும் ஆட்சி முறையுடன் ஒத்துழையாமையை அனுஷ்டிப்பது முறையாகாது. யதேச்சாதிகாரிகள் தங்களது இச்சையாக அளிக்கும் பிச்சைகளை மறுக்கலாம்; ஆனால், மீண்டும் பறித்துக்கொள்ள முடியாத வகையில் பெறப்படும் ஜன உரிமைகளை மறுப்பது அவசியமல்ல.

இதற்கு நேர்மாறாக, அமைதியாகவும், நமது ஆன்ம பலத்தைக் கொண்டும், சுயராச்சியத்திற்குரிய பல அம்சங்களைப் பெறுவதன் பொருட்டும், இவ்விதம் பெறமுடியாதபோது மெல்லமெல்ல அதிகாரவர்க்கத்தினரின் ஸ்தாபனங்களினின்றும் விலகி நமது சொந்த ஸ்தாபனங்களை அமைத்துக் கொள்ளுவதற்காகவும், தன்னுதவி, சாத்துவிக எதிர்ப்பு என்னும் முறைகள் தொடக்கப் பட்டன. ஜனங்களின் உரிமைகள் ஏற்கப்படுவதனாலேயே பூரண சுயராச்சிய லட்சியம் கைவிடப்படுகிறதென்றோ, ஜன உரிமைகள் விஷயமாக யதேச்சாதிகாரம் குறுக்கிட்டாலும் சாத்துவிக எதிர்ப்பு இனியும் கைக்கொள்ளப்பட மாட்டாது என்றோ பொருள் கொள்ள லாகாது. பூரண சுயராச்சியம் அடைவதற்கு ஒரு படியாகவும் சாதனமாகவுமே அரைகுறையான சுயராச்சியம் பயன்படுத்தப் படுகின்றது எனக் கொள்ளவேண்டும். மாற்றிக்கொள்ளமுடியாத லட்சியத்திலிருந்து நமது ஆர்வங்களை வேறுவழியில் திருப்பக் கூடியதும், ஏதோ உண்மையான உரிமைகள் அளிக்கப்பட்டு விட்டன என மக்களுக்கு மயக்கம் உண்டாக்கக்கூடியதுமான கவைக்காகாத மகாமோசமான சிறு பிச்சைகளை ஏற்றுக்கொள்ள மறுக்கும்போதுதான், தேசீயவாதிகள் மிதவாதிகளுள் செல்வாக்கு பெற்ற ஒரு பகுதியினின்று பிரிந்து நிற்கின்றனர்.

**பகிஷ்காரந் திட்டத்தை ஒழுங்கு படுத்துதல்**

பகிஷ்காரத் திட்டத்தைக் கைவிடாமல் அதை அமுலுக்குக் கொண்டுவருவது இரண்டாவது விஷயமாகும். வங்காளத்தில் பகிஷ்காரம் என்றாலே நடுங்கும் சில பயங்கொள்ளிகளோ, பிற்போக்கானவர்களோ இருப்பினும், பொது உணர்ச்சி அதை ஏக மனத்துடனும் மிக அழுத்தமாகவும் ஆதரிப்பது வெளிப்படை. ஆயினும், பகிஷ்காரத் திட்டத்தை ஒழுங்குபடுத்தும் விஷயத்தை ஆழ்ந்து கவனிக்க வேண்டியகாலம் வந்திருக்கிறது. சுதேசியைப் பற்றிய தீர்மானத்தில் "கூடுமானவரையில்" என்னும் சொற்களைச் சேர்த்தால் தயங்குகிறவர்களுக்கும் தீவிர உறுதி இல்லாதவர்களுக்கும் தப்பிக்கொள்ளுவதற்குத் திறப்பான வழியேற்பட்டு விடுமாதலால், அவை சேர்க்கப்படுவதை தேசீய வாதிகள் எப்போதுமே ஆட்சேபித்து, அவைகளுக்குப் பதிலாக 'தியாகம் செய்தாயினும்' என்னும் சொற்களைச் சேர்க்க விரும்பினர். ஆனால், தற்சமயம் பகிஷ்காரத்தின் உருப்படியான பிரச்னைகளைக் கவனிப்பது நலம். தேவைக்குப் போதுமான சுதேசச் சாமான்கள் அகப்படும்போதும், அவசியமில்லாத வெறும் டாம்பீக வாழ்க்கைக்குரிய சாமான்கள் விஷயத்திலும் பகிஷ்காரத்தைப் பூரணமாக அனுசரிக்க வேண்டுமாயினும், வாழ்க்கையிலும் விவகாரங்களிலும் அத்தியாவசியமாகக் காணப்படும் சில பொருள்களை அயல் நாடு

களிலிருந்து தருவிக்க வேண்டியதாக இருப்பதை நாம் ஒப்புக் கொண்டாகவேண்டும். இப்பொருள்களை வாங்குவதில் எந்த நாடு களிலிருந்து தருவிப்பது உத்தமம் என நாம் கருதுகிறோமோ, அந்த நாடுகளிலிருந்தே பொது ஜனங்களும் தருவித்துக் கொள்ள வேண்டும். அந் நாடுகள் இந்திய அபிலாஷைகளுக்கு அநுதாபங் காட்டுவனவாக இருத்தல் அவசியம். இவ் விஷயத்தைச் சரிவரச் சமாளிக்காமல் இருந்ததே நமது ராஜீயப் பகிஷ்காரத் திட்டத்தில் ஏற்பட்ட தளர்ச்சிக்கும் வங்கப் பிரிவினையை ரத்து செய்ய நாம் எடுத்துக்கொண்ட முயற்சிகள் பலிக்கா திருந்ததற்கும் காரண மாகும். கடைக்காரர்களும் வர்த்தகர்களும் அன்னிய நாட்டுச் சரக்குகளைச் சுதேசச் சரக்குகளெனக் கூறி ஏமாற்றுவதைப் போன்ற இதர பிரச்னைகளும் இருக்கின்றன. இயக்கம் தோல்வி யடையாதிருக்க வேண்டுமாயின், இவற்றையும் உடனே கவனித் தல் வேண்டும்.

### காங்கிரசைத் திருத்தி யமைப்பதே இறுதியான பிரச்னை

இந்தப் பிரச்னைகளெல்லாம் தீர்ந்த பிறகும், இறுதியாகக் கடினமான பிரச்னை யொன்று எஞ்சி நிற்கின்றது. எந்த ஸ்தா பனத்தைக்கொண்டு நமது இயக்கத்தை நடத்துவது? என்பதே அப்பிரச்னையாகும். காங்கிரசைச் சீர்திருத்தி யமைத்து, அதை ஆலோசனை செய்வதற்கும் நிருவாகம் செலுத்துவதற்கும் உரிய தொரு மகத்தான ஸ்தாபனமாக ஆக்குவதே தேசீயவாதிகளின் வேலைத் திட்டமாக இருந்தது. ஐக்கியப்பட்ட காங்கிரசை ஏற் படுத்த முடியாவிடினும், மாகாணங்களை யாகிலும் தனித் தனியாக ஒழுங்குபடுத்த வேண்டும். காங்கிரசை அடியிலிருந்து சீர்திருத்தி யமைப்பதற்கும் அதைப் பழைய நிலைக்குக் கொண்டுவருவதற்கும் இதுவே உற்ற வழியாக இருக்கலாம். ஜில்லா ஸ்தாபனங்களுங்கூட தொண்டர்களின்றி சரியாக வேலைசெய்ய முடியாது. ஏற்கனவே தொண்டர்களைப் பயிலும் வாலிபர் சங்கங்களும் சமிதிகளும் நாலாபக்கங்களிலும் கிளம்பி வங்காளம் முழுதிலும் வலுவான கிளை ஸ்தாபனங்களை அமைத்துப் பெருகிவந்தன. அவை இப் போது அதிகாரிகளின் உத்தரவால் கலைக்கப்பட்டு வருகின்றன. அவைகளுக்குப் பதிலாக, கட்டுப்பாடான அமைப்பின்றி ஆங் காங்கு வாலிபர்களைச் சிறு தனிக்கூட்டங்களாகத் திரட்டி, ஒவ் வொன்றும் ஒரு பொது ஏற்பாட்டின்படி ஒற்றுமையாகத் தனக் குரிய வேலையைச் செய்ய முடியுமாவெனப் பார்க்கவேண்டும். ஒற்றுமை ஏற்படக்கூடிய மாகாணங்களில் சிந்தனையிலும் வினையின் ஆற்றலிலும் சிறந்த தலைவர்களுக்கு இந்த யோசனையை விடுக் கிறேன்.

இதுவே நான் காணும் நிலைமை. தேசியக் கட்சிக்கு நான் கூறும் யோசனைகள் சுருக்கமாக இவையேயாகும்:

1. சட்டங்களை மீறுமல், சுய உதவி, சாத்துவிக எதிர்ப்பு, என்னும் அமைதியான கொள்கைகளை விடாது கைப்பற்றி வருவது.

2. சர்க்கார் விஷயமாக நாம் நடந்துகொள்ளவேண்டிய முறையை 'உரிமையில்லேல் ஒத்துழைப்புமில்லை' என்னும் கொள்கைக்கு இணங்க ஒழுங்கு படுத்திக் கொள்ளுவது.

3. கூடுமான போதெல்லாம் மிதவாதக் கட்சியுடன் இணைந்து வேலைசெய்வது; ஐக்கிய காங்கிரசை மீண்டும் அமைப்பது.

4. அரசியல், பொருளாதாரம், இவ்விரு துறைகளிலும் பகிஷ்காரம் வெற்றிகரமாக நடப்பதன்பொருட்டுப் பகிஷ்கார இயக்கத்தை ஒழுங்குபடுத்துவது.

5. நாம் ஆரம்பத்தில் வகுத்துக்கொண்ட வேலைத்திட்டத்தின் படி, நாடு முழுவதையும், இல்லையேல் மாகாணங்களையேனும், கட்டுப்பாடு செய்தல்.

6. தொண்டர்கள் தன்னுதவி, தேசீய நலன்கள், இவை விஷயமாக, முன்னைப்போல் அவ்வளவு பலமாக இல்லாவிடினும், ஊக்கமுடனும், பலனளிக்கும் வகையிலும் பணியாற்றுவதன் பொருட்டு, சட்டத்தை மீறுத ஒரு கூட்டுறவு முறையை வகுப்பது.

—அரவிந்த கோஷ்

## அடக்குமுறையும் புரட்சி இயக்கமும்

இந் நிலையில், 1910, ஜனவரி மாதம், 24–ந்தேதி யன்று பட்டப்பகலில் கல்கத்தா ஹைகோர்ட்டுக் கட்டடத்தில், போலீஸ் டெப்டி சூபரின்டெண்டெண்டு மோல்வி ஆலம் ஒரு வாலிபனுல் சுட்டுக்கொல்லப்பட்டார். புரட்சி யியக்கம் நாளுக்கு நாள் நாட்டில் வலுத்து வந்ததற்கு இதுவும் ஒரு அறிகுறியாக இருந்தது. பிப்ரவரி மாதம் 5–ந்தேதி, ஸ்ரீ அரவிந்தர் 'கர்மயோகி' பத்திரிகையில் தமது நிலைமையை விளக்கியும், தேசீயக்கட்சியின் எதிர்காலவேலையை வரையறுத்தும் ஒரு கட்டுறை எழுதினர். அதில், சர்க்காரின் அடக்குமுறைகளினுலேயே ரகசியப் புரட்சி இயக்கம் நாளுக்கு நாள் வலுத்து வந்ததென்றும், அதைத் தாம் அடக்கத் தகுந்த நிலைமையில் இல்லையென்றும், ஆகவே,

சர்க்காரே அப்புரட்சி யியக்கத்தைச் சமாளிப்பதன் பொருட்டுத் தேசியக் கட்சியினர் தங்களது வேலையைக் கொஞ்ச காலம் நிறுத்திக்கொள்ள வேண்டுமென்றும் முடிவுசெய்தார்.

கடைசியாக, ஸ்ரீ அரவிந்தர், தமது கொள்கையையும் திட்டத்தையும் சரிவர நடத்துவதற்கு நாடு இன்னும் தயாராகவில்லை என்பதை உணரவேண்டியதாக இருந்தது. இன்னும் சிறிது காலம் தீவிரமற்ற சுய ஆட்சி இயக்கத்தின் மூலமாகவோ, அல்லது மகாத்மா காந்தி தென்னாப்பிரிக்காவில் ஆரம்பித்த சாத்வீக எதிர்ப்புக் கிளர்ச்சியின் மூலமாகவோ, போதிய பயிற்சிபெறக் கூடுமாயினும், இவ்வியக்கங்களுக்கும் ஏற்ற காலம் வரவில்லையென்றும், தாம் இவைகளின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படவில்லை யென்றும் சீக்கிரததிலேயே கண்டுகொண்டார். மேலும், அலிபூர் சிறையில் யோகாப்பியாசம் செய்ய ஆரம்பித்தது முதற்கொண்டு அவரது அத்தியாத்ம வாழ்வு அவரை மேன்மேலும் அதிகமாக ஏகாக்கிரம் செய்யுமாறு தூண்டி வந்தது. ஆகவே, கொஞ்ச காலமாவது அரசியல் துறையிலிருந்து விலகியிருக்க வேண்டுமென்னும் எண்ணம் அவருக்கு நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது.

## ஸ்ரீ அரவிந்தர் புதுவை செல்லல்

அம் மாதக் கடைசியிலேயே ஸ்ரீ அரவிந்தர் சந்திரநாகூர் சென்று ஒரு மறைவான இடத்தில் தங்கியிருந்து ஒரு மாத காலம் யோகாப்பியாசம் செய்தார். பிறகு, ஏப்ரல் ஆரம்பத்தில் பிரஞ்சுக் கப்பலேறி, ஏப்ரல் மாதம் 4-ந்தேதி புதுச்சேரியை யடைந்தார். அங்கு முதலில் கலவை சங்கர செட்டியார் வீட்டிலும், பிறகு வெள்ளைக்காரத்தெருவில் ஒரு தனி வீட்டிலும் ஏகாந்தவாசம் செய்தார்.

இதுசமயமே, ஸ்ரீ அரவிந்தர் 1909-ஆ ஜூலை மாதத்தில் 'கர்மயோகி' பத்திரிகையில் கையொப்பத்துடன் வெளியிட்ட பகிரங்கக் கடிதத்திற்காக சர்க்கார் அவர்மீது ராஜநிந்தனைக் குற்றஞ் சாட்டி வாரண்டு பிறப்பித்து, மேலும், அவரைப் பொதுமக்களிடையே அவமானம் செய்ய வேண்டுமென்னும் எண்ணத்துடன், அவர் வாரண்டுக்கஞ்சி புது

வைக்கு ஓடிவிட்டாரென ஒரு அறிக்கையும் வெளியிட்டனர். ஸ்ரீ அரவிந்தர் 'மதராஸ் டைம்ஸ்' பத்திரிகையில் இதற்கொரு மறுப்பு எழுதியிருந்தார். அதில் தாம் ஏற்கெனவே புதுவை சென்றுவிட்டதைச் சர்க்கார் அறிவரென்றும், தம்மை இழிவுபடுத்தவே இக்குற்றத்தைச் சாட்டினரென்றும், ஆகவே, தாம் பிரிட்டிஷ் இந்தியாவில் ஆஜராகக் கடமைப் பட்டில்லையென்றும், அதுசமயம் யோகசாதனையின் பொருட்டுத் தாம் பொதுவாழ்வினின்றும் விலகியிருந்தபடியால் தமது கௌரவத்தைக் கோர்ட்டில் நிலைநிறுத்துவது அவசியமெனத் தோற்றவில்லை யென்றும் கூறியிருந்தார். இந் நிலையில் அதிகாரிகள் 'கர்மயோகின்' அச்சுக்கூடத் தலைவரின்மீது கிரிமினல் வழக்குத்தொடர்ந்து அவரை ஆறுமாதகாலம் சிட்சித்தனர். ஆனால், அவர் ஹைகோர்ட்டில் அப்பீல் செய்ய, நீதிபதிகள் ஸ்ரீ அரவிந்தரின் பகிரங்கக் கடிதம் சட்ட விரோதமானதல்லவெனக் கூறி அவரை விடுதலை செய்ய உத்தரவிட்டனர். இவ்விதம் மூன்றும் முறை ஸ்ரீ அரவிந்தர் நிரபராதி யெனக் கோர்ட்டார் தீர்ப்புக் கூறினர்.

ஸ்ரீ அரவிந்தர் வங்க நாட்டைவிட்டுச் செல்லுகையில், தக்க சமயம் வாய்த்தபோது மீண்டும் அரசியலுக்குத் திரும்பி வரலாமென்னும் எண்ணத்துடனேயே இருந்தார். ஆனால், வெகு சீக்கிரத்திலேயே, தாம் எடுத்துக்கொண்ட அத்தியாத்ம வேலையின் மகத்தான அளவு புலப்பட்டு, தமது சக்தி முழுமையும் அதற்கே தேவையாயிருக்குமென்றுணர்ந்தார். ஆகவே, புதுவையில் ஏகாந்தமாக யிருந்து யோக சாதனைக்கும் அத்தியாத்மப் பணிக்கும் தம்மைப்பூரணமாக அர்ப்பணம் செய்யலானார்.

## எ. புதுவையில் "உத்தரயோகி"

சற்றேறக்குறைய 1880-ம் ஆண்டில், தமிழ் நாட்டில் புகழ்பெற்ற யோகியார் ஒருவர், முப்பது வருடங்களுக்குப் பின் ஒரு உத்தரயோகி தமிழ் நாட்டில் தஞ்சமடைந்து பூரணயோகம் பயில்வாரென்றும், அது பாரதநாடு அண்மையில் விடுதலையடைவதற்கோர் அறிகுறியாக இருக்குமென்றும் தீர்க்க தரிசனம் உரைத்தார். அன்றியும், அவ்வுத்தரயோகி, ஆண்டவன் அளிப்பதை ஆண்டவனுக்கே மீண்டும் அளித்துவிடவேண்டும்; ஆண்டவனை நேருக்கு நேராகக் காணவேண்டும்; ஆத்ம சக்தியால் பாரத அன்னையை அன்னியரின் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்க வேண்டும்—என்னும் மூன்று "பைத்தியங்களை" உடையவராக இருப்பார் என்றும் குறிப்பிட்டார். அவர் குறித்த காலத்திலேயே ஸ்ரீ அரவிந்தர் தமிழ்நாடு போந்து புதுவையில் தஞ்சம் புகுந்ததும், அவர் குறிப்பிட்டிருந்ததைப் போலவே ஸ்ரீ அரவிந்தர் தமக்கு மூன்று "பைத்தியங்கள்" உண்டு என்பதைத் தம் மனைவியாருக்கு எழுதிய கடிதங்களில் சொல்லியிருப்பதும் ஆகிய இவையெல்லாம், அப்பெரியார் தம் தீர்க்க தரிசனத்தில் கண்ட உத்தரயோகி ஸ்ரீ அரவிந்தரே என்பதை ஐயமறக் காட்டுகின்றன. அந்த தீர்க்கதரிசனத்தைத் தமிழ் நாட்டுப் பிரமுகர் ஒருவரின் மூலமாக அறிந்த ஸ்ரீ அரவிந்தர், 'உத்தரயோகி' என்னும் பெயரை ஏற்று, அப்பெயரின்கீழ் 'யோகசாதனம்' என்று மற்றொரு பெரியார் எழுதிய சிறு நூலொன்றை ஆராய்ந்து பதிப்பித்தார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

ஸ்ரீ அரவிந்தர் புதுச்சேரியில் 1910 முதல் 1914 வரையிலும் மௌனமாக யோகம் புரிந்து வந்தார். கடவுளுடன் ஐக்கியப்பட்டு சுவானுபூதி யடைவதற்காக இந்நாட்டில் இதுகாறும் அனுஷ்டிக்கப்பட்டுவந்த முறைகளின் மூலமாகப் பெறக்கூடிய ஆத்மானுபவங்களின் முக்கியாம்சங்களை யெல்லாம் தாமும் அடைந்து, பின்னர் வாழ்க்கையின் இரு கோடிகளிலிருக்கும் சேதனத்தையும் சடத்தையும் ஒன்று சேர்த்து இணைக்கவல்ல பூரணமானதோர் அனுபவத்தை அவர் நாடினாரென்று முன்னர்க் கூறினோம்.

பண்டை யோக முறைகள் அநேகமாக எல்லா வற்றையும் கடந்த பரம்பொருளிடம் கூட்டிச் செல்லுவனவாயும், முடிவில் வாழ்க்கையிலிருந்து விலகியே சேதனத்திற்குவழி காட்டுவனவாயு மிருக்கின்றன. ஆனால், ஸ்ரீ அரவிந்தர் தமக்கு மேன்மேலும் முதிர்ந்து வந்த யோகானுபவத்தில், மனிதன் சேதனத்தை நோக்கி உயர்ந்து சென்று, பல உணர்வு உலகங்களுக்கு **(Planes of Consciousness)** அப்பாலுள்ள, "விஞ்ஞானம்" **(Supermind)** என உபநிடதங்கள் கூறும் சத்திய உணர்வு உலகத்தை அடைந்து, அங்கு அவன் பெறும் ஆதாயம், ஒளி, சக்தி, ஆனந்தம் இவற்றுடன் கீழிறங்கி, தன்மனம் உயிர் உடல்களும் இப் புவியின் வாழ்க்கையும் பரிபூரண மாறுதலடையும்படிச் செய்ய முடியுமென்றும், தற்சமயம் உணர்வற்றுக் கிடக்கும் (ஆனால் தெய்வ உணர்வை உள்ளுக்குள்ளே அடக்கிக் கொண்டிருக்கும்) சடமுங்கூட கீழிறங்கிவரும் விஞ்ஞான ஒளியினாலும் சக்தியினாலும் தன்னுள்ளடங்கியுள்ள தெய்வ உணர்வு விடுதலையடையப்பெற்றுப் பரிபூரண தெய்வ உணர்வுடன் பொலிய முடியு மென்றும், இவையே பரிணாமத்தின் நோக்கமெனவும் கண்டார்.

## "ஆரியா" பத்திரிகை

இவ்வண்ணம் தம் அனுபவங்கள் மேன் மேலும் விரிந்து வரும் சமயத்தில், 1914 ஆகஸ்டு மாதத்தில் 'ஆரியா' என்னும் பெயருடன் தத்துவ ஆராய்சி செய்யும் மாத சஞ்சிகை யொன்றை வெளியிட வாரம்பித்தார். 'ஆரியா' வானது, கலைப்பண்புகள், தத்துவம், சமயம், யோகம், இவைகளை விரிவான முறையில் தொகுத்துப் பூரணப்படுத்த முயன்றது. அது வெளிவந்த போது, ஸ்ரீ அரவிந்தர் இதுகாறும் தமது சுயமுக்தி மார்க்கத்தை மட்டும் தேடிக்கொண்டிருந்து விடவில்லை யென்பதும், முன்போலவே இன்றும் தாய் நாட்டின் நலத்தில் பற்றுடனேயே இருந்து வருகிறார் என்பதும் மக்களுக்குத் தெளிவாயிற்று.

## ஒரு ஞானச் சுரங்கம்

'ஆரியா' ஸ்ரீ அரவிந்தர் உலகிற்களித்ததொரு மகத்தான நன்கொடையாகும். ஏனெனில், அது அவரது

யோகாப்பியாசத்தில் உதித்த ஞானத்தின் வடிவமாகவும், அல்லற்படும் உலக மக்கட்கு அமுத வாழ்வளிக்கும் ஒரு ஞானச்சுரங்கமாகவும் திகழ்கின்றது. அது வெறும் தத்துவ உண்மைகளை யுரைக்கும் வரட்டு நூலாக இல்லாமல், தேசீய ஆதர்சம் நிரம்பியதாயும், உண்மையான தேசீயவாதிக்கு ஆழ்ந்த அத்தியாத்மப் பொருள்களை அறிவுறுத்தி அவனை ஊக்கியெழுப்புவதாயும், இறைவனின் திருவுள்ளத்தின்படி இப்புவியில் உண்மை உருவெடுக்கும் போது தோன்றக்கூடிய உயர்ந்த தேசீய தத்துவத்தைக் காட்டுவதாயு மிருக்கின்றது.

'ஆரியா'வில் அடங்கியுள்ள பல விஷயங்களுள் தெய்விக வாழ்க்கையைப்பற்றிய தத்துவமும் ஒன்று. 'தெய்விக வாழ்க்கை' என்னும் பெயருடன் தொடர்ச்சியாக வெளிவந்த கட்டுரைகளில், ஸ்ரீ அரவிந்தர் உள்ளவன் ஒருவனேயான இறைவன், தன்னின்றுமே இவ்வுலகுயிர்களைப் படைத்து, இவற்றில் நீக்கமறப் பரவியும் தன்னை உட்புகுத்திக்கொண்டும் உள்ளான் என்றும், படைப்பின் போக்கினுலும் அவனதுயோக மாயையினுலும் உயிர்கள் தமக்கும் இறைவனுக்கு முள்ள தொடர்பை மறந்து, பிரிவுணர்ச்சி பெற்று, அஞ்ஞானம் அகந்தை என்னும் படுகுழிகளில் வீழ்ந்து அல்லலுறுகின்றன என்றும், இறைவனருளால் இவை அறிவுவிளக்கம் பெற்றுப் படிப்படியாக உயரிய உணர்வு நிலைகளையடைந்து, இறுதியில் "விஞ்ஞானம் (Supermind) என்னும் நிலையை எய்தவும், அந்நிலையில் இறைவனின் பூரண உண்மையுடன் ஒன்றி, உருமாறி, இப்புவியில் அதிமானுடர்களாக—தெய்வ மனிதராக—வாழவும் வேண்டுமென்பதே படைப்பின் இறுதியான குறி என்றும், அவ்விதம் வாழ்வதே தெய்வீக வாழ்வென்றும் நமக்கு அறிவுறுத்துகிறார். இரண்டாவதாக, தமது,யோகானுபவத்தில் கண்டவற்றை ஆதாரமாகக்கொண்டு வேதங்களை ஆராய்ந்து சாஸ்திர ரீதியில் வேதங்களுக்கு ஒரு புதிய வியாக்கியானஞ் செய்திருக்கிறார். மூன்றாவதாக, 'பூரண யோகம், என்னும் தொடர்ச்சியான கட்டுரைகளில் அவர் தமது யோக தத்துவத்தை வெகு திறமையுடனும் பாண்டித்யத்துடனும் விவரித்திருக்கிறார். அவைகளில் இந்

நாட்டிற்கே விசேஷமாயுள்ள யோக முறைகளை ஒவ்வொன்ருக விமர்சனம் செய்து, அனுவசியமான போக்குகளை விலக்கி, ஒவ்வொரு முறையின் முக்கிய தத்துவத்தையும் கிரகித்து, முக்கியாம்சங்களை ஒன்ருேடொன்று இணங்கும்படிச் செய்து தமது புதிய யோகமுறையை வகுத்திருக்கிருர். உலக அத்தியாத்ம தத்துவ சாஸ்திரத்தில் இக் கட்டுரைகளுக்கு ஒரு உன்னத ஸ்தான முண்டென்பதைப் பற்றிச் சிறிதும் ஐயமில்லை. இக்கட்டுரைகள் மனத்திற்கு விருந்து தருவன மட்டுமல்ல; ஆத்மார்த்த வழியில் செல்லும் சாதகனுக்கு வழிகாட்டக் கூடியதொரு அனுபவ நூலாகவு மிருக்கின்றன.

நான்காவதாக, 'ஆரியா'வில் ஸ்ரீ அரவிந்தர் ஈசோபநிடதம், கேனோபநிடதம் என்னுமிரு முக்கியமான உபநிடதங்களுக்கு வியாக்கியானம் செய்து, தற்கால வாசகர்கள் எளிதில் புரிந்துகொள்ளக்கூடிய வழியில் மறைந்து கிடக்கும் ஆழ்ந்த பொருள்களை வெளிக்காட்டி விவரித்திருக்கிருர். அவருடைய "கீதைக்கட்டுரைக"ளில் நம்முடைய அருஞ் செல்வங்களுள் ஒன்ருகிய கீதைக்குப் பலரால் செய்யப்பட்ட வியாக்கியானங்களினுல் ஏற்பட்டுள்ள குழப்பங்களை விலக்கி, கீதை வாழ்க்கையிலிருந்து விலகுவதை யல்ல, வாழ்க்கையின் நிறைவையே போதிக்கிறதென்றும், பரமாத்மாவாகிய புருஷோத்தமன், அக்ஷர பிரம்மம், க்ஷரபிரம்மம் என்னும் இருவித தத்துவங்களையும், தன்னுள்ளடக்கி, தானே செயல் புரிவோனுயும், செயலற்றிருப்பவனுயும், செயல்களுக்கு உடையவனுயு மிருக்கிருனென்றும், சர்வேச்வரனுகிய அவனிடத்திலும், அவன் மூலமாகவுமே உலகும் உயிரும் வாழ்ந்து இயங்கி நிலைபெற்றிருக்கின்றனவென்றும், அவனுடன் உடல் மனம் உயிர்களிலும், ஞானம், கருமம், பக்தி என்னும் மூவழிகளிலும் ஒன்றுபடுவதே யோகமென்றும் விளக்கிக் காட்டுகிருர்.

'இந்தியக் கலைப் பண்புகளின் காப்பு' என்ற தலைப்பின் கீழ் தொடங்கிய கட்டுரைகள் 'ஆரியா'வின் ஏழாம் ஆண்டின் மத்தியில் முடிவுபெருமல் நின்றன. அவ்வாண்டில்தான் (1921) 'ஆரியா' நின்றுவிட்டது. அதன் அத்தியாத்ம சேவை அதோடு பூர்த்தியாய்விட்டது. ஸ்ரீ அரவிந்தர்

மகோன்னதங்களிலுள்ள உண்மைகளைக் கண்டு அனுபவித்து, அவைகளைக் கீழே கொண்டுவரும் வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருக்கையில் அவருக்கு வேறொன்றுக்கும் அவகாசமில்லாது போயிற்று. எனினும், கடைசியாக 'ஆரியா'வை விட்டுவிடுமுன் சம்ஸ்கிருத இலக்கியம் முழுமையும் இந்திய நுண்கலைகளையும் நன்காராய்ந்து இந்தியக் கலை வாழ்க்கையின் மேன்மையை வலியுறுத்தினர்.

'ஆரியா' இந்திய நாட்டைப்பற்றிய விஷயங்களை ஆராய்வதோடு நின்றுவிடாமல் மேல்நாட்டுக் கலை வாழ்வின் பலதிறப்பட்ட அம்சங்களையும் ஆராய்ந்து அவைகளின் சிறப்பையும் குறைகளையும் விளக்கிக் காட்டிற்று. 'மானிட ஒற்றுமையின் லட்சியம்' என்னும் கட்டுரைகள் தீர்க்கதரிசியின் தெளிவான திருஷ்டியுடன் தத்துவங்களைச் சரித்திர ரீதியில் ஆராய்ந்து ஆத்மீக ஒற்றுமை யேற்படுவதற்குரிய நிபந்தனைகளைக் குறிப்பாகக் கூறுகின்றன. ஆங்கிலக் கவிதையைப்பற்றிய விமர்சனமும், நியெட்சேயின் அதிமானுஷ தத்துவத்தைப் பற்றிய கட்டுரையும் கவனிக்கத் தக்கவை.

'ஆரியா' நடைபெற்ற ஏழு வருஷ காலத்தில் ஸ்ரீ அரவிந்தர் எவ்வளவு பரந்த, ஆழ்ந்த விஷயங்களை அதில் ஆராய்ச்சிசெய்து வந்திருக்கிறார் என்பதை, நாம் மேற்கூறியவை ஓரளவுமட்டுமே காட்டுகின்றன. இவ்வாராய்ச்சிகள் அவரது நாட்டினர் மட்டுமல்லாது மக்கட்குலமே அமுதவாழ்வு பெற்றுய்வதற்குப் பெரிதும் பயன்படுகின்றன வென்று சொல்லுவது மிகையாகாது.

இக்கட்டுரைகளிற் பல இன்னும் புத்தகவடிவில் வரவில்லை. புத்தகமாக வெளிவந்திருப்பவைகளுள் 'கீதைக் கட்டுரைகள்' 'தெய்விக வாழ்க்கை' 'ஈசோபநிடதம்' 'சித்தனையும் மின்னொளியும்' 'இந்திய மருமலர்ச்சி' 'இராகிளைடஸ்', 'சில கருத்துக்களும் மதிப்புரைகளும்' ஆகியவை குறிப்பிடத்தக்கன.

"கவிதைகள்"

இதே காலத்தில், ஸ்ரீ அரவிந்தா இங்கிலாந்திலும், பரோடாவிலும்,வங்காளத்தில் ராஜீய அலுவல்களின் மத்தி

யிலும், புதுவையில் ஆரம்ப காலத்திலும் எழுதிய கவிதைகள் புத்தக வடிவில் வெளிவர வாரம்பித்தன. இக் கவிதைகளை முன்னமே நாம் ஆங்காங்கு விமர்சனம் செய்திருக்கிறோம். இவைகளுக்குப் பின் சில வருஷங்கள் ஸ்ரீ அரவிந்தர் கவிதைகள் யாதொன்றும் கட்டவில்லை. ஆனால், 1930-முதல் 1934-வரையிலும் தமது முதிர்ந்த ஞானத்தில் கனிந்த அனுபவங்களை அவ்வப்போது சில பாடல்களில் அமைத்துப் பாடியிருக்கிறார். இப் பாடல்களில் 'நிர்வாணம்' 'சிவன்' 'ஜீவன்முக்தன்'. 'பரவச நிலை' முதலியன குறிப்பிடத்தக்கவை. இவற்றில் ஆறு பாடல்களே '**ஸ்ரீ அரவிந்தரின் ஆறு கவிதைகள்**' என்னும் பெயருடன் 1934-ல் புத்தக வடிவில் வெளிவந்தன. பின்னர் 1942-ல் அவருடைய கவிதைகளும் நாடகங்களும் ஒருங்கே திரட்டப்பட்டு இரண்டு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன.

## ஸ்ரீ அரவிந்தரின் ஏகாந்த வாசம்

'ஆரியா' பத்திரிகை நின்றபின், ஸ்ரீ அரவிந்தர் மேன் மேலும் ஏகாந்தத்தையே நாடலானார். அவர் வெளியே நடைபெறும் எத்தகைய இயக்கங்களுடனும் தொடர்பு வைத்துக்கொள்ளவில்லை. தமது ஏகாந்த வாசத்தின் உட்கருத்து என்ன என்பதைத் தேசபந்து சித்தரஞ்சன தாசருக்கு 1922-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் எழுதிய கடிதம் ஒன்றில் விளக்கியுள்ளார். அது வருமாறு :*

எனது தற்காலக் கருத்தையும், அதன் பயனை, வாழ்க்கையையும் செயலையும் பற்றி நான் கொண்டுள்ள மனப்பான்மையையும் நீர் அறிவீர் என்றே எண்ணுகிறேன். செயலுக்கும் வாழ்க்கைக்கும் உண்மையான ஆதாரமாக விளங்குவது அத்தியாத்மமே, அதாவது யோகத்தினால் வளர்க்கப் பெறும் புத்துணர்வே, என்பது முன்னர் அவ்வளவு தெளிவாகவும் தீவிரமாகவும் எனக்குப் புலப்படவில்லை. இப்போதுதான் அது எனக்கு மேன்மேலும் பிரத்யட்சமாகியும் உறுதிப்பட்டும் வருகின்றது. மனிதன் இப் புதிய அஸ்திவாரத்தின் மீது நின்று உயர்ந்தால் அல்லது, மக்களினம் இதுகாறும் உழன்றுவரும் பயனற்ற வட்டத்திலிருந்து

* இது "சர்வதேசப் பிரசனை விஷயமாக ஸ்ரீ அரவிந்தரின் சில கருத்துக்கள்" என ஸ்ரீ அனில் பாரன் ராய் எழுதியுள்ள சிறு நூலினின்றும் எடுக்கப்பட்டது.

வெளியேறப் போவதில்லை என்பதை மேன்மேலும் தெளிவாகக் காண்கிறேன். உலகிற்கு இப் பெரும் வெற்றியைத் தேடிக் கொடுப்பதே பாரத நாட்டிற்குரிய தனிப் பணியாகும் என நான் நம்புகிறேன். இப்பேருணர்வின் தீவிர சக்தியின் இயல்புதான் என்ன? இதன் உண்மை பலிதமாவதற்குரிய நிபந்தனை யாது? இதை எவ்விதம் கீழே கொண்டுவந்து, ஆயத்தம் செய்து, சீர்படுத்தி வாழ்க்கையுடன் பொருந்தும்படிச் செய்வது? நமக்கு இப்போ துள்ள கரணங்களாகிய புத்தி, மனம், உயிர், உடல், ஆகியவற்றை இம் மகத்தான உரு மாறுதலுக்கு உரிய உண்மையான, பரிபக்குவ மான சாதனங்களாகச் செய்வது எங்ஙனம்? எனது சொந்த அனு பவத்திலேயே இப்பிரச்னைகளுக்கு வழிதேட முயன்று வந்திருக் கிறேன். இப்போது இவற்றின் இரகசியத்திற்குரிய நிச்சயமான ஆதாரத்தைக் கண்டுபிடித்துள்ளேன். இந்த இரகசியத்தைப் பற் றிய விரிவான அறிவையும், இதன்மீது ஓரளவு ஆட்சியையும் பெற் றுள்ளேன். ஆயினும், இவையெல்லாம் இன்னும் பரிபூரண மடையவில்லை. ஆகவேதான், நான் இன்னும் ஒதுக்கத்திலிருக்க வேண்டி யிருக்கிறது. செயலுக்குரிய இந்த நவசக்தியை உறுதி யாகவும் பூரணமாகவும் பெறும்வரையில் புறத்துறைகளில் வேலை செய்வதில்லை யெனவும், பரிபூரண அடிப்படையின்றி மேல் கட் டிடம் எழுப்புவதில்லை யெனவும் தீர்மானித்துள்ளேன். ஆயினும், முன்னையைவிடப் பெரிய அளவில் ஒரு பணியை மேற்கொள் வதில் நான் இன்று வெகுதூரம் முனைந்துள்ளேன். சாதனத்தை மேற்கொள்ளுவதற்கும் என்னைப்போன்று தயாராக்குவதற்குமாக மற்றவர்களைப் பழக்குவதே இப்பணியாகும். இது இன்றி என் னுடைய வருங்கால வேலையைத் துவக்கவும் இயலாது.

இவ்வண்ணமிருந்தும், சில வருஷங்களுக்குமுன் மீண் டும் மீண்டும் அவருக்குக் காங்கிரஸ் தலைவர் பதவி அளிக் கப் பட்டது. அதை அவர் மறுத்துவிட்டார். சமீபத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாட ஏற்பட்ட கூட்டங்களில் தலைமை வகிக்க அவருக்கு அழைப்பு வந்தது. அதையும் மறுத்துவிட்டார்.

### ரவீந்திரநாத் தாகூர் பேட்டி

ஸ்ரீ அரவிந்தர் சாதாரணமாக தம்மைக் காண விரும்பு வோர் எவருக்கும் பேட்டியளிப்பதில்லை. 1926-ல் பூரண ஏகாந்தத்தை ஆரம்பித்ததிலிருந்து இதுவரையிலும் கவி ரவீந்திரநாத தாகூர் ஒருவரையே அவர் பார்த்திருக்கிறார். 1928-ல் தான், கவி தாகூர் பிரெஞ்சுக் கப்பலில் மேல்நாட்

...ும் பிரயாணம் செய்கையில் புதுவையிலிறங்கி ஸ்ரீ அர...ந்தரைத் தனித்து கண்டது. பின்னர் தாகூர் அவர்கள் 'மாடர்ன் ரெவ்யூ' பத்திரிகையில், தாம் ஸ்ரீ அரவிந்தரைப் பார்த்த முதற்பார்வையிலேயே அவர் ஆன்ம நிறைவை அடையப்பெற்றவரென அறிந்து கொண்டதாகவும், உள் நின்ற ஒளியும் அமைதியும் அவரது முகத்தில் மிளிர்ந்தன வென்றும், அவரிடமிருந்த ஒரு தனிமொழியைக் கேட்க இந் நாடு தயாராயிருக்கிறதென்று அவருக்கு அறிவித்த தாகவும் கூறியிருக்கிறார்.

அவர் இன்று ஏகாந்தமாகத் தம் அறைகளிலிருந்து கொண்டே பிரபஞ்ச விவகாரங்கள் அனைத்தையும் நோக்கி வருவதுடன், பரம்பொருளின் மிக மிக உயர்ந்த சிகரங்கள் எல்லாவற்றையும், அந்தரங்க ஆழங்கள் எல்லாவற்றையும் கண்டு களித்துப் பரிபூரணமான பேருண்மையின் அனுபவத்துடன் இப்புவியிலேயே இறைவனின் திருவுள்ளப்படி பணியாற்றியும், மேலிருந்து கீழிறங்கி வரும் தெய்வ 'விஞ்ஞான சக்தி' (Supramental Force) யினால் மக்கட் குலம் மாறுதலடையும் வழியைத்தேடியும் வருகின்றார்.

## ஸ்ரீ அரவிந்தரும் இவ்வுலக மகாயுத்தமும்

இன்று நம் கண்முன்னே மிகக் கோரமான மகா யுத்தமொன்று நடந்து வருகின்றது. இதனால் பாதிக்கப் படாத நாடோ, மக்களோ, உயிரினமோ, இவ்வுலகில் கிடையா. முற்றும் துறந்த முனிவரும் இக்கோர அழிவைக்கண்டு வாளாவிருக்க இயலாது. ஸ்ரீ அரவிந்தர் இவ்வுலக யுத்த விஷயமாகக்கொண்டுள்ள மனப்பான்மை யாது? இந்த யுத்தத்தின் உட்பொருளைப்பற்றி அவர் கூறுவதென்ன?

உலகமானது, மானிட சுதந்திரம், மானிட ஒற்றுமை, ஆத்மஞானம், தெய்விக வாழ்க்கை இவற்றை நோக்கி முன்னேறிச் செல்லுகின்றது. இம் முன்னேற்றம் தெய்வ சம்மதமானது என்பதில் யாதொரு ஐயமுமில்லை. ஆயினும், உலகிலும் மக்கட் குலத்திலும் முன்னேற்றத்திற்கான இம் முயற்சிகள் நிறைவேறுவண்ணம் சில துஷ்ட சக்திகள் தடுத்துவருவது கண்கூடு. இவற்றை நம் முன்னோர்கள்

அசுர சக்திகள் என்றழைத்தனர். தெய்வ சக்திகளைப் போலவே, இச்சக்திகளும் மக்கட் குலத்தில் ஊடுருவி யுள்ளன. இன்று இவை ஒருங்கே திரண்டு அச்சு வல்ல ரசுகளாக வடிவெடுத்துள்ளன. இவ்வசுர சக்திகளுக் கும் மேலே சொன்ன தெய்வ சக்திகளுக்கும் கடும்போர் நடந்துவருகின்றது. உலகில் ஆத்மீக சுதந்திரமும் ஆத்மீக வாழ்க்கையும் நிலைபெற வேண்டுமாயின், இவ்வசுர சக்தி களை நிர்மூலமாக அழிப்பது இன்றியமையாத தாகும். ஏனெனில், இவ்வசுர சக்திகள் உலகில் ஓங்குமாயின், சிந் தனை, ஆத்மீகச் சுதந்திரங்களுக்கு இவ்வுலகில் இடமே இராது. உலகில் எது ஆக்கம் பெறவேண்டும்? அசுர சக் தியா? தெய்வ சக்தியா? இதுவே இம்மகாயுத்தத்தின் உட் பொருளாகும், ஸ்ரீ அரவிந்தரின் கருத்துக்களின்படி.

நேசதேசக் கட்சியினரிடம் பல குறைகள் உண்டு. ஆயினும், இன்று ஆண்டவன் அவர்களைக் கருவியாகக் கொண்டே அசுரசக்திகளின் பிரதிநிதிகளான அச்சு வல் லரசுகளின்மீது இந்த யுத்தத்தை நடத்தி வருகின்றான். ஆதலால், இறைவனின் வெற்றியை நாடுவோர், நேசக் கட்சியினரை ஆதரித்து அவர்களின் வெற்றியைக் கோரக் கடமைப்பட்டுள்ளனர். மகா யுதத்தின் இம் மகத்தான உட்பொருளை அறியாதோரே, அச்சு வல்லரசுகளின் வெற் றியை விரும்புவர்.

இதுவே ஸ்ரீ அரவிந்தர் இந்த மகாயுத்த சம்மந்தமாகக் கொண்டுள்ள மனப்பான்மை. இதன் காரணமாகவே அவர் நேச தேசத்தவரின் வெற்றியை ஆதரித்தும் யுத்த நிதிகளுக்குப் பண உதவியளித்தும் வருகின்றார்.

## ஸ்ரீ அரவிந்தரும் கிரிப்ஸ் தூதும்

இன்று, இந்த யுத்த நெருக்கடியில் மக்களின் வாழ் விலும் சிந்தனைகளிலும் புரட்சிகரமான மாறுதல்கள் பல ஏற்பட்டுவருவது கண்கூடு. அடிமைப்பட்ட நாடுகளும் ஒடுக்கப்பட்ட மக்களும், இந்நெருக்கடி தீர்ந்து உலகில் உண்மையான சுதந்திரமும் ஒரு புது சமூக அமைப்பும் உலகமும் ஏற்படப்போவதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். யுத்தம் நின்று சமாதானம் நில

வும்போது, உலகவாழ்க்கையின் அடிப்படைகளில் மேலும் பல மாறுதல்கள் ஏற்படுவது திண்ணம். தீர்க்க தரிசனம் வாய்ந்த உலகச் சிந்தனையாளர்கள் இவ்விஷயங்களில் இப்போதே கவனஞ் செலுத்தி வருகின்றனர். ராஜீயவாதிகளும் ஏதேதோ திட்டங்கள் வகுத்து வருகின்றனர். இம்மாறுதல்களிலும், புது உலகிற்குரிய இத்திட்டங்களிலும், நமது இந்தியாவின் நிலை என்ன? துரதிருஷ்டவசமாக, இந்திய மக்கள் தங்களுக்குள் பிளவுபட்டிருக்கின்றனர். வருங்கால வாழ்க்கையைப் பற்றித் தங்கள் அபிலாஷைகளையும் கருத்துக்களையும் ஒரு முகமாக அவர்கள் உலகிற்குத் தெளிவு படுத்தவில்லை.

இந்த நிலையில் ஜப்பான் நெருக்கடி ஏற்பட்டது. பிரிட்டிஷ் சர்க்கார் இந்நாட்டின் வருங்கால அரசியலைப் பற்றியும் இடைக்கால ஏற்பாட்டைப் பற்றியும் ஒரு அறிக்கை தயாரித்து இந்தியத் தலைவர்களையும் கட்சிகளையும் சந்தித்துப் பேச சர் ஸ்டாப்போர்டு கிரிப்ஸைத் தூதராக அனுப்பினார்கள். ஜப்பான் நெருக்கடியினலேற்பட்ட இந்த நிலைமையில் இறைவன் அருளைக் கண்டார் ஸ்ரீ அரவிந்தர். இறங்கி வரும் தெய்வ அருளை அசட்டைசெய்து, அரிய சந்தர்ப்பத்தைக் கைநழுவ விடக் கூடாதென அவருக்குப் புலப்பட்டது. நாட்டின் நிலையை நன்குணர்ந்தவரும் இறைவன் அருட்செயல்களை நன்கறிந்த வருமான அவர், கிரிப்சின் அறிக்கையில் பல குறைகளும் சிக்கல்களும் இருப்பினும், அதை ஏற்றுக்கொண்டு விட்டால் நாளடைவில் அவை இறையருளால் தாமாக மறைந்து போமெனக் கருதினர். அரசியலிலிருந்து பலகாலமாக ஒதுங்கியிருப்பவராக இருந்தும், இவ்விஷயத்தில் தமது முழுப்பொறுப்பையும் உணர்ந்து, கிரிப்சின் திட்டத்தைத் தலைவர்கள் தைரியமாக ஒப்புக்கொள்ள வேண்டுமென வற்புறுத்தினர். அவர் 31 மார்ச் 1942-ல் சர் ஸ்டாப்போர்டு கிரிப்சுக்கு ஒரு செய்தியனுப்பினர். அது உண்மையில் இந்திய மக்களுக்கு அனுப்பிய செய்தியேயாகும். அது வருமாறு :

“நான் தங்கள் ரேடியோ பிரசங்கத்தைக் கேட்டேன். இது சமயம் அரசியல் துறையிலிருந்து விலகி ஆத்மீகத் துறையில் ஈடு

பட்டிருப்பினும், நான் ஒரு சமயம் தேசீயத் தலைவனையும் தொண்டனையும் இருந்திருக்கிறேன். அந்த உரிமையில், இத்திட்டம் உருப்படியாவதற்குத் தாங்கள் மேற்கொண்ட முயற்சிகள் யாவற்றிற்கும் என் பாராட்டுதலைத் தங்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறேன். இத்திட்டமானது, பாரத நாடு தன் சுதந்திரத்தையும் ஒற்றுமையையும் தன்னிச்சைப்படித் தானே நிர்ணயித்துக்கொள்ளவும், உலகில் சுதந்திர நாடுகளுக்கிடையே தனக்குரிய ஸ்தானத்தைப் பெறவும் வாய்ப்பு அளிப்பதால், இதை நான் வரவேற்கிறேன். பிணக்குகளையும் பிரிவுகளையும் சற்றே ஒதுக்கிவைத்து நாடு இதை ஏற்றுப் பயன்படுத்திக் கொள்ளுமென எண்ணுகிறேன். பழைய போராட்டங்களுக்குப் பதிலாக, பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் நல்லுறவு ஏற்படுமென நான் எதிர்பார்க்கிறேன். அவ்விதமே ஏற்படுமாயின், அது விரிவானதோர் உலக ஐக்கியத்திற்கு நம்மை இட்டுச்செல்லும் ஒரு முக்கியமான படியாகும். அவ்வைக்கிய உலகில் இந்தியாவின் ஆத்ம சக்தியானது மக்களினம் ஒரு விழுமிய இன்பவாழ்வை எய்துவதற்குத் துணையாக நிற்கும். இந்த நோக்கில், தங்கள் திட்டத்திற்கு நான் அளிக்கும் ஆதரவு எவ்வகையிலாவது பயன் படுமாயின், அதை நான் இதன் மூலமாகப் பகிரங்கப்படுத்துகிறேன்.''

இப்பகிரங்க அறிக்கையுடன் நின்று விடாமல் ஸ்ரீ அரவிந்தர் ஒரு பிரமுகரைக் காங்கிரசுக்குத் தூதனுப்பினார். ராஜீய விவரங்களிலும் நுட்பங்களிலும் மூழ்கிப்போன காங்கிரஸ் தலைவர்கள், ஸ்ரீ அரவிந்தரின் முதிர்ந்த ஞானத்தையும் தீர்க்கதரிசனத்தையும் உணராது அவரை அசட்டை செய்து அவரது ஆலோசனையைப் புறக்கணித்தனர். அரசியல் விவகாரங்களினின்று பல காலமாக ஒதுங்கியிருக்கும் துறவியொருவருக்கு இந்த நெருக்கடியான நிலைமையில் ஆலோசனைகூற உரிமையேது? என்று கேட்டனர். ராஜீய வாதிகள் தங்களுக்குத் தோன்றியதைச் செய்தனர். ஆதலால், அவர்களைக் குறை கூறுவதிலும் பயனில்லை. கிரிப்ஸ் தூது என்னவோ தோல்வியுற்றது. அவரது திட்டத்தை இந்திய ராஜீயக் கட்சிகள் ஒப்புக்கொள்ளவில்லை. இந்திய நிலைமை முன்னிருந்ததை விட இப்போது மோசமாயிருக்கிறது. கிரிப்ஸ் திட்டம் ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தால், நிலைமை ஒருக்கால் மாறியிருக்குமோ என்னவோ?

## ஆசிரமம்

இன்று புதுவையில் ஸ்ரீ அரவிந்தரைச் சுற்றி ஒரு யோகாசிரமம் வளர்ந்து வருகின்றது. அது ஒன்றே, ஸ்ரீ அரவிந்தர் பொது வாழ்விலிருந்து விலகி ஏகாந்தவாசம் செய்து வருவது தம் பொருட்டல்லவென்பதைக் காட்டப் போதுமானது. ஸ்ரீ அரவிந்த ஆசிரமத்தைப் பற்றியும் அவ்வாசிரமத்தில் பயிலப்படும் அவரது யோகத்தைப்பற்றி யும் அடுத்த இரண்டு அத்தியாயங்களில் விளக்குவோம்.

1910 முதல் இதுவரையிலும் முப்பத்திமூன்று ஆண்டு களுக்கு மேலாக, பகவான் அரவிந்தர் தவப் பூமியாகிய பண்டைத் தமிழ்நாட்டில் எழுந்தருளித் தவமிருந்துவரு கிறார். பகவான் பல்லாண்டுகள் வாழ்க! அவரது பூரண சித்தியில் தமிழ்நாடு பேரின்பம் பெறுக!

# அ. ஸ்ரீ அரவிந்தரின் விஞ்ஞான யோக தத்துவம்

எங்கும் அறியாமையும் துயரமும் துன்பமும் மலிந்துள்ள இவ்வுலக வாழ்க்கையில் அதிருப்தி கொண்ட மக்கள், இந்நிலையினின்று வெளியேற வகையறியாது பெரிதும் அல்லற்படுவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

## வாழ்க்கையின் புதிர்

இவ்வறியாமையும் துயரமும் துன்பமும் ஏன்? இவை இம்மண்ணுலக வாழ்க்கையின் இன்றியமையாத இயல்புகளா? ஆண்டவன் படைப்பில் இவை தவிர்க்க முடியாத அம்சங்கள்தாமா? இங்ஙனமாயின் படைப்பின் நோக்கந்தான் என்ன? அருளுருவினன் என மறைகள் போற்றும் இறைவன், தன்னியல்புக்கு மாறாக உயிர்களை இவ்வண்ணம் வாட்டுவதேன்? முற்றறிவும், முடிவிலா இன்பமும், அந்தமில் ஆற்றலும் உடைய அவன் படைத்த உலகில் இவை ஏற்பட்ட தெங்ஙனம்? அவன் உறையும் விண்ணுக்கும், மக்கள் வதியும் இம்மண்ணுக்கும் பாலம் போட முடியாததொரு பிளவு உள்ளதா? இவ்வறியாமை, துயரம், துன்பங்களினின்று தப்பி அவனையடைவதற்கு, அவ்விண்ணுலகை நோக்கி ஒரே பாய்ச்சலாகப் பாயவேண்டியதுதானா? உலக வாழ்க்கையைப்பற்றிய இப்பிரச்னைகள் நம் அறிவுக்கு எட்டாத புதிர்களாகவே இருந்து வருகின்றன.

இப்புதிர்களை விள்ளவேண்டிக் கடுந்தவத்திலும் தியானத்திலும் ஆழ்ந்த நம்முடைய பெரியோர்கள், இறைவன் அருளால் தம் உள்ளத்தில் உணர்ந்து தெளிந்த பேருண்மையினை வேதம், வேதாந்தம், சித்தாந்தம், உபநிடதம் ஆகியவற்றின் மூலமாக வெளியிட்டுள்ளனர். ஆனால், மனமும் வாக்கும் கடந்த உண்மையைச் சொல்லில் அமைத்து மனித அறிவுக்கு எட்டும் வகையில் விளங்க வைப்பது கடினமாதல் பற்றி இரத்தினச் சுருக்கமான மொழியில் சூசனையாக அவர்கள் கூறிப் போந்தவை, அக்கண்

திறக்கப் பெற்றோர்க்கேயன்றி பிறர்க்கு விளங்காதனவாக உள்ளன. ஆயினும், இவ்விஷயமாக அவர்கள் கண்ட முடிவுகளின் திரண்ட பொருளை ஒருவாறு பின்வருமாறு கூறலாம்.

### பெரியோர் கண்ட பூரண உண்மை

உள்ளது ஒன்றே. அது ஆதி அந்தமற்றது ; யாதொரு சார்புமற்றுத் தான் தானாக விளங்குவது. உண்மை-அறிவு-ஆனந்தம் (சச்சிதானந்தம்) அதன் இயல்பு. அதுவே பரம் பொருள். அதை நாம் முழுமுதற்கடவுள் என்கிறோம். ஒருவனேயாகிய அம்முழுமுதற்கடவுள், பலவாக—இவ்வுல குயிர்களாக—தன்னை வெளிப்படுத்திக் கொண்டு அவற்றுள் ஊடுருவிப் பரவி அவற்றை இயக்குகிறான். பரநிலையில் தனித்து விளங்கும் அவன், தன்னின்றுமே படைக்கும் படைப்பில் நீக்கமறப் பரவித்தன்னை உட்புகுத்திக்கொள்ளு கையில், தனக்கு இயல்பான அறிவு, ஒளி, இன்பங்களை மட்டுமன்றி அவற்றிற்கு நேர்மாறான அறியாமை, இருள், துன்பங்களையும் ஏற்று, அவற்றுள் மூழ்கிறான். இது அவனது திருவுள்ளம் ; அவனது திருவிளையாடல். இவ் வண்ணம் அவன் அந்தகாரத்திலும் அஞ்ஞானத்திலும் துன்பத்திலும் அமிழ உடன்பட்டதானது ஒரு பெரு வேள் வியாகும். ஆயினும், அவன் தன்னியல்பில் யாதொரு மாறுபாடும் அடைவதில்லை. அவன் யாதொரு தொடர்பு மின்றித் தனித்திலங்கும் தன் பரநிலையில் எத்தகைய சுதந் திரத்தையும் இன்பத்தையும் அனுபவிக்கின்றானோ, அத் தகைய சுதந்திரத்தையும் இன்பத்தையும் இவ்வுலக இருளி லும் அஞ்ஞானத்திலும் தன்னை உட்படுத்திக்கொள்ளும் நிலையிலும் அனுபவிக்கிறான். மேலும், சிருட்டிப் பொருள் கள் யாவும் அவனின்றே உதிப்பனவாதலாலும், அவன் அவற்றில் பரவி அவற்றை இயக்கியும் தாங்கியும் வருவதா லும், அவனுடைய உணர்வில் தனக்கும் அவற்றிற்கும் யாதொரு பேதமும் எழுவதில்லை.

இருப்பவன் ஒருவனே யெனக் கூறினோம். அவ்வித மாயின், அவனினும் உயர்ந்தவன் எவனும் இருக்க முடி யாது என்பது தெளிவு. அவனது அலகிலா ஆற்றலைக் கட்டுப்படுத்தக் கூடிய வேறெதுவும் இருக்கமுடியாது.

அவன் இன்னதுதான் செய்ய முடியும், இன்னது செய்ய முடியாது என்னும் வரையறை இருக்க முடியாது. ஆத லால், ஒருவனயிருப்பவன் பல உருவங்கள் எடுத்துக் கொள்ளலாம். அவனது ஒருமை பன்மையாகப் பரிணமிக்க லாம். எங்கும் பரவியுள்ளவனயும், எல்லாவல்லமையும் உடையவனயும், ஒளி எல்லாமாயும் உள்ள இறைவன் இம் மானிட உடலில் புகுந்து, அவதார புருஷனுக விளங்கலாம். உலகைச் சார்ந்த இருளும் அஞ்ஞானமும் அவனைக் கட்டுப் படுத்தாவாதலால், தானே சுயேச்சையாக இவற்றை அவன் ஏற்றுக் கொள்வதற்குத் தடை யாதுளது? அவனல் யாவும் இயலுமெனில், அவ்விதம் இயங்குவதனல் அவ னது கடவுட்டன்மைக்கு இழுக்கேற்படுமா? நன்மை தீமை, வலிமை எளிமை, புண்ணியம் பாவம் ஆகிய யாவும் அவன் உண்டாக்கியவையேயாயின், அவன் நன்மையிலும் புண்ணியத்திலும் வலிமையிலும் இருப்பதைப்போலவே, தீமையிலும் பாவத்திலும் எளிமையிலும் இருக்க முடி யாதா? அன்பும் அருளும் அவனது செயலாக இருப் பதைப்போலவே, போரும் பகையும் அவனது செயலே எனக்கொள்வதில் தவறுண்டோ? யாவும் அவனது திரு விளையாடலே யன்ருே?

இதுவே பூரண உண்மை. இப்பூரண உண்மையில், நமது பார்வைக்கு ஒன்றுக்கொன்று நேர்முரணுகக் காணப் படும் பொருள்கள் யாவும் அடங்கும். இவ்வுண்மையுடன் ஒன்றினல் நாம் இவ்வுலகில் காணும் முரண்கள், பிணக்கு கள் ஆகிய யாவும் ஒன்ருெடொன்று இணைந்து சர்வ சமரச பாவம் ஏற்படும்.

**உயிர்களின் பிரிவுணர்வு**

ஆனல், சிருட்டிப் பொருள்களின் நிலை என்ன? ஏகப் பரம்பொருளினின்று உதித்த அவை ஒவ்வொன்றும், இறைவனுடன் ஒன்றியும் இறைவன் ஊடுருவிப் பரவி யுள்ள மற்றெல்லாவற்றுடனும் ஒன்றியும் இருப்பதற்குப் பதிலாக, பேத உணர்வு பெற்றுத் தத்தம் தனி நிலைகளையும் தனி விருப்பங்களையும் வற்புறுத்தித் தனித் தனியாகப் பிரிந்து, தம்முட் போட்டியிடவும் போராடவும் ஆயின. தான் என்பது போய், "நான் எனது" என்னும் தனி

முனைப்பு முளைக்கலாயிற்று. ஒருமையுணர்வு அறவே ஒழிந்து தனியுணர்வு நிலைக்கலாயிற்று. இப்பிரிவுணர்வே அறியாமையிலும், அவ்வறியாமையானது இருள்செறிந்த, உணர்வற்ற நிலையிலும் முடியலாயின. இறைவனிடமிருந்து இவ்வண்ணம் பிரிந்த படைப்புப் பொருள்கள் படுகுழியில் வீழ்ந்து துன்புறலாயின.

## உலகுயிர்களின் பரிணாமம்

படைப்புடன் இவ்வீழ்ச்சியும் ஏற்படுவானேன்? இது இறைவனின் பொருளற்ற ஒரு பித்துதானா? அப்படியொன்றும் நாம் கருதுவதற்கில்லை. அவனுடைய படைப்பில் ஒரு திட்டமும் ஒழுங்கும் உண்டு. அவனின்றுமே உயிர், உலகு ஆகிய யாவும் வந்தன. அவனே யாவற்றிலும் பரவியுள்ளான். அவனது சைதன்னியமே யாவற்றிலும் மறைந்து கிடக்கின்றது. இவ்வீழ்ச்சியின் முழுப்பளுவையும் அவனே இன்புடன் ஏற்றுத் தாங்குகிறான். இருளிலும் அறியாமையிலும் துன்பத்திலும் உழலும் உயிர்கள் யாவும் அவற்றினின்று படிப்படியாக விடுதலையடைந்து, தன்னைப்போலவே ஒளியும் அறிவும் இன்பமும் திகழ விளங்கவேண்டுமென்பதே அவன் திருவுள்ளக் கருத்து. அங்ஙனம் அவை மீட்சிபெறுவதும் தனது பொறுப்பே என்பதை அவன் உணராமலில்லை. அவன் இம்மண்ணுலகில் பலதடவை அவதரித்துத், தன் ஒளியையும் சக்தியையும் பாய்ச்சி, உலகுயிர்கள் படிப்படியாக வளர்ச்சி யடையுமாறு செய்துள்ளான். அவனது திருவருளினாலேயே, சடப்பொருளில் உயிரும், உயிரில் மனமும் படிப்படியாகத் தோன்றலாயின. உடல் உயிர் மனம் என்னும் மூன்று நிலைகளும் வாய்க்கப் பெற்ற மனிதனே இன்று இவ்வுலகச் சிருட்டிப் பொருள்களுக்குத் தலைமை வகிக்கிறான்.

## மனநிலையே பரிணாமத்தின் இறுதியா?

இதுவே உலகுயிர்களின் பரிணாமத்தின் இறுதியான படியா? இங்ஙனமாயின், இவ்வாழ்க்கையில் காணும் அறியாமையும் துயரமும் துன்பமும் ஒழிவதற்கு வழியே கிடையாது. தனி மனிதர்களிற் சிலர் தங்கள் தவத்தினாலும் யோக சக்தியினாலும் இவற்றினின்று விடுதலையடைந்து

இறைவனடியைச் சேரக்கூடுமாயினும், மக்கட் குலமும் இவ்வுலகும் இன்றுள்ள துன்ப நிலையில் மேலும் நிலைத் திருக்க வேண்டியதேயாகும். உலகும் உயிரும் மனநிலையைக் கடந்து உயரிய உணர்வு நிலையெய்தி உருமாறுதலடைவது சாத்தியமில்லையா என்பதைப்பற்றி நம் முன்னோர்கள் ஆராய்ந்ததாகத் தெரியவில்லை. அவர்கள் மனத்தையும் உலகத்தையும் மாற்றுவது கடினமென முடிவு செய்து, மனத்தை வெறுத்து, உலகத்தைத் துறந்து, உலகத்திற் கப்பாலுள்ள பரம்பொருளின் மோனத்திலும் அமைதியிலும் லயித்துவிடுவதே மேல் எனக்கொண்டனர். உதாரணமாக, புத்தரும் சங்கரரும் இவ்வுலகம் மாயையென்றும், அஞ்ஞானத்திற்கு இருப்பிடமென்றும், இவ்வஞ்ஞானமே உலகின் துயரங்களுக்குக் காரணமென்றும், ஆகவே, ஆதியிலிருந்த நிருவாணத்திலோ அல்லது அவ்வியக்த பிரம்மனிலோ லயமடைந்து விடுவதொன்றே வழியெனக் கூறிப்போயினர். வேதாந்தங்கூட, உலகம் கடவுள் அம்சம் பொருந்தியதாயினும், புறவெளிப்பாட்டில் அது கோணலாய்த் திரிந்தும் அஞ்ஞான இருளடங்கியுமிருப்பதால், அது என்றும் மாறுதலடையாதென்றும், ஆகவே, அதைப்பற்றி கவலைப் படாமல் நமதுள்ளத்தினுள்ளே கடவுளிடம் உறுதியாய் நிற்கவேண்டியதைத் தவிர வேறொன்றும் செய்வதற்கில்லை யென்றும் கருதுகிறது.

ஸ்ரீ அரவிந்தர், பூரண பரிணமத்தை மறுத்து நிற்கும் இக் கருத்துக்களை ஒப்புக்கொள்ளவில்லை. இவ்வுலகில் இன்று மன உணர்வே கடைசி உண்மையாக இருந்து வருவது வெளிப்படையாயினும், அது தனக்கப்பாலுள்ள உயர் உணர்வின் ஒரு அம்சமாகப் பரிணம மடையவேண்டியதாக இருக்கிறது. உலகம் இன்று தெய்வத்தின் பூரண சிருஷ்டியாயிராமல் அஞ்ஞான இருளடைந்த, கோணலான வெளிப்பாடாக இருப்பது உண்மைதான். ஆயினும், அது கடவுளின் உணர்வினுடையவும், சித்தத்தினுடையவும், ஆனந்தத்தினுடையவும் பூரண வெளிப்பாடாக ஆகி, முற்றிலும் தெய்வ மயமாக விரிவடைவதற்காகவே சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. மக்கட்குலமும் உலகும் இன்றுள்ள நிலையிலேயே நிரந்தரமாக இருக்கவேண்டுமென்

பது இறைவன் கருத்தாக இருக்கமுடியாது. ஆதலின், மனிதன் இன்று அடைந்துள்ள மனோநிலையே இப்பரிணாமத்தின் இறுதியானபடி யாகாது. அவன் பூரண அறிவும், ஒளியும், இன்பமும், ஆற்றலும் மீண்டும் பெற்று, இறைவன் உணர்வுடன் கலந்து, இவ்வுலகிலேயே வாழ்வதன் பொருட்டு, மற்றொரு படியை நோக்கி உயர்ந்து செல்ல வேண்டும். அதுவே ஸ்ரீ அரவிந்தர் தமது சித்தாந்தத்தில் சிறப்புடன் விளக்கும் "விஞ்ஞானம்" (**Supermind**) என்னும் உயரிய உணர்வு நிலையாகும்.

## விஞ்ஞான உணர்வு நிலை

ஸ்ரீ அரவிந்தர் கூறும் இந்த விஞ்ஞானம்தான் என்ன? உபநிடதங்கள் ஏழு உணர்வு நிலைகள் உண்டெனக் கூறுகின்றன. உடல், உயிர், மனம் என்பவை கீழேயுள்ள மூன்று உணர்வு நிலைகள். இவற்றுள் மனமே உயரிய உணர்வு நிலையாகும். இம் மனத்திற்கும் மனத்திற்கப்பாலுள்ள உயர் மனம், ஒளிமனம், அந்தர்ஞானமனம், அதிமனம் ஆகிய உயரிய உணர்வு நிலைகளுக்கும் அப்பால் ஓர் உயரிய உணர்வு நிலையுள்ளது. அதுவே "விஞ்ஞானம்." இந்த "விஞ்ஞான"த்திற்கும் அப்பாலுள்ளது இறைவனின் சச்சிதானந்த நிலை. இச் சச்சிதானந்தத்தில் சத்-சித்-ஆனந்தம் என்னும் மூன்று உணர்வு நிலைகள் அடங்கியுள்ளன. இங்ஙனமாக, உபநிடதங்களின்படி, கீழே, உடல்-உயிர்-மனம் என்னும் மூன்று உணர்வு நிலைகளும், நடுவே, விஞ்ஞானம் என்னும் உணர்வு நிலையும், உச்சியில், சத்—சித்—ஆனந்தம் என்னும் மூன்று உணர்வு நிலைகளும் உள்ளன. சச்சிதானந்தம் என்பது மூன்று உணர்வு நிலைகள் கொண்டதாயினும் இறைவன் அம் மூன்று நிலைகளிலும் ஏக காலத்தில் அமர்ந்திருக்கும் ஆற்றல் வாய்ந்தவனாதலால், அதை இறைவனின் ஒரு பெரு நிலையென்றே கூறலாம். அப்பெரு நிலையில் அமரும் இறைவன், படைக்கத் திருவுளங் கொள்ளும்போது, மேலேசொன்ன "விஞ்ஞானம்" என்னும் உணர்வு நிலையில் நின்று, அதன் மூலமாகவே தன்னைப் பலவாக வெளிப்படுத்திக் கொள்கிறான். அந்த நிலையைச் சார்ந்த இறைவனது சிற்சக்தியே (**Supramental Consciousness and Force**)

இவ்வுலகுயிர்களைப் படைக்கின்றது. அந்த நிலையில்தான் இறைவன் ஒருவனுகவும் பலவாகவும் ஒருங்கே திகழ்கிருன். அந்த நிலையைச் சார்ந்த உணர்வு பரிபூரணமான மெய் யுணர்வாகும். அதுவே "சத்தியலோகம்" எனவும் கூறப் படும். அங்கு பிரிவற்ற ஒருமையே எல்லாச் செயல்களுக் கும் அடிப்படையாக நிற்பது. படைப்பு முறையானது விரிவடைந்து அந்த விஞ்ஞான நிலையிலிருந்து படிப்படி யாக இறங்கி மன நிலைக்கு வரும்போதே, பிரிவுணர்ச்சி முற்றிலும் ஏற்படுகின்றது. அம்மன நிலையில்தான் அறி யாமை என்னும் திரை வாழ்க்கையை மூடிக்கொள்ளு கின்றது.

## விஞ்ஞான யோகம்

எல்லாத் துன்பங்களுக்குங் காரணமான இவ்வறி யாமை இவ்வுலக வாழ்க்கையிலிருந்து அறவே நீங்க வேண்டுமாயின், ஒரு புறம் மக்களினத்தின் உணர்வானது அவ்விஞ்ஞான உணர்வு நிலையை நோக்கி மேன்மேலும் உயர்ந்து செல்லவேண்டும். இதுதான் உணர்வின் ஏற்றம். மற்ருெருபுறம் அவ்விஞ்ஞான நிலையைச் சார்ந்த மெய் யுணர்வும் ஒளியும் சக்தியும் கீழிறங்கிவந்து, இவ்வுலக வாழ்க்கையில் பாய்ந்து, மானிடமனம், உயிர், உடல்கள் முற்றிலும் தெய்விக உருமாறுதலடையும்படிச் செய்வதும் இன்றியமையாததாகும். இதுதான் உணர்வின் இறக்கம். மனிதனின் உணர்வு மேல்நோக்கி ஏற ஏற, மேலேயுள்ள உணர்வு நிலைகளின் சக்தியானது கீழேயுள்ள மனம், உயிர், உடல் நிலைகளில் இறங்கி அவனுடைய குறைகளை நீக்கி, முற்றிலும் உருமாறுதலடையச் செய்கின்றது. ஏற் றமும் இறக்கமுமாகிய இவ்விரு இயக்கங்களும் இங்ஙனம் நடைபெறும்போதே, மனிதன் தெய்வ மனிதனுகி, முற்ற றிவும், பேரொளியும், பேராற்றலும், பேரின்பமும் வாய்க் கப்பெற்று இந்நிலவுலகில் அமரனுகப் பொலிவான். இம் மண்ணுலகும் தன் உணர்வில் மாறுதல் எய்தி, விண்ணுல கின் தன்மையை மேன்மேலும் அடையப்பெறும். மனித னும் உலகும் இவ்வுயர் நிலையை அடையவேண்டுமென் பதே இறைவனின் திருவுள்ளக் கருத்தாகும். படைப்பின் நோக்கமும் உலகப் பரிணுமத்தின் இறுதியான படியும் இதுவே.

கீழ் உணர்வுகளின் ஏற்றமும், விஞ்ஞான உணர்வினுடையவும் சக்தியினுடையவும் இறக்கமும் — ஆகிய இவ்விரண்டு இயக்கங்களைக் கொண்ட யோகமே **பூரண விஞ்ஞான யோகம்.** இவ்விஞ்ஞான உணர்வும் சக்தியும் ஒளியும் இம் மண்ணுலகில் இறங்குவதன் பொருட்டு, மனிதன் தன் கீழியல்புகளை வென்று, இறைவன்பால் முற்றிலும் அடைக்கலம் புகுந்து, அவனுக்குப் பக்திசெய்து, தெய்விக உணர்வை மேன்மேலும் பெருக்கி, அவனருளையே இடைவிடாது நாடி நிற்கவேண்டும். அவன் இவ்வண்ணம் சாதனஞ் செய்து மேலே எழ எழ, விஞ்ஞான அருளும் **(Supramental Grace)** கீழே இறங்கி வந்து அவன் உருமாறுதலடையும்படிச் செய்கின்றது.

## விஞ்ஞானமே பெரிய உண்மை

விஞ்ஞான உணர்வு உலகில் இறங்குவதுதான் எல்லாவற்றிலும் மிகப் பெரிய உண்மை. இவ்வுண்மை உணர்வில்தான், கடவுள் தமது தனி உண்மையையும் சிருஷ்டியில் தாம் வெளிப்படையாகத் தோன்றுவதையும் ஒருங்கே காண்கிறார். தான் தானாக நிற்பது, சத் சித் ஆனந்த சொரூபமாயிருப்பது, வியக்தமாயிருப்பது, எல்லாம் ஒன்றே என்று அறிவது இந் நிலையில்தான். இந் நிலையை யடையும் மனிதன் (அவனைத்தான் ஸ்ரீ அரவிந்தர் அதிமானுடன் **(Superman)** என்கிறார்). இவ்வுலக வாழ்க்கையில் இருந்துகொண்டே பரமனுடன் ஐக்கியப்பட்டு பரமனது உணர்வில் நிரந்தரமாக நிலைத்திருப்பான். இந்த விஞ்ஞானமே மக்கட் குலத்திற்கு ஒரு புது லட்சியத்தையும் வழியையும் காட்டுகின்றது. இதுவே நம்முடைய வாழ்க்கையின் புதிர்களை விண்டு இறைவன் படைப்பின் முழு இரகசியத்தையும் புலப்படுத்துகின்றது. இதுவே, ஒன்றையும் பன்மையையும் தன் பூரண, ஒருமைப்பட்ட நிலையில் இயையும்படிச் செய்து இவ்வுலக வாழ்க்கைக்கு ஒரு புதிய உருவமும் பொருளுந் தருகின்றது. இந்த நிலையில், மண்ணுக்கும் விண்ணுக்கும் உள்ள பிளவு நிரவப்பட்டு, அவை இரண்டும் இரண்டறக் கலக்கின்றன. இந்த விஞ்ஞானத்திற்குக் கீழ்ப்பட்ட உண்மைகளெல்லாம் அரைகுறையானவையே. ஈசுவர தரிசனமே அவைகளின் லட்

சியம். அவை உலக வாழ்வைக் கொஞ்சம் திருத்த முடியுமே யொழிய, முற்றிலும் தெய்வ மயமாக மாற்ற முடியாது. இவ் விஞ்ஞானத்தைப்பற்றி வேதகாலத்து ரிஷிகள் பேசியும், தனித்து அந் நிலைக்கு உயர முயன்று மிருக்கின்றனர். ஆனால், உலகம் உய்வதன் பொருட்டு அதைக் கீழே கொண்டுவந்து அதை உலகின் நிரந்தரமான பாகமாக நிறுத்தவில்லை. உபநிடதத்தின் சில கானங்களில் தூல உடலுடன் விஞ்ஞானத்தை அடைய முடியாதென வும் கூறப்பட்டிருக்கிறது. இக்குறையினால்தான், நமது பாரத நாட்டின் பெரும் பகுதியான ஆன்ம முயற்சி யெல் லாம் மாயா வாதத்தில் முடிந்தது.

## அதிமானுஷமே லட்சியம்

இத்தகைய உன்னதமான விஞ்ஞான உணர்வைக் கீழே கொண்டுவந்து பூமியின் உணர்வையே அடியோடு மாற்றுவதும், மன உணர்வில் கட்டுப்பட்டுள்ள மானிடர்களை இவ்வுலகிலேயே 'விஞ்ஞான' உணர்வுபெற்ற அதி மனிதர்களாக (**Supermen**), அதாவது தெய்வ மனிதர் களாக விளங்கச் செய்வதுமே, ஸ்ரீ அரவிந்தரது யோகத் தின் பிரதான லட்சியம். இத்தகைய விஞ்ஞான உணர்வை முதலில் சிலரிடத்திலாவது நிலைக்கச் செய்து உலகம் உய்வ தற்கு ஒரு வழி காட்டுவதே ஸ்ரீ அரவிந்தர் மேற்கொண் டிருக்கும் விசேஷ காரியமாகும். மக்களில் ஒரு சிலரே னும் உருமாறுதலடைந்து இவ்வுயரிய உணர்வு நிலையை எய்தினால், மக்கட்குலம் முழுதுமே இதனை நாளடைவில் எய்துவது சாத்தியமாகு மன்றோ?

## அதிமானுடனும் அவதார புருடனும்

அதிமானுடன் யார்? எவனிடம் நாம் மேலே சொன்ன அபூர்வமான விஞ்ஞான உணர்வும் சக்தியும் இறங்கி மனம், உயிர் உடல் ஆகிய யாவும் தெய்விக உரு மாறுத லடைந்துள்ளனவோ, அவனே அதிமானுடனா வான்.

அதிமானுஷன் அவதார புருஷனைபோலத் தாற்காலிக மாக இப்புவிக்குவந்து குறித்த பணியைச் செய்துவிட்டுப் போய்விடுகிறவனல்லன். உலகத்தை மாற்றி உலகில் நிரந்

தரப் பிரஜையாக வாசஞ் செய்யவே அவன் வருகிறான். மனிதன் அதிமானுஷனவதே பரிணாமத்தின் குறியும் ஆண்டவனின் திருவுள்ளமுமாகும். இறைவன் சிருஷ்டிக்கும் உலகின் பரிணாமத்திற்கு வேறு யாதொரு குறியும் இருக்கமுடியாது. அதிமானுஷன் தானடையும் "விஞ்ஞான" உணர்வு நிலையில் மனிதனையும், தேவனையும் ஒருங்கே இருப்பான்.

மானுடன் இவ்வண்ணம் உருமாறுதலடைவது சாத்தியமா? இறைவன் திருவருள் இருப்பின், மனிதனும் அதற்கு அனுசரணையாக உண்மையாக முயலின் அவனால் அடையப்பெறாதது ஒன்றுமே கிடையாது. இப்பரிணாமம் சிருஷ்டியின் குறியேயாயின் இறைவன் திருவருளுக்கும் ஆதரவுக்கும் குறைவு ஏது?

இதுவே, சுருக்கமாக, ஸ்ரீ அரவிந்தரின் விஞ்ஞான தத்துவமும் விஞ்ஞானயோக சாதனையும் ஆகும். இவ் விஞ்ஞான யோக சாதனையே மண்ணுலக வாழ்க்கையை விண்ணுலக வாழ்க்கையாக்கும் ஆற்றல் வாய்ந்தது. இதுவே நம்மை எதிர்நோக்கியுள்ள மானிடப் பரிணாமத்தின் உச்ச நிலைக்கு வழிகாட்டுவது.

இதுவரை கூறியதிலிருந்து ஸ்ரீ அரவிந்தரது யோகம் இதுவரையில் எவராலும் கையாளப்படாத ஒரு புதிய மார்க்கத்தைக் காட்டுகிறது என்பது தெளிவாகிறது. உலகம் அவரது வழி நின்று உய்யுமாறு இறைவனைப் பிரார்த்திப்போமாக!

# கூ. ஸ்ரீ அரவிந்த ஆசிரமம்

ஆத்ம ஞானம் பெறவேண்டி ஒரு குரு அல்லது ஆசாரியனைச் சரணடைந்து, அவருடன் வாசம் செய்யும் சீடர்களின் கூட்டமே ஆசிரமம் எனப்படுவது. இத்தகைய ஆசிரமங்கள் பண்டைப் பாரத நாட்டில் மலிந்து கிடந்தன. ஆன்ம ஒளி பெற்ற பல முனிபுங்கவர்கள் வனாந்தரங்களில் ஆசிரமங்கள் அமைத்துக்கொண்டு, தங்களை நாடி வந்த சீடர்களை வரவேற்று, அவர்களுக்கு வாழ்க்கையின் ரகசியங்களையும், கடவுளைப் பிரத்யட்சமாகக் கண்டு உய்யும் வகையையும் போதித்து வந்தனர். இன்றும் இவ்வித ஆசிரமங்கள் ஆங்காங்கு இருந்து வருகின்றன.

சமீபத்தில் நமது நாட்டில் சிறியவும் பெரியவுமான பலவித ஆசிரமங்கள் கிளம்பியிருக்கின்றன. சிலவற்றில் ஆசிரம வாசிகள் சதா தியானம் அல்லது தவம் செய்வதிலேயே ஈடுபட்டிருக்கின்றனர். சில, யோக சாஸ்திரங்களையும், நியமங்களையும் பாடம் சொல்லி மாணவர்களைப் பயிற்சி செய்யும் கலாசாலைகளாக இருக்கின்றன. சில வெறும் சமயக் கூட்டமாகவோ மடமாகவோ இருக்கின்றன. இன்னும் சிலவற்றில், நூல் நூற்றல், தறிகளில் நெய்தல் முதலிய தொழில்களே பிரதானமாக நடைபெறுகின்றன. வேறு சில, சன்மார்க்க வாழ்வைப் போதிப்பதுடன், கஷ்ட நிவாரணம், பஞ்ச நிவாரணம், நோயாளிகளுக்குப் பணிவிடை செய்தல் முதலிய சமூகத் தொண்டுகள் ஆற்றிவருகின்றன.

### அரவிந்த ஆசிரமத்தின் தனிச்சிறப்பு

ஸ்ரீ அரவிந்தரது ஆசிரமம் ஒரு தனி ரகமான ஆசிரமமாக விளங்குகிறது. அது மேற்குறித்த சில ஆசிரமங்களைப் போல ஒரு சமயக்கூட்டமோ, மடமோ, சமூக சேவை, பொருளுற்பத்தி முதலியவைகளில் ஈடுபட்டுள்ள ஸ்தாபனமோ, யோக சாஸ்திரங்களையும், நியமங்களையும் பகட்டுடன் பாடங்கள் பிரசங்கங்கள் மூலமாகப் பயிற்சி யளிக்கும் கலாசாலையோ அன்று. அத்தியாத்ம வாழ்வில், பரி

பூரணமாக ஈடுபடுவதற்கு அந்தராத்மாவின் அழைப்பு பெற்று, ஸ்ரீ அரவிந்தரின் அத்தியாத்ம தத்துவத்தை அடிப் படையாகக் கொண்ட அவரது பூரண யோக முறையைப் பின்பற்றவும், அவர் கட்டுப்பாடுகளுக் கிணங்கி அவரது பார்வையின்கீழ் யோக வாழ்வை நடத்தவும் உள்ளங் கொண்டு, அவரைக் குருவாகச் சரணடைந்து, அவரால் அங்கீகரிக்கப்பட்டு, ஆதரிக்கப்படும் சீடர்களின் கூட் டமே ஸ்ரீ அரவிந்தரது ஆசிரமமாகும்.

அது, நாடு, சமயம், சமூகம், அரசியல், கைத்தொழில் இவைபோன்ற எவ்வித நோக்கிலும் சம்பந்தப்படாத, கலப்பற்ற ஒரு யோகாசிரமமாகும். உள் ஜீவனின் வளர்ச்சி யொன்றே அதன் பிரதானக் கருத்து. உணர்வை விரிவுபடுத்திக் கொள்ளவும், கடவுள் உண்மைக்கு உள் ளத்தைத் திறக்கவும், விருப்பங்களை வெல்லவும், ஒவ்வொரு மனிதனிடமும் உள்ளே மறைந்து நிற்கும் பரமனைக் காண வும், மனிதனின் சாதாரண இயற்கையை உருமாறுதல் செய்யக் கூடிய, மனோதீதமான, உபநிடதங்கள் கூறும் ‘விஞ்ஞான’ உணர்வை **(Supramental Consciousness)** இறங்கச்செய்து, அதைத் தன்னுள் வளர்த்து விருத்தி செய்யவும், இயற்கை அன்னையின் உயர்ந்த லட்சியமும், இறுதியான பரிணாமமுமான அதிமானுஷம் அல்லது தேவ குலம் இவ்வுலகில் நிரந்தரமாக ஸ்தாபிக்கப்படுவதற்கு வேலைசெய்யவும், அங்கு சாதகர்கள் பயிற்றப்படுகின் றனர்.

சுருங்கக்கூறின், ஸ்ரீ அரவிந்த ஆசிரமமானது ஸ்ரீ அரவிந்தரின் யோக வழியின் மூலமாக, பூரண தெய்வ வாழ்க்கையை அடைவதற்கு ஏற்பட்ட ஒரு அத்தியாத்மப் பயிற்சிக்கூடமே யாகும்.

## ஆசிரமத்தின் ஆரம்பம்

ஸ்ரீ அரவிந்தர் 1908-1909-ல் அலிபூர் சிறையில் பெற்ற யோகானுபவங்களையும், அதன் பின் தாம் செய்து வந்த யோகசாதனைகளையும் பரிபூரணப்படுத்தும் பொருட்டு வங் காளப் பொதுவாழ்வைத் துறந்து, 1910-ல் ஏப்ரல் 4-ந் தேதி புதுச்சேரியை யடைந்து அங்கு ஏகாந்தவாசம் செய்கை

யில், அவருடைய அனுபவங்கள் மேன்மேலும் விரிந்து பூரணமடைந்தன. அது சமயம் அவரது வீட்டில், 4 அல்லது 5 சீடர்கள் அவருடன் வசித்து வந்தனர். கொஞ்ச காலத்திற்குப் பின், மற்றும் சிலர் அவரது அத்தியாத்ம மார்க்கத்தைப் பின்பற்ற வந்தனர். 1920-ல் ஸ்ரீ அன்னை அவரைச் சேர்ந்த பிறகு, சீடர்களின் தொகை நாளுக்கு நாள் அதிகரிக்கவே, உன்னதமாக வாழ்க்கையின் பொருட்டு சர்வத்தையும் துறந்து, அவரைச் சேர்ந்தவர்களின் சம்ரட்சணைக்காகவும், சமூகமாகச் சேர்த்து அவர்களுக்கு வழிகாட்டவும், தக்க ஏற்பாடுகள் செய்வது அவசியமாயிற்று. அதன் பொருட்டும், பொதுவாக ஸ்ரீ அரவிந்தரின் அத்தியாத்ம வேலைக்காகவும் அவருக்களிக்கப்பட்ட பணமும், அவரைச் சரணடைந்த சாதகர்கள் அவருக்கு அர்ப்பணம்செய்த சொத்துக்களும், இவ் வழியில் செலவழிக்கப்படலாயின. அவ்வப்போது ஏற்பட்ட தேவைக்குத் தக்கபடி சில வீடுகள் விலைக்கும் குடிக்கூலிக்கும் எடுக்கப்பட்டன.

அவ் வீடுகளை ஒழுங்காக வைத்துக் கொள்ளவும் பழுது பார்க்கவும் சுகாதார வாழ்க்கை நடத்தவும், நாட்டின் பல பாகங்களிலிருந்தும், பல வெளி நாடுகளிலிருந்தும் வந்தவரும், பல்வேறு அந்தஸ்து, நிலைமைகளில் இருந்தவருமான சாதகர்களை ஒன்று சேர்த்து, வழிநடத்தவும் நாளடைவில் பல திட்டங்கள் வகுக்கப்பட்டன. முன்னேற்பாடும், குறித்த ஆரம்பமுமின்றி இவ்வண்ணம் நாளடைவில் அவரைச் சுற்றி வளர்ந்த ஆசிரமத்தின் ஆரம்பம் இதுவேயாகும்.

### சாதகர்களின் கூட்டம்

இன்று ஸ்ரீ அரவிந்தரது யோகத்தைத் தங்களது ஜீவிய வேலையாக எடுத்துக்கொண்டு, சாசுவதமாக ஆசிரமத்தில் தங்கிச் சாதனை செய்பவர்கள், ஆண் பெண் பாலர்கள் உள்பட, சற்றேறக்குறைய 300 பேர்கள் இருக்கின்றனர். இவர்களிற் பெரும் பாலோர் வங்காளத்திலிருந்தும், குஜராத்திலிருந்தும் வந்தவர்கள். சுமார் இருபத்தைந்து தமிழர்களும் பத்து ஆந்திரர்களு மிருக்கின்றனர். மற்றவர்கள் பீகார், ஐக்கிய மாகாணம், பாஞ்சாலம், ஹைதராபாத்,

கன்னடம் முதலிய பிராந்தியங்களிலிருந்து வந்தவர்கள். ஐரோப்பியர் சிலரும் இருக்கின்றனர். மேலும், இந்நாட்டிலிருந்தும், வெளி நாடுகளிலிருந்தும் பலர் முன்னதாக அனுமதி பெற்று, சில மாதங்கள் ஆசிரமத்தில் தங்கிச் சாதனை செய்வதுண்டு. ஸ்ரீ அரவிந்தரின் பக்தர்கள் பலர், அனுமதி பெற்று, வருஷம் மும்முறை அவர் தரிசனமளிக்கும் நாட்களில் வந்து, தரிசனம் செய்துவிட்டுச் செல்வதுமுண்டு.

## புதிய சாதனை முறை

ஸ்ரீ அரவிந்தரின் யோகம் வேதாந்தத்தையே அடிப்படையாகக் கொண்டிருப்பதால், பண்டையோக முறைகளின் முக்கியாம்சங்களெல்லாம் இங்கும் அவசியமாயிருக்கின்றன. விருப்பங்களையும் பற்றுதல்களையும் வெல்வதும், உடலின் தேவைகள், கவர்ச்சிகள், விலங்குணர்ச்சி, இவைகளை யடக்கி ஆள்வதும் முக்கியம். ஆனால், உள்ளொளியைப் பெருக்குவதன் பொருட்டு ஊனை வாட்டி உருக்குவதுபோன்ற கடினமான புறத்துறவு வேண்டியதில்லை. ஜீவன் விரிவடைந்து, வளர்ந்து, தன்னையும் அகண்ட வஸ்துவையும் உணரவும், பிரபஞ்ச உணர்வைப் பெறவும், ஜீவனின் எல்லா பாகங்களும் திறந்து தெய்வ ஒளியில் மலரவும் வேண்டும். இது உண்மை, இது வெறும் தோற்றம், எனப் பகுத்தறியும் தூய மனத்தால் செய்யப்படும் ஞானயோகம்; பக்தி, அன்பு, ஆன்ம சமர்ப்பணம், இவைகளுடன் கூடிய பக்திமார்க்கம்; சுயநலக் கருத்தின்றி, சித்தத்தை உண்மைபால் திருப்பி, உண்மைப்பொருளின் ஊழியத்தில் வாழ்வை அர்ப்பணம் செய்யும் கரும மார்க்கம்—இம்மார்க்கங்களின் அம்சங்களெல்லாம் ஸ்ரீ அரவிந்த யோகத்தில் சாதகர்கள் பரிபூரண அனுபவம் பெறுவதற்காக அவரவர்களின் இயல்புக்குத் தக்கபடி கையாளப்படுகின்றன.

## தெய்வ ஆர்வம்

ஸ்ரீ அரவிந்த யோக சாதனை, வெறும் மன உபதேசங்களையோ, குறிப்பிட்ட நியமம், நிஷ்டை, மந்திரங்களையோ, சார்ந்திருக்கவில்லை. பக்திப் பரவசத்தை வெளிப்படக் காட்டும் பஜனை, ஆடல், பாடல், அழுகை, சிரிப்பு முதலியவைகளுக்கு இச்சாதனையில் இடமில்லை.

கடவுள் தேட்டமும், உள்ளுக்குள் சதா எரிந்துகொண்டிருக்கும் தெய்வ ஆர்வமும், ஏகாக்கிர சிந்தையுந்தான் முக்கியமாக வேண்டுவது. தெய்வ சக்தியின் சாந்நித்தியத்திற்கும், அவள் நமது ஆதாரத்தில் இறங்கி நம்மை வழி நடத்திச் செல்லுவதற்கும் நமது உள்ளத்தைத் திறந்து வைத்துக்கொண்டு அவளது அருளை நாடி இடைவிடாமல் அழைக்கவேண்டும். கடவுளை நோக்கிச் செல்லும் இயக்கங்களைத் தவிர மற்ற எந்த இயக்கங்களுக்கும் உள்ளத்தில் இடம் கொடுக்காமல் உஷாராக இருக்கவேண்டும். பரிபூரண அமைதியுடன் சாந்தமாக இருக்கவேண்டும்.

மன அமைதியுடனிருந்து உள்ளுக்குள்ளே உள்ள சைத்திய புருஷனைக் (Psychic Being) கண்டுபிடித்து, அதையே முன்னுக்குக் கொண்டுவந்து, நமது மனம், உயிர், உடல், எல்லாம் அதன் பரிபூரண ஆதிக்கத்திற்கு இணங்கும்படிச் செய்யவேண்டும். கடவுளிடத்திலும், குருவினிடத்திலும், யோகத்திலும் பரிபூரண நம்பிக்கை கொண்டு, என்றும் தளராத ஆர்வத்தை மேன்மேலும் எழுப்பிச் சிறிது பெரிது என்ற வித்தியாசமின்றி நாம் புரியும் எல்லா வினைகளையும், நம்முடைய எல்லா எண்ணங்களையும், இச்சைகளையும், உணர்ச்சிகளையும், எல்லாவற்றையும் பகவானுக்கே அர்ப்பணம்செய்து கடவுள் உணர்வைப் பெருக்கிக்கொண்டே போகவேண்டும். இச்சாதனை நடக்க நடக்க உள்ள மலர்ச்சியும், ஆன்ம அனுபவமும், அன்னையின் அருளும் தவறுமல் ஏற்படுகின்றன. இவையேற்பட ஏற்பட, விஞ்ஞான சக்தியும் கீழிறங்கி நம்மை மேன்மேலும் மாற்றி கடவுள் மயமாக்குகிறது. இந்த யோக சாதனையில் இவ் வுரு மாறுதலே மிகவும் பிரதானமானது.

## தியானமும் தரிசனமும்

சாதகர்கள் குறித்த காலங்களில் ஸ்ரீ அன்னையைத் தரிசித்து, அவர் நடத்தும் தியானங்களில் கலந்துகொண்டு அவரை வணங்கி அருள் பெறுகின்றனர். ஆனல், அவர்கள் ஸ்ரீ அரவிந்தரை வருஷத்தில், ஸ்ரீ அன்னை பிறந்த நாள் (பிப்ரவரி 21), ஸ்ரீ அரவிந்தர் பிறந்த நாள் (ஆகஸ்டு 15), ஸ்ரீ அன்னை இறுதியாகப் புதுவைக்கு வந்த நாள் (ஏப்ரல் 24)

ஸ்ரீ அரவிந்தர் தமது அத்யாத்ம வாழ்வில் ஒரு மகானுபவத்தை யடைந்த நாள் (நவம்பர் 24), இந் நான்கு தினங்களில்தான் தரிசித்து அவரது அருளை நேராகப் பெற முடியும். ஆயினும், சாதனை விஷயமாகவும், அத்தியாத்ம விஷயமாகவும், சாதகர்கள் விடும் வினுக்களுக்கு ஸ்ரீ அரவிந்தர் கடித மூலமாக விடையளிப்பதுண்டு. இவ்வண்ணம் அவர் அளித்த விடைகளினுடையவும் அவ்வப்போது செய்துவந்த உபதேசங்களினுடையவும் முக்கிய பாகங்கள் "ஸ்ரீ அன்னை," "இவ்வுலகின் புதிர்," "யோகச் சுடரொளி", "யோக ஆதாரங்கள்" என்னும் நூல்களில் வெளிவந்துள்ளன. இவை யோகமார்க்கத்தில் செல்ல விரும்புவோருக்குப் பெரிதும் துணையாயிருக்கக் கூடியவை.

### ஜாதி, மதம், குடும்பம் இல்லை

ஆசிரமத்தில் ஜாதி மத வித்தியாசங்கள் கிடையா. சாதகர்கள் பல ஜாதி, மதம், நாடுகளிலிருந்து வருகின்றனர். ஆசிரமத்தைச் சேர்ந்தவுடன் அவர்கள் எல்லோருக்கும் ஸ்ரீ அரவிந்தரின் சீடர்கள் என்ற ஒரே பதவிதான் உண்டு.

ஆசிரமத்தில் குடும்ப வாழ்க்கையோ, காம இச்சைகளை வளர்க்கக்கூடிய உறவோ, சம்பந்தமோ கிடையாது. ஸ்ரீ அரவிந்தருடையவும் ஸ்ரீ அன்னையுடையவும் மூலமாகவே சாதகர்களுடைய எல்லாச் சம்பந்தங்களும் ஏற்படுகின்றன.

### ஸ்ரீ அன்னையின் பூரண பொறுப்பு

அந்தராத்மாவின் அழைப்புப்பெற்று ஸ்ரீ அரவிந்தரை நாடி வந்து, அவரால் சீடர்களாக அங்கீகரிக்கப்பட்ட சாதகர்களின் உடல் நலம், அத்தியாத்ம நலம் முதலிய எல்லாவற்றிற்கும் ஸ்ரீ அரவிந்தரும் ஆசிரமத்து அன்னையுமே முழுப் பொறுப் பேற்றுக்கொண்டு, அவரவர்களின் உட்புற நிலைகளுக்கும், தேவைகளுக்கும், ஆத்ம வளர்ச்சிக்கும் ஏற்ப, அவரவர்களைப் பல்வேறு வழிகளில் நடத்தி வருகின்றனர். ஆசிரமவாசிகளும், சிறிதிலும் பெரிதிலும், எவ்விஷயத்திலும், ஸ்ரீ அரவிந்தருடையவும் ஸ்ரீ அன்னையினுடையவும் திருவுள்ளத்தின் படியே தத்தமக்குரிய பணி செய்து அவர்களது அருளைப் பெறுகின்றனர்.

## ஆசிரமப் பணிகள்

ஆசிரம வாசிகள் ஒவ்வொருவருக்கும் ஸ்ரீ அன்னையால் குறிப்பிடப்பட்ட ஒரு பணியுண்டு. அதை அவர்கள் நிலைமைக்கும் வேலைக்கும் தக்கபடி சேர்ந்தோ தனித் தனியாகவோ செய்கின்றனர். சிலர், ரொட்டி சுடுதல், மடைப்பள்ளி, போஜன சாலை, மருந்து சாலை, சலவை, சோப்பு செய்தல், காகிதம் செய்தல் முதலியவை சம்பந்தமான வேலைகளைச் செய்கின்றனர். சிலர், தோட்டங்களைப் பயிர் செய்கின்றனர். இன்னும் சிலர், கட்டட வேலைகள், வேலைக்காரர்களைக் கண்காணித்தல் முதலியனவும், ஆசிரமத்தின் பொது வாழ்வுக்குரிய பலவிதமான வேலைகளையும் செய்கின்றனர். வேறு சிலர், சித்திரம், சங்கீதம், பூத்தையல் முதலிய நுண்கலைகளில் கவனஞ் செலுத்துகின்றனர். மேலும், சாதகர்கள் ஓய்வு நேரங்களில் கலை, இலக்கியம், சாத்திரம், இவை பற்றிய நூல்களைப் படிப்பதிலும், பல மொழிகளைக் கற்பதிலும் ஈடுபடுகின்றனர். சமீபத்தில், ஆசிரமத்தில் குடும்பத்தோடு சேர்ந்த சாதகர்களின் குழந்தைகளுக்காக பள்ளிக்கூடமொன்றும் நிறுவப்பட்டிருக்கிறது.

## வாழ்க்கையைத் தெய்விக வாழ்க்கையாக்கல்

இவ் வாசிரமத்தில், வாழ்க்கையானது ஒரு விழுமிய கலையாகப் பயிலப் படுகின்றது. இங்கு, வாழ்வை யெல்லாம், கடவுளின் அழகு, இசை, சம்பூரணம், தூய்மை, வலிமை முதலியன நிரம்பியதாக ஆக்கவும், உன்னதமான 'விஞ்ஞான' உண்மையையும் உணர்வையும் முதலில் சிலரிடத்திலாவது நிலைக்கச்செய்து, உலகம் உய்வதற்கு வழிகாட்டவும், பெரியதொரு முயற்சி செய்யப்பட்டு வருகிறது.

# அனுபந்தம்

### ஆசிரமத்தைப்பற்றி ஸ்ரீ அரவிந்தரது அறிக்கை

ஆசிரமத்தைப்பற்றி அன்னியர்களிடையே சில தவருன அபிப் பிராயங்கள் இருந்து வந்ததைக் கண்டு, அவைகளை விலக்குவது அவசியமெனக் கருதி, ஸ்ரீ அரவிந்தர் 1934, பிப்ரவரி, 16-ந் தேதி, விளக்கமாக ஒரு அறிக்கை வெளியிட்டார். அதில் அவர் கூறுவ தாவது :

ஆசிரமம் என்பது அத்தியாத்ம தத்துவத்தைப் போதிக்கும் ஒரு குரு அல்லது ஆசாரியார் தம்மிடம் போதனைக்காகவும் சாதனைக் காகவும் வருவோரை ஏற்று அவர்கள் தங்குவதற்குத் தரும் வீட்டை அல்லது வீடுகளைக் குறிக்கும். ஆசிரமம் என்பது ஒரு சங்கமோ, சமயக் கூட்டமோ, மடமோ அல்ல. அது மேலே கூறப்பட்டதைத் தவிர வேறில்லை.

ஆசிரமத்திலுள்ள எல்லாம் ஆசாரியருக்கே சொந்தமானவை. அவரிடம் பயிலும் சாதகர்களுக்கு எவ்விஷயத்திலும் எத்தகைய அதிகாரமோ, உரிமையோ, பாத்தியமோ கிடையாது. அவர்கள் இருப்பதும் வெளியே போவதும் எல்லாம் ஆசாரியரது விருப்பம். அவர் பெறும் பணம் அவரது சொத்தேயல்லாது ஒரு பொது ஸ்தா பனத்தைச் சேர்ந்ததல்ல; பொது ஸ்தாபனம் என்பது ஒன்றில்லை யாதலால், அது ஒரு வைப்போ நிதியோ ஆகாது. இத்தகைய ஆசிர மங்கள் இந்தியாவில் கிறிஸ்து பிறப்பதற்குப் பல ஆண்டுகள் முன் னேயே இருந்திருக்கின்றன; இன்னும் பல இருக்கின்றன. எல்லாம் ஆசாரியரை அடுத்திருக்கின்றது. அவரது பதவியை வகிக்க வேருெரு ஆசாரியர் இல்லாவிடில், அவரது ஆயுளுடன் எல்லாம் முடிவடைகிறது.

புதுவை ஆசிரமம் பின்கண்ட மாதிரி ஆரம்பமாயிற்று. முத லில், ஸ்ரீ அரவிந்தர் புதுவையில் தமது வீட்டில் தங்கின ஒரு சில ருடன் வசித்து வந்தார். பிறகு மற்றும் சிலர் அவரைச் சேர்ந்தனர். சில ஆண்டுகளுக்குப்பின், ஸ்ரீ அன்னை 1920-ல் அவரைச் சேர்ந்த பிறகு, அவர்களது தொகை மிகவும் அதிகரிக்கவே, வந்தவர்களுக் காகத் தக்க ஏற்பாடு செய்வது அவசியமாயிற்று. அதற்காக அவ் வப்போதேற்பட்ட தேவைக்குத் தக்கபடி சில வீடுகள் விலைக்கும் குடிக்கூலிக்கும் எடுக்கப்பட்டன. அவ் வீடுகளை ஒழுங்காக வைத்

துக் கொள்ளவும், பழுது பார்க்கவும், தக்கபடிச் சுகாதார வழியில் வாழ்க்கை நடத்தவும் திட்டங்கள் செய்ய வேண்டியதாயிருந்தது. இவை யெல்லாம் ஸ்ரீ அன்னை தமது தனி உரிமையிலும், அவை களைப் பெருக்கவோ மாற்றவோ அவருக்குப் பூரணமாயுள்ள சுயேச்சைப்படியும் செய்யப்பட்ட விதிகளாகும். அவைகளில் பொதுத்தன்மை பொருந்தியது யாதொன்றுமில்லை.

ஆசிரம வீடுகளெல்லாம் ஸ்ரீ அரவிந்தர் அல்லது ஸ்ரீ அன்னைக்குச் சொந்தமானவை. செலவு செய்யப்படும் பண மெல்லாம் ஸ்ரீ அரவிந்தரையோ ஸ்ரீ அன்னையையோ சேர்ந்தவை. ஸ்ரீ அரவிந்தரின் வேலைக்கெனப் பலர் பணம் கொடுத்திருக்கின்றனர். இங்குள்ள சிலர் தங்கள் சொத்துக்களைக் கொடுக்கின்றனர். ஆனால் அவர்கள் அவைகளை ஸ்ரீ அரவிந்தருக்கோ ஸ்ரீ அன்னைக்கோ கொடுக்கின்றனரே யொழிய பொது ஸ்தாபனம் என்னும் முறையில் ஆசிரமத்திற்கன்று. ஏனெனில், அத்தகையப் பொது ஸ்தாபனமென்பதே இல்லை.

ஆசிரமம் ஒரு சங்க அமைப்பன்று; சங்க அமைப்பிற் குரிய நிர்வாக அங்கத்தினரோ, உத்தியோகஸ்தர்களோ, பொதுச் சொத்தோ கிடையாது. பொதுத் தன்மையைக் காட்டும் ஆலோசனைச் சபையோ, நிருவாகக் கமிட்டியோ, ஊதியத்தை உத்தேசித்து நடத்தும் தொழிலோ கிடையாது.

ஆசிரமம் ஒரு அரசியல் ஸ்தாபனமன்று. இங்குள்ளவர் அரசியல் இயக்கங்களுடன் எத்தகையச் சம்பந்தத்தையும் விட்டு விடுகின்றனர். சமயம், அரசியல், சமூகம், இவை சம்பந்தமான எவ்விதப் பிரசாரத்தையும் அவர்கள் செய்யக்கூடாது.

ஆசிரமம் சமய சம்பந்தமானதொரு சங்கமன்று. இங்குள்ளோர் பல சமயங்களினின்றும் வருகின்றனர். சிலர் ஒரு சமயத்தையும் சேர்ந்தவர்களல்லர். சமய நம்பிக்கைகளோ, கோட்பாடுகளோ, சமய நிருவாக சபையோ, எதுவும் கிடையா. உணர்வை விரிவு படுத்தவும், உண்மைக்கு உள்ளத்தைத் திறக்கவும், இச்சைகளை வெல்லவும், ஒவ்வொரு மனிதனிடமும் உள்ளே மறைந்து நிற்கும் பரமனையும் தெய்வ உணர்வையும் கண்டு பிடிப்பதற்கும், இயற்கையின் உயர்ந்த பரிணமம் சித்தி யடைவதற்கும், ஸ்ரீ அரவிந்தரின் உபதேசங்களும், மனத்தை ஒருமுகப்படுத்துவது, தியானம் செய்வது போன்ற சில அத்தியாத்மப் பயிற்சிகளுமே இங்கு வழங்குகின்றன.

ஸ்ரீ அரவிந்தர் ஒரு குறிப்பிட்ட சமயத்தை வளர்க்கவோ, பழைய சமயங்களை ஒன்றாகச் சேர்க்கவோ, அல்லது புதிய சமய மொன்றை அமைக்கவோ கருதவில்லை. ஏனெனில், இவைகளில் எதுவாயிருப்பினும் சரி, அது அவரது பிரதான கருத்தினின்று முற்றிலும் மாறுபட்டுச் செல்வதாகும். உள் ஜீவனின் வளர்ச்சி யொன்றே அவரது யோகத்தின் கருத்து. அதனாலேயே, இந்த யோகத்தைப் பின்பற்றும் ஒவ்வொருவனும் நாளடைவில் எல்லா வற்றிலுமுள்ள ஒரே பரமனைக்கண்டு, மனித இயற்கையை உரு மாறுதல் செய்யக்கூடிய, மனாதீதமானதொரு உணர்வைத் தன்னுள் வளர்த்து விருத்தி செய்து கொள்ளமுடியும்.

சக்தி பிரஸ் லிமிடெட் (சாந்தி பிரஸ்), சென்னை